# கல்கி

KALKI
12.3.2000
ரூ. 5.00

சுடச்சுட
சொக்கர்
பேட்டி!



அழகு இருக்கு;
திறமை இருக்கு;
முன்னேற இன்னும்
என்ன வேணும்?
'மகாநதி'
ஷோபனாவுக்கு
இந்தப் பிரச்னை
இல்லை.
மற்றவர்களுக்கு?

## மும்பையில் களைகட்டும்

# அழகு நிலையம்!

(அ crossed out, ப written above)

சேலம் மற்றும் ஈரோடு
மக்களின் வசதிக்காக

## தமிழக அரசின் நிதி நிறுவனம்

# 'பவர் ஃபைனான்ஸ்'

## வழங்கும் ஓர் அரிய வாய்ப்பு!

# டெபாசிட் திரட்டும் முகாம்

### சேலம்

இடம் : ஸ்ரீ வாசவி சுபிக்ஷா ஹால், மேட்டுத்தெரு
(ஸ்ரீ சுகவனேசுவரர் கோயில் அருகில்),
சேலம் - 636 001.
தொலைபேசி : 416494

நாள் : 9-3-2000 முதல் 11-3-2000 வரை

நேரம் : காலை 9.00 மணி முதல்
மாலை 7.00 மணி வரை

### ஈரோடு

இடம் : பஸ் மஹால், 35, அண்ணாமலை நகர்,
மேட்டூர் ரோடு, ஈரோடு - 638 011.
தொலைபேசி : 211030

நாள் : 12-3-2000 முதல் 14-3-2000 வரை

நேரம் : காலை 9.00 மணி முதல்
மாலை 7.00 மணி வரை

வாருங்கள், இந்த வாய்ப்பை பயன்படுத்தி வாழ்வில் வளம் காணுங்கள்!




## தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

84, டிடிகே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894
மின் அஞ்சல் : powerfin@md3.vsnl.net.in
Visit us at : www.tnpowerfinance.com www.tninfrafinance.com

"Also available on the Internet" www.tn.gov.in /
www.chennaionline.com / www.aaraamthinai.com



# நம்பர் சேவகர்!

பி. வினாயகச் செல்வன். அரசாங்க சம்பளம் வாங்காத அரசு வேலை பார்க்கும் மனிதர்.

மண்டை காயுதா? மதுரையிலேயே ரொம்ப டிராபிக்கான ஏரியான்னா அது கீழவாசல்தான். கூட்டம் எப்போதும் "I"க்கு அடுத்த எழுத்தை ரெண்டு தடவை போட்ட மாதிரியிருக்கும் (JJ).

ஜவுளிக் கடை, பேக்டரிகளில் வேலை பார்த்து வந்த வினாயகச் செல்வனுக்கு அந்த வேலைகளில் எல்லாம் திருப்தியே இல்லை. சின்ன வயசில 'கள்ளன் போலீஸ்' விளையாட்டு பிடிச்சு, அதிலே போலீஸ் வேலையில் லயிச்சு...

35 வயசுல யாரு போலீஸ் வேலை தருவாங்க? விடவில்லை விநாயகச் செல்வன். சம்பளம் (கிம்பளமும்) வாங்காத டிராபிக் போலீஸாக மதுரை கீழவாசல் பகுதியில் ஆஜரானார். கடந்த நாலு வருடங்களாக கீழவாசலில் வாகனங்களை ஒழுங்குபடுத்தி வரும் பி. வினாயகச் செல்வன் சாப்பாட்டுக்கு என்ன செய்கிறார்?

"சேவை செய்யறவனுக்கும் வயிறுன்னு ஒண்ணு இருக்குதேங்க...? காலையில வீடு வீடா பேப்பர் போடுவேன். அதுல உள்ள வருமானம்தான்... அப்பா கிடையாது. அம்மாவும் தாய்மாமாவும்தான். அம்மாவும் மாமாவும் திட்டாத நாளே இல்லை. அதுலயும் எங்க மாமா அரசாங்க உத்தியோகத்தில இருக்கார். நான் இப்படி நடுரோட்டுல கையை காலை நீட்டிக்கிட்டு இருக்கிறதால அவரோட மானம் போகுதுன்னு நிறையமுறை திட்டினார். ஏதாவது வேலை பார்த்தாலாவது காசு கிடைக்கும்பார். காசு கிடைக்கலைன்னாலும் நாலு பேர் பாராட்டுறபோது வீட்டுல திட்டுறது எல்லாம் மறந்து உற்சாகம் வந்துடுதுங்க! திடீர்னு எந்த இடத்திலாவது டிராபிக் அதிகமாயிட்டா எனக்கு சொல்லி விடுவாங்க. சைக்கிளை எடுத்துக்கிட்டு பறந்து போய் ஒழுங்கு படுத்தி விடுவேன்.

"மதியம் வரை கீழவாசல் சிக்னல்ல நிப்பேன். அப்புறம் நிர்மலா ஸ்கூல் கிட்ட போயிடுவேன். நிர்மலா ஸ்கூலைத் தேர்ந்தெடுக்கக் காரணம், டீச்சர் டிரெயினிங், மெட்ரிகுலேஷன் பள்ளி, நர்சரி பள்ளின்னு அஞ்சாயிரம் புள்ளைங்க படிக்குதுங்க. கொஞ்சம் லேட்டாயிட்டா கூட 'விநாயகம் எங்கே?'னு டீச்சருங்க தேடிடுவாங்க. நான் போனாத்தான் பிள்ளைங்க பயமில்லாம கிராஸ் செய்வாங்க" என்கிறார்.

விநாயகச் செல்வனுக்கு இன்னும் திருமணமாகவில்லை.

"கல்யாணம் செஞ்சுக்கக் கூடாதுன்னு தீர்மானமா இருக்கேன். சேலையைக் கட்டிக்கிறதை விட சேவையைக் கட்டிக்கிறதுலதான் எனக்கு விருப்பம் அதிகம்" என்கிறார் உறுதியாக!

— குகம்பன்

# காசு போதுமா?

**பில்கேட்ஸ் ஆனாலும், பிச்சைக்காரர் ஆனாலும் பணம்தான் எல்லாருக்கும் கண்கண்ட சாமி. பணம் இல்லாததால் பலருக்குப் பிரச்னை; பலருக்குப் பணமே பிரச்னை.**

**கிடக்கட்டும்; உங்களுக்குப் பணம் போதுமான அளவு இருக்கிறதா என்று கண்ணில் பட்ட சிலரிடம் கேட்டு வைத்தோம்...**

**இதோ, டெல்லர் மெஷின் மாதிரி படபட பதில்கள் :**

தங்கவேல் *(பிச்சைக்காரர், வடபழனி முருகன் கோவில்) :*

**எ**ன்னயப் பாத்து இப்படியொரு கேள்விய கேட்டுபுட்டீங்க! இருந்தாலும் சொல்றேன். சன்னதி வாசல்ல உட்கார்ந்து தர்மம் கேக்குறதுனால நூத்துக்குப் பத்து பேர் காசு போடுறாங்க. நாலணா, எட்டணா, அபூர்வமா ஒரு ரூவா யாராவது போடுவாங்க. இப்பல்லாம் பத்து காசு யாரும் போடுறதில்ல. நாளு, கிழமையப் பொறுத்து ஒருநாளைக்கு 30 ரூபாயிலேர்ந்து 50 ரூபா வரைக்கும் கிடைக்கும். தினசரி 50 ரூபா கிடைக்காது!

முன்னாடி கோயில்ல போடுற சாப்பாட்டை வாங்கிச் சாப்பிட்டேன். ஆனா உடம்புக்கு அது ஒத்துக்கலை. அதனால மெஸ்ல அக்கௌண்ட் வெச்சி சாப்புடுறேன். மாசம் 750 ரூவா கட்டணும். ஊருல என் சம்சாரத்துக்கு மாசா மாசம் 300 ரூவா அனுப்புறேன். நானும் மூணு வருஷமா 200 ரூவா வாடகையில வீடு புடிச்சி தங்கணும்னு பாக்குறேன். ஒண்ணும் நடக்கலை. நா இப்புடி தாடியோட சன்னியாசி மாதிரி இருக்கிறதாலதான் காசு போடுறாங்க. கொஞ்சம் அசிங்கமா நாத்தத்தோட உக்காந்திருந்தா காசு போடாம போயிடுவாங்க. அதனால வேஷ்டிய சலவைக்கி போட்டுத்தான் கட்டுறேன். யாராவது என்னையும் - சம்சாரத்தையும் நல்ல சாப்பாடு குடுக்கற முதியோர் இல்லத்துல சேத்துவுட்டா தர்மம் கேக்குறதை வுட்டுருவேன்.

**பழனி** *(பிராந்திக் கடையில் உதவியாளர்):*

**கா**சு பத்தாமத்தான் பிராந்தி கடையில வேலைக்குச் சேர்ந்தேன்.

ஒழுங்கா அஞ்சாங் கிளாஸ் படிச்சுக்கிட்டு இருந்தேன். எங்க அப்பாருக்கு வேலை செய்யும் போது மூட்டு இறங்கிப் போச்சு. அதனால தெரிஞ்சவர் கூட இங்க வந்தேன். ஆரம்பத்துல டிரைசைக்கிள் மிதிச்சேன். 500 ரூவா சம்பளம் கொடுத்தாங்க. அது எனக்கே பத்தலை. வாடகை கொடுக்கணும். ஊருக்கு அனுப்பணும். சாப்புடணும். சமாளிக்க முடியலே! பாத்தேன்... பிராந்திக் கடையில நிறைய டிப்ஸ் கெடைக்கும்னு சொன்னாங்க. அதனால இங்க வந்து சேர்ந்துட்டேன். அதே மாதிரி கிடைக்குது.

ஆனா டிப்ஸ் கிடைக்கிற காசெல்லாம் சேக்கலாம்னா முடியலை. சினிமாவுல எல்லா காசும் போயிடுது. எனக்கு விஜய்ன்னா உசுரு. விஜய் மாதிரி டீ. சர்ட் ஜீன்ஸ் வாங்கணும். கண்ணாடி வாங்கணும். பணம் இன்னும் வேணுங்க.

நாகராஜ் *(பார்வையற்ற தெருப் பாடகர்):*

**எ**ங்க பிறவியே ஒரு போராட்டம் சார். காசையும் பணத்தையும் கையாலத்தான் எங்களால தடவிப் பாக்க முடியுது. இருந்தாலும் காசு இல்லாம வாழ முடியலை. என்னோட டீம்ல அஞ்சு பேர் இருக்கோம். பல்லாவரத்துல வீடு.. எல்லோரும் வாடகை வீட்டுலதான் இருக்கோம்... பிளாட்ஃபார்ம்தான் எங்களுக்கு மேடை. ஒரு இடத்துல குறைஞ்சது மூணு மணி நேரம் கச்சேரி பண்ணுவோம். இருபது ரூபா முப்பது ரூபா வசூலாகும். ஒரு நாளைக்குன்னு பாத்தா 50 ரூபாயும் கிடைக்கும். 150 ரூபாயும் கிடைக்கும். நாங்க வெச்சுருக்கற, ஆம்ப்ளிபையர், மைக் ஏதாவது கெட்டுப் போச்சின்னா, அதுலதான் ரிப்பேர் பண்ணணும். ஒருசிலர்,



• பிங்கி



• தங்கவேல்



• ஹஸ்பத்பாபு



• ஜான் துரைராஜ்



• பழனி

பிச்சை எடுத்தா நிறைய கிடைக்குதுன்னு இறங்கிடுறாங்க. எங்க தன்மானம் அதுக்கு இடம் தரலே. எங்க அஞ்சு பேருக்கும் சேர்த்து ஒரு நாளைக்கு ஐந்நூறு ரூபா வசூலாச்சுன்னா போதும் சார்.

**பிங்கி** (ராமச்சந்திரா கல்லூரி மாணவி) :

**எ**ங்க வீட்டப் பொறுத்தவரைக்கும் அப்பா தான் யஷ்வந்த் சின்ஹா! என்ன தேவையோ அத அப்பாகிட்ட கேட்டு வாங்கிக்குவேன். அப்பாவுக்குத் தெரியாம அம்மாகிட்டேயும் வாங்கிக்குவேன். ஆனா அதிகம் செலவு செய்ய மாட்டேன். கேண்டீன்ல ஃப்ரெண்ட்ஸ் கூட ஐஸ்கிரீம், இல்லேன்னா ஜூஸ் சாப்பிடுவேன். அதுவும் எப்போதாச்சும்தான். எனக்கு பாக்கெட் மணின்னு ஒரு மாசத்துக்கு 250 ரூபா இருந்தாப் போதும். லோ, 'வைட்டமின் எம்' எனக்கு ஒரு இஷ்யூவா இப்போ தெரியலை!

**ஆண்டனி** – (ஃபீல்டு எக்ஸிக்யூடிவ்) :

நான் சிட்டி பேங்க்ல ஃபீல்டு எக்ஸிக்யூட்டிவ்வா இருக்கேன். கிரெடிட் கார்டு வெச்சிருக்கற கஸ்டமருங்க ஆறு மாசம் பணம் கட்டாம, ஏழாவது மாசம் 'ரைட் ஆஃப்'ன்னு வருவாங்க. அவங்ககிட்ட போயி பேசி ஒரு ஆஃபர் குடுத்து தொகைய கட்டச் சொல்லுவோம். எனக்கு கன்வேயன்ஸ் சேர்த்து 3,500 ரூபா சம்பளம் கிடைக்குது. சென்னையில பேச்சிலரா இருக்கிற ஒரு ஆளுக்கு இந்தச் சம்பளம் கொசு மாதிரி. மாசம் பத்தாயிரம் ரூபா வருமானம் இல்லாம கல்யாணம் பண்ற தில்லேன்னு ஒரு முடிவு வெச்சிருக்கேன்! அதுலயும்... ஒர்கிங்வுமன்தான் பெஸ்ட். ரெண்டு பேரும் சம்பாதிக்காம, சிட்டில வாழ முடியாது சார்!

**ஹஸ்பத்பாபு** (கீபோர்டு பிளேயர்) :

**நா**ன் மலையாள மியூசிக் டைரக்டர் சங்கீதராஜன்கிட்டே கீபோர்டு வாசிக்கிறேன் சார். ரெக்கார்டிங் பொறுத்து இன்கம் வருது. ஆனா தலைக்கு மேல கடன். சொன்னா நம்ப மாட்டீங்க! எனக்கு பத்து லட்சம் கடன் இருக்கு. ஒரு லட்ச ரூபா போட்டு கீ போர்ட் வாங்குறோம். அதே பணத்தை பேங்கில போட்டா மாசா மாசம் வட்டி கிடைக்கும். பாதுகாப்பான வருமானம். ஆனா ஆத்மதிருப்தி கிடைக்காது. இதுல வருமானம் கம்மியா இருந் தாலும் ஒரு சந்தோஷம் இருக்கு. அதனால இந்த வேலைய விட்டுப் போக முடியலை!

**ஜான் துரைராஜ்** (பாதிரியார்) :

**அ**டிப்படையில, மக்களுக்கு சேவை செய்யறதுக்காகத்தான் இந்த இறைபணிக்கு வந்தோம். அதனால எங்களுக்கான உண்டி, உறையுள் தேவைகளை மக்கள்தான் சிறு சிறு காணிக்கையா தர்றாங்க. எந்த அளவு எளிமையா வாழ முடியுமோ அப்படி வாழ்ந்து மக்களுக்கு வழி காட்டணும். நாமே ஆடம்பரமா, தேவைகளை அதிகப்படுத்திக்கிட்டு வாழ்ந்தா, நம்மளுக்கும் ஆண்டவருக்கும் இடையில இருக்குற சங்கிலி அறுந்துடும். பற்று, உலக வாழ்க்கை மேலயும்... உலகப் பொருட்கள் மேலேயும்தான் வளரும். இதனால.. இப்படித்தான் வாழணும்னு வாழறோம். தேவையிருந்தாலும் அதுகளை முடக்கிக்கிட்டு வாழ பழகிட்டோம்! அதனால காசோ, பணமோ எங்களுக்கு ஒரு பிரச்னை இல்லே.

சந்திப்பு : **ஆர். சி. ஜெயந்தன்**
புகைப்படங்கள் : **வெங்கடேஷ்**



• நாகராஜ் - குழுவுடன்



• ஆண்டனி

# “த.மா.காவினருக்குத் தன்னம்பிக்கை இல்லை!”

**இடைத் தேர்தல் முடிவுகள் மூலம் சொக்கர் கருத்தைத்தான் மக்களும் பிரதிபலித்திருக்கிறார்கள். இனி, சொக்கரின் அடுத்த நடவடிக்கை என்ன? சந்தித்துக் கேட்டோம் :**

“த.மா.காவையும் அதன் சக்தியையும், மாற்றுக் கட்சியினர் உணர்ந்திருந்த அளவு கூட த.மா.கா கட்சி நிர்வாகிகள் உணராதது தான் இன்றைய நிலைமைக்குக் காரணம். மூன்றாவது அணியாகவே இருந்திருந்தால் கடந்த பாராளுமன்றத் தேர்தலில் கிடைத்த பத்து சதவீத ஆதரவை விட இன்னமும் அதிக அளவில் கிடைத்திருக்கக்கூடும். ஒரு ஆரோக்கியமான சூழல் உருவாகி இருக்கும். இதை எப்படிச் சொல்கிறேன் என்றால் பாராளுமன்றத்திற்குச் சென்று த.மா.கா. சாதிக்கப் போவது ஏதுமில்லை என்று தெரிந்தும் பத்து சதவீத வாக்குகள் கிடைத்ததே, அதை வைத்துத்தான்! ஆனால் த.மா.கா. நிர்வாகிகளுக்குத் தன்னம்பிக்கை இல்லாத நிலையில் வலுவான ஏதாவது ஒரு கூட்டணியில் இருந்தால்தான் கட்சிக்கு எதிர்காலம் என்று தலைவரிடம் தொடர்ந்து நச்சரித்து வரலானார்கள். எதிர்காலத்தில் தங்களுக்கும் பதவி கிடைக்க வேண்டும் என்ற அப்பட்டமான சுயநலம் காரணமாக நிர்வாகிகள் செயல்பட்டிருக்கிறார்கள்” என்று கடந்தகால நிகழ்வை அசை போடுகிறார் சொக்கர்.

“வலுவான அணியுடன் சேர வேண்டுமென்றால் மீண்டும் தி.மு.க.வோடு அணி சேர்ந்திருக்கலாமே! பா.ஜ.க.வோடு தி.மு.க. இருக்கும் ஒரே காரணத்திற்காகத்தான் தி.மு.க. அணியில் த.மா.கா. சேரவில்லையா?”

“அது ஒன்றுதான் முக்கியக் காரணமா என்பதை இன்னமும் என்னால் தீர்மானிக்க முடியவில்லை. அதே போல் அ.தி.மு.க.வுடன் சேர வேண்டாம் என்கிற என் கருத்துக்கு அடிப்படை ஜெயலலிதா ஊழல் செய்தார் என்பது மட்டுமல்ல. அவரது ஐந்து வருட ஆட்சியில் நடந்த அதிகார துஷ்பிரயோகம், வெளிப்படுத்திய ஆணவம், ஆளும் கட்சி + அரசு சார்ந்த வன்முறைகள் ஆகியவையும்தான். தமிழ்நாட்டு நலனை மட்டும் கருத்தில் கொண்டு பார்த்தோமானால், ஜெ.வுக்கு வலு சேர்க்கும்விதமாக யாரும் ஆதரவு கொடுக்கக் கூடாது என்பதே என் கருத்து.”

“அரசியலில் நிரந்தர நண்பரும் கிடையாது; நிரந்தரப் பகைவனும் கிடையாது” என்று சொல்லிக் கொண்டு தேர்தலுக்குத் தேர்தல் அணிகள் மாறி வருவதைப் பார்க்கிறோம். த.மா.காவும் தன் எதிர்காலத்தை மனதில் கொண்டு அ.தி.மு.க.வுக்கு ஆதரவளித்ததாகச் சொல்கிறார்களே?”

“நீங்கள் கூறும் அணி மாறுதல்கள் ஒரு பொதுத் தேர்தல் முடிந்து அடுத்த பொதுத் தேர்தலில் தான் நடந்தன. தி.மு.க.–பி.ஜே.பியோடு சேர்வதற்கு வலுவான காரணங்கள் இருந்தன. ‘தி.மு.க. அரசைக் கலைக்கச் சொல்லி ஜெ. தினசரி மிரட்டிக் கொண்டிருந்தும் அதற்குப் பணியாமல் பி.ஜே.பி. இருந்ததும் ஜெ.யைக் காட்டிலும் அரசியலில் முதிர்ந்த கலைஞர் நம்பிக்கைக்குரியவர் என்று பா.ஜ.க. நினைத்ததும் இரு கட்சிகளும் கூட்டணி சேர அடிப்படையாக அமைந்த விஷயங்கள். ‘தன் விருப்பப்படித்தான் கூட்டணிக் கட்சிகள் நடக்க வேண்டும்’ என்ற ஜெ.யின் கெடுபிடிகள் பிடிக்காமலும், காபந்திற்காக அவர் வாஜ்பாய் அரசை கவிழ்க்க உதவி செய்ய வேண்டுமென்று விரும்பியதாலும், ஜெ.யின் அணியி



தங்களோடு ஒத்துப் போகக்கூடிய சிறிய கட்சிகளுடன் கூட்டணி கண்டு ஒன்றிரண்டு தேர்தல்களை தைரியமாக சந்திக்க வேண்டும். துவக்கத்திலேயே பெரிய எண்ணிக்கையில் இடங்களைப் பெற முடியாவிட்டாலும், எதிர்காலத்தில் தனித்து ஆட்சி அமைக்கக்கூடிய அளவு மக்கள் நம்பிக்கையைப் பெற முடியும். அரசியலில் பொறுமையும் தன்னம்பிக்கையும்தான் உயர்வுக்கு வழி வகுக்கும். இதற்குப் பல உதாரணங்கள் இருக்கின்றன. எனவே அ.தி.மு.க. அணி இல்லாவிட்டால் தி.மு.க. அணிதான் ஒரே மாற்று வழி என்ற கருத்தையும் ஏற்பதற்கில்லை.''

இருந்து மாறி வாஜ்பாய் அணிக்கு, அதாவது தமிழகத்தைப் பொறுத்தவரை தி.மு.க. அணிக்கு – பா.ம.கவும் ம.தி.மு.கவும் வந்தது இயற்கையான ஒன்றுதான். புதிய கூட்டணி கண்ட கட்சிகள் மக்களிடையே தங்கள் நிலையை எடுத்துச் சொல்லி தீர்ப்புக் கேட்டார்கள். மக்கள் விருப்பப்படி முடிவுகள் அமைந்தன. ஆனால் தற்போது இந்த இடைத் தேர்தல்களில் மட்டும் த.மா.கா. அ.தி.மு.கவுக்கு ஆதரவு அளித்ததை, மேலே சொன்ன அணி மாற்றங்களோடு நிச்சயம் ஒப்பிட முடியாது.''

"த.மா.கா. தி.மு.கவோடு கூட்டணியில் இருப்பதுதான் இயற்கையான ஒன்றாக இருக்கும் என்று கருதுகிறீர்களா?''

"ஒரு குறுகிய கால அரசியல் லாபத்தை எதிர்பார்த்து ஏதாவது ஒரு அணியில் இருந்து கொண்டிருப்பதை விட காங்கிரஸ் அல்லது த.மா.கா. போன்ற இயக்கங்கள்

"அப்படியென்றால் ஒரு சட்டமன்றத் தேர்தலை த.மா.கா. தனியாகச் சந்தித்திருக்க வேண்டும் என்கிறீர்களா?''

"அப்படியல்ல. ஒரு சட்டமன்றத் தேர்தலை நாம் முதன் முதலாகச் சந்திக்கும் போது நாம் எதிர்பார்த்த வெற்றி கிடைக்காமல் போகலாம். அந்தத் தோல்வியைக் கண்டு துவண்டு போகக் கூடாது. தொடர்ந்து முயற்சி செய்ய வேண்டும். அந்த நிலையில் கட்சியில் இருக்கும் பதவி வெறியர்கள் கட்சியை விட்டு ஓடிவிடக் கூடும். அது கட்சியை இன்னமும் பலமானதாக மாற்றுமே தவிர பலவீனமாக்காது.''

"இந்த இடைத்தேர்தல்களில் அ.தி.மு.க. அணி வெற்றி பெற்றிருந்தால் உங்கள் நிலைப்பாடு மாறியிருக்குமா?''

"தேர்தல் முடிவுகள் நீங்கள் சொல்லும்படி அமைந்திருந்தால் கூட என் மனநிலையில் எந்தவொரு சிறு குழப்பமும் இருந்



திருக்காது."

"மூப்பனாரைச் சுற்றி ஒரு சுயநலக் கூட்டம் உட்கார்ந்து கொண்டு தவறான முடிவு களை எடுக்க வழி காட்டிக் கொண்டிருக்கிறது என்கிறீர் களா?"

"கூட்டம், கும்பல் போன்ற வார்த்தைகளைப் பயன்படுத்த நான் விரும்பவில்லை. எல்லா அரசியல் கட்சியிலும் இருப்ப வர்கள் வலுவான கூட்டணி கண்டு பதவி பெறலாம் என்று நினைப்பது போல த.மா.கா. நிர்வாகிகள் பலரும் அந்த அடிப்படையில் அ.இ.மு.க. ஆதரவு நிலைக்கு ஏற்ப கருத்துக்களைத் தெரிவித்திருக்கக் கூடும். யார் பெயரையும் நான் இங்கே குறிப்பிட விரும்பவில்லை. மேலும் அவர்களின் வாதம் சரியா, தவறா என்றும் உட்புகுந்து பார்க்க விரும்பவில்லை. ஆனால் கட்சியின் முடிவு எனக்கு ஏற்புடை யதாக இல்லை. அவ்வளவுதான். எனவே தான் அதுபோன்ற கூட்டில் கிடைக்கக் கூடிய பதவி வேண்டாமென்று ஒதுங்கிக் கொண்டேன். இது யாரையும் சங்கடப் படுத்த எடுத்த முடிவல்ல! ஆனால் இது போன்ற முடிவுகளைக் கட்சி எடுக்கும் போது, பெரு வாரியான ஆதரவாளர்களான நடுநிலை வாக்காளர்கள் எப்படி ரியாக்ட் செய்வார்கள் என்பதை எதிர்பார்த்து முடி வெடுக்க வேண்டும். ஏனென்றால் படித்த வாக்காளர்கள், கட்சிப் பிரமுகர்கள் நான்கு பேர் கூடி முடிவு எடுத்து விட்டார்கள் என்பதால் அவர்கள் சொல்லும் சின்னத் திற்கு வாக்களிப்பார்கள் என்று எண்ணுவது சரியான அணுகுமுறையாக அமையாது."

"த.மா.கா. மீண்டும் காங்கிரஸுடன் இணைந்து விடுவதுதான் சிறந்தது என்ற கருத்து வலுப்பட்டு வருகிறதே?"

"அ.இ.மு.க.வோடு எந்தக் காலத்திலும் கூட்டு கிடையாது என்ற நிலையை காங்கிரஸ் எடுக்குமேயானால் அவர் களோடு த.மா.கா. இணைவதில் எந்தச் சிர மமும் இருக்காது என்பது என் கருத்து."

"இடைத் தேர்தலில் அ.இ.மு.க.வோடு இணைந்தது தவறு என்ற உங்கள் கருத்து இப்போது நிரூபிக்கப்பட்டு விட்டது. அப் படியிருக்க கட்சியினரிடையே உங்கள் கருத் துக்கு ஆதரவுக் குரல்கள் இல்லையே.. ஏன்?"

"ஜனநாயகத்தில் பெரும்பான்மையான மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்று பார்த்துச் செயல்படுவது ஒரு அணுகுமுறை. ஒரு நபரைச் சுற்றி காலையிலிருந்து மாலை வரை எத்தனை நபர் கள் கூட்டமாகச் சென்று கொண்டிருக்கிறார்கள் என்று காட்டிக் கொள்வது இன்னொரு அணுகுமுறை. என் கருத்துக்கு ஆதரவு இருக்கின்றதா இல்லையா என்று அதிகம் கவலைப் படாமல் என் மனச் சாட்சிக்கு கட்சி எடுத்த நிலை ஏற்புடையதாக இல்லை என்ற அடிப் படையிலேயே நான் ஒதுங்கிக் கொண்டேன்."

"அடுத்த சட்டமன்றப் பொதுத் தேர்தல் இன்னமும் ஓராண்டிற்கு அப்புறம் நடக்க இருக்கும் நிலையில், இடைப்பட்ட காலத் தில் எப்படிப்பட்ட அரசியல் நிலையை த.மா.கா. எடுக்க வேண்டும் என்று கருது கிறீர்கள்?"

"மிகப் பொறுமையாக, ஆழமாகச் சிந்தித்து த.மா.கா. அடுத்தகட்ட நடவடிக் கையை மேற்கொள்ள வேண்டும். ஆத்திரத் திலோ அல்லது அதிக வருத்தத்தோடோ எடுக்கும் முடிவுகள் பெரும்பாலும் தவ றாகவே அமைந்து விடும். தலைவர் மூப் பனார் இடைத் தேர்தலில் எடுத்த முடிவு பலருக்குப் பிடிக்காமல் இருக்கலாம். ஆனால் அவர் ஒரு சுயநலமில்லாத, நேர்மை யான பெரியவர் என்ற எண்ணத்தை மக்கள் மனத்திலிருந்து யாரும் மாற்ற முடியாது. 'தன் நலனை விட கட்சி நலன் பெரிது; கட்சி நலனை விட நாட்டு நலன் பெரிது' என்பார் தலைவர். கட்சி நலனைக் காப் பாற்றுவதன் மூலம் நாட்டு நலனையும் காத்திட இன்னமும் காலங்கடந்து விட வில்லை என்பதே என் கருத்து.

"உங்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் என்று கட்சி வட்டாரத்தில் சொல்லப்படுகிறதே!"

"நானும் பத்திரிகைகளில் பார்த்தது தானே தவிர கட்சியிலிருந்து எந்தத் தகவலும் எனக்கு வரவில்லை. மேலும் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கும் அளவுக்கு எந்தக் கட்சி விரோத நடவடிக்கையிலும் நான் ஈடுபடவில்லை!"

— ப்ரியன்

படங்கள் : ஸ்ரீஹரி




# ANNAMALAI UNIVERSITY

## DIRECTORATE OF DISTANCE EDUCATION AND APTECH

## Join hands to bring you

# B.DIT.

## A Bachelor's Degree in Development and Information Technology

Applications are invited for admission to **B.DIT. Degree Course** for Calendar Year 2000 through Distance Education mode.

Duration: **Three years**, Eligibility: **A pass in 10 + 2 or equivalent examination**

Cost of Application Form: **Rs.100/-**

**Application form and prospectus can be had from the Director, Directorate of Distance Education, Annamalai University, Annamalainagar - 608 002** on requisition along with a crossed Demand Draft drawn in favour of the Director, D.D.E., Annamalai University on any bank at Annamalainagar/Chidambaram, mentioning clearly the name of the course and a self-addressed cover of size 27 cm x 21 cm. **Cheques, Postal Orders and Money Orders are not accepted.** Demand Draft should have been purchased on or after **01.01.2000.**

Applications can also be had in person on cash payment from the Directorate of Distance Education and the following Study Centres and Information Centres of the Directorate and from Aptech Computer Education Centres in Tamil Nadu.

Those who want to get **applications by post** should apply to the **Directorate only** and not to the Study Centres.

All the Study Centres and Information Centres except that at Annamalainagar will remain open on all days except Tuesdays, Second Mondays and all other public holidays.

| | |
|---|---|
| Date of issue of application form | **06.01.2000** |
| Last date for issue of application form | **15.03.2000** |
| Last date for receipt of filled-in applications | **23.03.2000** |

**APTECH COMPUTER EDUCATION**
www.aptech-education.com
**We *change* lives**

**B.DIT. – a graduate degree with focus on the latest in IT designed to ensure a successful career.**

**– a three-year distance education program with modules and latest software technologies to help the graduate meet industry's demands at his/her doorstep.**

**THE Graduate with IT skills PROGRAM**

PLACE: Annamalainagar
DATE: 01.01.2000

**Dr. L.B. VENKATRANGAN**
Director

**STUDY CENTRES:** (1) **CHENNAI:** (✆ 8555010); (2) **TIRUCHI:** (✆ 760950); (3) **SALEM:** (✆ 419660); (4) **NAGERCOIL:** (✆ 30561); (5) **TIRUNELVELI:** (✆ 572923); (6) **VELLORE:** (✆ 227647); (7) **MADURAI:** (✆ 628327); (8) **COIMBATORE:** (✆ 234406); (9) **KARAIKUDI:** (✆ 23417) (10) **NEW DELHI:** (✆ 6987638); (11) **CALCUTTA:** (✆ 4667215); (12) 138, G.S.T. Road, (Opp. to Vetri Theatre), Chrompet, Chennai - 600 044; (13) 27, North Park Street, Venkatapuram, Ambattur, Chennai - 600 053. All APTECH Computer Education Centres in Tamil Nadu.

# நீதிமன்றத்துக்கு வராத நகைகள்



• காதணிகள்...



காதணிகள்

• மாங்காய் மாலை



• நெக்லஸ்



'ஜெ' நகைகள் நீதிமன்றத்தில் பட்டியலிடப்பட்டபோது வாய் பிளந்தோமில்லையா... நீதிமன்றத்துக்கெல்லாம் வராத பண்டைக்கால நகைகள் பற்றியது இந்தப் படைப்பு.



• குஜராத்திலிருந்து சிகையலங்காரத்துக்கான நகை

ஐயாயிரம் வருடத்து நகைகள் - அத்தனையும் இந்திய பாரம்பர்யத்தை பறை சாற்றுகின்றன. அசந்தால், அப்படியே பெயர்த்தெடுத்து காதிலும் கழுத்திலும்



• கையில் அணியும் கங்கணம்



• ஆதிகாலத்தில் ஆந்திராவில் அணியப்பட்ட...

• நெற்றிச் சுட்டியும் நாகவியும்





• ...காதணிகள்

கைகளிலும் மாட்டிக் கொள்ளலாம் போல் தோன்றிவிடும் பார்க்கிற பெண்களுக்கு - ஆண்களுக்கும்தான்! அவர்களுக்கான அணிகலன்களும் உண்டு. இத்தனைக்கும் நகைகளின் வண்ணப்படங்கள்தான் அத்தனையும். மிகத் தத்ரூபமாக அச்சாகியிருக்கின்றன!



• உஷா பாலகிருஷ்ணன்

ஊர் உலக மெல்லாம் தேடி அலைந்து Dance of the Peacock - Jewellery Traditions of India என்ற நூலில் அவற்றைத் தொகுத்திருப்பவர் உஷா பாலகிருஷ்ணன். (உதவியிருப்பவர்: மீரா கஷில்குமார்) நகைகளை வண்ணப்படங்கள் எடுத்திருப்பவர் அவருடைய சகோதரர் பரத் ராமாம்ருதம். வி.கே. ராஜாமணி சில படங்கள் தந்து உதவியிருக்கிறார். சின்னச் சின்ன நகைகள் கூட தெள்ளத் தெளிவாக, ஒரிஜினல் நிறத்தில் தெரியும்படி ஸ்கேனிங் செய்து தந்திருப்போர் மும்பை நிறுவனமான ரிப்ரோ ஸ்கேன். சிங்கப்பூரில் அச்சிடப்பட்டு வந்திருக்கும் இந்த தலையணை சைஸ் புத்தகமே ஒரு நகை போல் ஜொலிக்கிறது! பதிப்பிக்க உதவியிருப்போர் வேர்ல்ட் கோல்ட் கவுன்சில், டைடன்.

இந்திய கலாசாரம் பற்றிய ஆராய்ச்சியில் டாக்டர் பட்டம் பெற்றவர் உஷா. நியூயார்க் பல்கலைக் கழகத்தில் மியூசிய நிர்வாகம் படித்து விட்டு (அதற்குத் தனி பயிற்சி உண்டு) ப்ருக்லின் மியூசியத்தில் வேலை செய்த போதுதான் இந்திய நகைகள் பற்றி நிறைய தெரியவந்ததாம். இப்படி ஆவணம் போன்ற ஒரு புத்தகத்தைத் தயாரிக்க உஷாவுக்கு உந்துதல் அளித்தவர் ப்ருக்லின் மியூசியத்தின் அமி போர்ட்டர் என்பவர்.

வேலையில் இறங்கிய பின் திணறிப் போயிருக்கிறார் உஷா. நண்பர்களும் உறவினர்களும் விஷயம் தெரிந்தவர்களும் நிறைய உதவியிருக்கிறார்கள். ஆனாலும் பல நாட்கள் இரவு பத்து மணிக்கு ஆரம்பித்து விடி காலை மூன்று வரை வேலை செய்ய வேண்டியிருந்திருக்கிறது. கட்டுரைகளை எடிட் செய்து, எழுநூறு படங்களிலிருந்து 550 படங்களைச் சலித்தெடுத்து, எல்லா வேலைகளையும் முடித்து, வெளியீட்டாளர்களுடன் (இந்தியா புக் ஹவுஸ்) ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்ட போது பிரசவ வலி ஆரம்பித்ததாம்! அன்றே உஷா மருத்துவ மனையில் அட்மிட் ஆக, குழந்தையும் பிறந்திருக்கிறது!

மயிலின் நடனம் என்று பெயரிடக் காரணம்...?

"இந்திய ஆபரணக் கலையில் மயிலுக்கு ஒரு முக்கியமான இடம் இருக்கிறது. அதனால்தான்" என்கிறார் உஷா. "நம் நாட்டுக் கைவினைஞர்களின் திறனுக்கும் உழைப்புக்கும் நன்றி தெரிவிக்கவே இந்த நூல்..."

பார்க்கப் பார்க்க பிரமிப்பூட்டுகிறது உஷாவின் நன்றி!

— சாருகேசி

---



"எங்க வீட்டுல எலிகள் ரவுடித்தனம் பண்ணுது!"

"அதுக்காக வீட்டு வாசல்ல எலிகள் ஜாக்கிரதைனு போர்டு மாட்டுறது டூ மச்!"

– அம்பை தேவா

"கஷ்டம் கஷ்டம்! ஐயோ சகிக்கலை!"

"எது குருவே சகிக்கலை?"

"பகவத் கீதை, ராமாயண, மகாபாரத புத்தகங்களுக்கு சிம்ரன் அட்டை, ரம்பா அட்டை, ரியாசென் அட்டைன்னு நீ அட்டை போட்டு வச்சிருப்பதுதான்!"

– உ. ரா்ஜாஜி



# KALKI SHOPPING PAGE

## கோலம் முதல் கட்டு சாதம் வரை

தங்கள்
அன்பு மகள் திருமணத்திற்கு
சுவையான உயர்தர
சாப்பாடு டிபன்
வேளாவேளைக்கு காபி,
வைதீக ஏற்பாடுகள், பூ மாலை,
நாதஸ்வரம், பச்சபுடி சாமான்கள்,
சீர் பக்ஷணங்கள்,
தாம்பூல வகையறா,
நிச்சயதார்த்தம்
பழ தட்டுகள்,

சபைக்கு தேவையான அனைத்தும்
காண்டிராக்ட் முறையில் செய்து தர அணுகவும்

**S.R. RAGAVAN**

**SRI SAI MARRIAGE SERVICES**

No.28, (Old No.35), TAYLORS ESTATE, II ST,
KODAMBAKKAM, CHENNAI 600 024.
Ph: 4840914, Mobile: 98400 40914

email: ragavan@rocketmail.Com

***We undertake Catering for smaller function also***

## வாழ்வாங்கு வாழ சிறந்த ஆன்மிக நூல்கள்

| | |
|---|---|
| மந்திர சக்தியும் யந்த்ர பூஜைகளும் | ரூ. 22.00 |
| மந்திர சித்தி பெற மகத்தான வழிகள் | ரூ. 22.00 |
| சர்வமும் சித்தியாகும் மந்திரங்கள் | ரூ. 22.00 |
| நிம்மதியான வாழ்வு பெற மந்திரங்கள் | ரூ. 23.00 |
| வறுமை கடன் நோய் விலக மந்திரங்கள் | ரூ. 18.00 |
| மலையாள மந்திரமும் யந்த்ரங்களும் | ரூ. 22.00 |
| சித்தர்களின் சிறந்த மந்திரங்கள் | ரூ. 20.00 |
| வளமுடன் வாழ 108 மந்திரங்கள் | ரூ. 12.00 |
| குபேர சம்பத்து தரும் சக்கரங்கள் | ரூ. 15.00 |
| வியாபாரம் தொழில் பெருக மந்திரங்கள் | ரூ. 22.00 |
| வாழ்க்கையில் வெற்றிபெற மந்திரங்கள் | ரூ. 23.00 |
| நினைத்ததை நிறைவேற்றும் மந்திரங்கள் | ரூ. 22.00 |
| கேட்டவரம் கிடைக்கும் மந்திரங்கள் | ரூ. 25.00 |
| மந்திரமும் யந்த்ரமும் தகடுகளும் | ரூ. 22.00 |
| ஆயுள் விருத்தியாகும் மந்திரங்கள் | ரூ. 32.00 |
| க்ஷேத்திர தரிசனங்களும் பலன்களும் | ரூ. 24.00 |
| வழிபாட்டுச் சடங்குகளும் பலன்களும் | ரூ. 21.00 |
| பண்டிகைகளும் பலன்களும் | ரூ. 20.00 |
| விரதங்களும் பூஜைகளும் | ரூ. 17.00 |
| அனுக்கிரகம் அளிக்கும் ஆஞ்சநேயர் | ரூ. 18.00 |

வி.பி.பி.யில் பெற கடிதம் எழுதுங்கள்

**யமுனா பிரசுரம்**

18/1, ராஜாபாதர் தெரு, தி. நகர்.
(பாண்டி பஜார் அருகில்) சென்னை - 600 017
போன் : 8241865

வியாபாரிகளுக்கு தக்கக் கழிவு உண்டு

## ஸ்ரீ டிராவல்ஸ்

12/a, ரெட்ஹில்ஸ் ரோடு, கொளத்தூர்,
சென்னை - 600 099.
194-A, முதல் மாடி, அண்ணா சாலை,
சென்னை - 600 006.
போன் : 5568620, பேக்ஸ் : 5565866
பேஜர் : 9632-701579
ஈ-மெயில் : Sritrave@satyam.net.in

### ஸ்ரீ டிராவல்ஸ் அளித்திடும்

பிரத்தியேக கோடைக்கால சுற்றுலாக்கள்!
(L.T.C. வசதியுடன் கூடியவை)

**ST - 16** கோவா சுற்றுலா

புறப்படும் நாள் : 15.04.2000

சென்னை - கோவா - மும்பாய் - நாசிக் - திரியம்பகம் - பஞ்சவடி - ஷீரடி - அவுரங்கபாத் - அஜந்தா - எல்லோரா - சனி சிங்கனப்பூர் - சென்னை.

நாட்கள் : 9 தொகை : ரூ. 6,500/-

**ST - 17** அந்தமான் சுற்றுலா

புறப்படும் நாள் : 21.04.2000

சென்னை - போர்ட்பிளேர் - சென்னை

நாட்கள் : 12 தொகை : ரூ. 6,500/-
(கப்பலில் உயர்வகுப்பு பயணம், விமானப் பயணம் வேண்டுவோருக்கு பிரத்தியேக வசதி உண்டு)

**ST - 18** சிம்லா சுற்றுலா

புறப்படும் தேதிகள் : 30.04.2000 மற்றும் 13.05.2000

சென்னை - டில்லி - குருக்ஷேத்திரா - சண்டிகர் - சிம்லா - குலு - மணாலி - ஆக்ரா - மதுரா - சென்னை.

நாட்கள் : 12 தொகை : ரூ. 6,500/-

**ST - 19** நேபாள சுற்றுலா

புறப்படும் தேதி : 22.05.2000

சென்னை - கல்கத்தா - கேங்டாக் - டார்ஜிலிங் - காத்மாண்டு.
போக்ரா - கோரக்பூர் - சென்னை.

நாட்கள் : 12 தொகை : ரூ. 6,900/-

- அருமையான ஹோட்டல்களில் பிரத்தியேக தங்கும் வசதிகள்.
- அனுபவம் வாய்ந்த பிராமண சமையல்காரர்களால் மூன்று வேளையும் தரமான தென்னிந்திய சைவ உணவு.
- இடங்களைச் சுற்றிப் பார்க்க 2 X 2 பேருந்து
- இடங்களைச் சுற்றிக் காட்ட அனுபவம் வாய்ந்த கைடு.
- ரயிலில் கோடை நெரிசலை தவிர்க்க சுற்றுலா புறப்படுவதற்கு 60 நாட்களுக்கு முன்பே கண்டிப்பாக முன்பதிவு செய்யவும்.
- 3rd A/c, 2nd A/c, 1st Class வேண்டுவோருக்கு ஏற்பாடு செய்து தரப்படும்.

**வெளியூரிலிருந்து கலந்து கொள்பவருக்கு எமது செலவிலேயே ரயிலில் டிக்கெட் வசதி செய்து தரப்படும். அனைத்து கிரெடிட் கார்டுகளும் ஏற்றுக் கொள்ளப்படும்!**

**வை**ரங்களுக்குத்தானா பாலீஷிங் தேவை? மனிதர்களுக்கும்தான் வேண்டியிருக்கிறது. ஒளி வீசினால் தான் மதிப்பு என்பது இருவருக்குமே பொதுவானதுதானே? இந்தப் பட்டை தீட்டிப் பளபளப்பாக்கும் வேலைதான், இப்போது மும்பையில் மினுமினுத்துக் கொண்டிருக்கும் தொழில் – "grooming classes". ஆங்காங்கே சக்கைபோடு போடுகின்றன!

அதுவும் அழகு என்பது, இப்போது பெரிய இண்டஸ்ட்ரியாகி விட்டது. எல்லோராலும் பேரண்டப் பேரழகி, உலக அழகிக் கனவுகளைக் காண முடிகின்றது. அழகை உற்பத்தி செய்ய முடியாவிட்டாலும், அழகுணர்ச்சியை வளர்த்துக் கொள்ளவாவது இந்தத் தொழிற்கூடங்கள் பெரிதும் துணை புரிகின்றன என்பதை மறுக்க முடியாது!

குறைந்தபட்சம் ஒரு லட்சம் முதலீடு செய்தால், இந்தத் தொழிலைத் துவங்கி விடலாம்! தேவையானது ஒரு (ஏஸி) ஹால், ஸ்லைடுகள், ஸ்க்ரீன்கள், உணவு மேஜை, கட்லெரி... இத்யாதிகளாலான கற்பிக்கும் சாதனங்கள்; கற்பிக்கச் சில வல்லுனர்கள்; ஆரம்பக் காலத்தில் கொஞ்சம் விளம்பரம்... அவ்வளவுதான்.

இன்று, மும்பையில் சாந்தாக்ரூஸிலுள்ள திருமதி அருணாமுகி, இந்தத் துறையில் தனது அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டு, இத் தொழிலைப் பற்றிய நெளிவுசுளிவுகளை அலசினார்.

"இந்தியர்களிடம் எது இல்லை? அழகு, அறிவு, புத்திசாலித்தனம், திறமை, உழைப்பு... ஆனாலும் உலக அரங்கில் அவர்கள் பின்தங்கியிருப்பதற்குக் காரணம், அவர்களிடம் இயற்கையிலேயே இருக்கும் ஒரு தயக்கம்... வெட்கம்.. தன்னம்பிக்கையின்மை... எந்தெந்த இடத்தில் எப்படி நடந்து

# ப




"ஸ்விஸ் ஷாலே" க்ளாசுகள், உயர்தட்டு மட்டுமின்றி நடுத்தரவர்க்கத்தினிடையேயும் மவுசு பெற்றிருக்கிறது. இதற்கு வித்திட்ட

• அருணாமுகி

கொள்ள வேண்டுமோ என்பதைப் பற்றிய பயம்... இவை தான்'' என ஆரம்பிக்கிறார் அருணா.

''உலகமயமாக்கலை ஒட்டி நாம் பல விஷயங்களைத் தெரிந்துகொண்டே ஆக வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். 'தெரியாது' என்று வெளியில் சொல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் தவிப்பவர்களுக்கென்று ஏதாவது செய்ய வேண்டும் என்ற நினைப்பு, பல நாட்களாக என்னைப் பிறாண்டிக் கொண்டிருந்தது. சரியான தருணம் வாய்த்ததும், "Swiss Chalet"ஐத் துவங்கி விட்

Chalet என்றால் கதகதப்பான, இதமான சிறு வீடு என்று அர்த்தமாம். ஸ்விட்ஜர்லாந்தில், உயர்மட்டப் பெண்கள் அடிப்படைக் கல்வி முடிந்தவுடன், "ஃபினிஷிங் ஸ்கூல்" எனப்படும் மேல்தட்டு நாகரிகத்தைக் கற்பிக்கும் கூடங்களுக்கு அனுப்பப்படுவார்களாம். அதன் பிறகுதான் கல்யாணம்! ஆக, ஸ்விட்ஜர்லாந்துதான் ''grooming classes''க்குத் தாயகம் என்பதால், "Swiss Chalet" - grooming for success என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

மும்பையில், "Orchid" தான் இதற்கு முன்னோடி. முன்பெல்லாம் பிரசித்தி பெற்ற தரமான ட்ரெயினிங்குக்கு இது ஒன்றுதான் இருந்தது. அதை நடத்திய அனுராதா படேலையும், அம்ரிதா தாஹில்லையும்தான் முதலில் அணுகியிருக்கிறார் அருணா. அவர்கள் கொஞ்சம் ''கறாரி''க்கவே, 'அவர்களால் முடியுமென்றால் நம்மால் ஏன் முடியாது?' என்ற ரோஷம் தலைதூக்க, பூஜா என்ற பெண்ணையும் இணைத்துக் கொண்டு, துணிந்து களத்தில் இறங்கி விட்டார்.

முதல் ஆறு மாதம், வெளிநாடுகளிலிருந்து வாங்கி வந்திருந்த புத்தகங்களிலிருந்து குறிப்பெடுத்து, தரமான 'நோட்ஸ்' தயாரித்

# நிலையம்!



• 'பாலிஷிங்' வகுப்பு

டேன்'' என்கிறார் நினைவுகளில் மலர்ந்தவாறே.

திருக்கிறார். பிறகு, 'Counselling', 'etiquettes & manners', 'dress sense & hair style' முதலானவற்றில் 'டாப்'பில் இருந்தவர்களை வரவழைத்து, முழுண்டிலேயே தமக்கு அறிந்தவர்

தெரிந்தவர் 15 பேரை வைத்து வொர்க்ஷாப் நடத்தியிருக்கிறார். அது பெருவெற்றி பெறவே, அடுத்து, கொலாபா ரேடியோ க்ளப்பில் முயற்சித்திருக்கிறார். இங்கே விளம்பரத்துக்கென்று கொஞ்சம் செலவானாலும், மொத்தத்தில் திருப்திகரமாகவே முடிந்திருக்கிறது.

இந்த இரண்டு அனுபவங்களும், இவருக்குப் புதிய கண்ணோட்டத்தை ஏற்படுத்தி, சில பல மாறுதல்களைப் புகுத்தத் துணை புரிந்திருக்கிறது. பெண்களை மட்டுமே குறிவைத்திருந்தவர், ஆண்களுக்கும் பாலிஷிங் தேவை என்பதை உணர்ந்திருக்கிறார்; அதனால் dress sense, hairstyle முதலானவற்றை நீக்கிவிட்டு, இருபாலருக்கும் பொதுவாக, தன்னம்பிக்கை வளர்க்கும் விதத்தில் "attitude development" ஐப் புகுத்தியிருக்கிறார்.

"அப்போது ஒரு மல்டி நேஷனல் கம்பெனி எங்களை அணுகி, ஒரு 'in house grooming' க்கு விண்ணப்பித்தது. 'இந்தியர்கள் ரொம்ப காஷுவலாக வேலை செய்வது எங்களைச் சங்கடப்படுத்துகிறது. மேலும் ஏதாவது 'பார்ட்டி' என்றால், பெண் ஊழியர்கள், ஆண் ஊழியர்களின் மனைவியர் யாருமே பங்கெடுப்பதில்லை. தப்பித் தவறி தலையைக் காட்டினாலும், கூண்டுப் புறாக்களாய் தத்தமக்குள்ளே பழகுகிறார்களேயன்றி எல்லோருடனும் கலப்பதில்லை. இதை முதலில் மாற்றுங்கள்' என அதன் தலைவரான ஒரு அமெரிக்கர் வேண்டிச் சென்றார். நானும் பூஜாவும் இந்தச் சவாலை எதிர்கொண்டோம். முதலாளி – தொழிலாளி இரண்டு வர்க்கத்திடமிருந்தும் நல்ல ரெஸ்பான்ஸ்! இந்த ஒர்க் ஷாப்தான், 'ஸ்விஸ் ஷாலே'வை 'ப்ரொஃபஷனலாக' ஸ்திரப்படுத்த எங்களுக்கு வழிகாட்டியது" என்கிறார் அருணா!

இப்போதெல்லாம், சாந்தாக்ரூஸிலுள்ள 'வென்யூ' எனுமிடத்தில் மாதமொருமுறை, வார இறுதியில் தொடர்ந்தாற்போல் நான்கு நாட்கள் வகுப்புகள் நடக்கின்றன. ஆசிரியர் குழுவில் அருணா, பூஜா தவிர, புகழ்பெற்ற சர்ஜன் டாக்டர் ஸின்ஹா, பிரசித்திபெற்ற ஸ்க்ரீன் பர்சனாலிடி ஸபீரா மர்செண்ட், இடம்பெற்றுள்ளனர். வகுப்புகள் ஐந்து பகுதிகளாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. வானமே எல்லையாக இலக்குகளை வகுத்து, அவற்றை நோக்கி வெற்றிநடைபோட "Motivation" செய்வது டாக்டர் ஸின்ஹா. டேபிள் மானர்ஸிலிருந்து டெலிஃபோன் மானர்ஸ் வரை, ஃபார்மல் - இன்ஃபார்மல் கெட்-டு-கெதர்களில் பேசுவது பழகுவது முதலியவற்றை, "Etiquettes & Manners" ல் பயிற்றுவிப்பது ஸபீரா மர்செண்ட். நிற்பது, நடப்பது, அமர்வது, வாய்ச் சொல்லின்றிப் பேசுவது போன்றவற்றை "Body Language" ல் சொல்லித் தருபவர் அருணா.

எதிர்மறை உணர்வுகளைக் களைந்து, ஆரோக்கியமான எண்ணங்களை வளர்த்துக் கொள்வது, தன்னம்பிக்கையுடன் செயல்படுவது ஆகியவை, "Attitudes towards Healthy Relationship" ல் டாக்டர் ஸின்ஹாவால் அலசப்படுகின்றன.

அப்புறம் "Communication Skills". பேச்சு தயாரிப்பில் துவங்கி, குரலில் ஏற்ற இறக்கங்கள், உச்சரிப்பு, 'பாவம்', தைரியமாக சொற்பொழிவாற்றுவது போன்றவற்றை ஸபீரா, பூஜா இருவரும் செய்கிறார்கள். ஒவ்வொருவர் பேச்சும் வீடியோ டேப் செய்யப்பட்டு, போட்டுக் காட்டப்படுகிறது. இறுதியில் சுய மதிப்பீடு செய்யும் வகையில் அனைவருக்கும் ஒரு கேள்வித்தாள் வழங்கப்பட்டு, பதில்கள் பெறப்படுகின்றன. அதனடிப்படையில் தனிப்பட்ட திறமைகளை வளர்த்துக் கொள்ளவும் யோசனைகள் வழங்கப்படுகின்றன.

முத்தாய்ப்பாக, உலக அழகி யுக்தா முகி வந்து, தோல் மற்றும் தலைமுடி பராமரிப்பு பற்றி டிப்ஸ் கொடுத்து, உலக அழகியாக மகுடம் சூட்டிக் கொள்ள 'ஸ்விஸ் ஷாலே' க்ளாசுகள் எவ்வளவு உதவி செய்தன, லண்டனில் எவ்வளவு தன்னம்பிக்கையுடன் தன்னால் ஏனைய நாட்டவரிடையே வளைய

"சே! வியாபாரத்தைப் பெருக்க, எதுக்கு எதை இலவசமா தரதுன்னு ஒரு விவஸ்தையே இல்லாமப் போச்சு..."

"எப்படிச் சொல்றே...?"

"ஒரு கேன் சாராயம் வாங்கினா ஒரு பாட்டில் சாராயம் இலவசமா தரதா சொல்றானுங்க!"

— மிஸ்டர் எக்ஸ்



வர முடிந்தது என்பதை விளக்குகிறார்!

'சாதாரணமாக ஒரு 'வெல்கம் ட்ரிங்' கொடுத்தால் அதை நாம் வலக்கையில் ஏந்து வோம். அப்போது யாராவது வந்து 'ஹலோ' என்று கையை நீட்டினால், ஈரப் பசை படிந்த கையை நீட்டத் தயக்கமாக இருக்கும். அதனால் எப்போதும் க்ளாசுடன் ஒரு நாப் கினையும் ஏந்த வேண்டும்; உடனே ட்ரிங்கை இடது கைக்கு மாற்றி விட வேண் டும்; கிளாசிலும் எத்தனை வகை... தண் ணீருக்கு ஒன்று, ஜூஸுக்கு ஒரு வகை, ஒயினுக்கு மற்றொன்று... ஒவ்வொன்றுக்கும் எதை எடுக்க வேண்டும் என்பதை எல்லாம்... நான் இங்கேதான் கற்றேன்'' என அசத்து கிறார் யுக்தா.

**ஒ**ரு கோர்ஸில் அதிகபட்சம் 20 நபர் களுக்கு மேல் இவர்கள் எடுத்துக் கொள் வதில்லை. ஃபீஸ்... தலா 5000 ரூபாய்! நாலு நாளுக்கு ஐயாயிரமா என்று யாருக்கும் நினைக்கத் தோன்றும். ஆனால் அருணா...

"இது ரொம்பக் குறைச்சல்; டில்லியில் பதினைந்து - இருபதாயிரம் வாங்குகிறார் கள். ஒரு கம்ப்யூட்டர் கோர்ஸுக்கு எவ் வளவு செலவழிக்கிறோம்? எல்லாப் பெற்றோரும், பாட்டு டான்ஸ் படிப்பு க்ளாசஸ் போல, கட்டாயம் இந்த Grooming class க்கும் தத்தம் குழந்தைகளை அனுப்ப வேண்டும். அவர்களது ஆயுட்கால பர்சனா லிடி டெவலப்மெண்டுக்கு இவர்கள் ஒரே ஒருமுறை ஐயாயிரம் ரூபாய் செலவழிப்பது பெரிய விஷயமா?'' எனக் கேட்கிறார்.

**ஒ**ரு குடும்பம் ஒரே குழந்தை என்றாகி வருகையில், செலவை தூசாக நினைக்கும் நிலைமை வந்து விடும்தான்! ஏற்கெனவே இவரது வகுப்புகளில் ஹிந்துஜாஸ், லாடிம் க்ரூப் போன்ற பிஸினஸ் ஹவுஸ்களின் குழந் தைகள், வங்கிகள், தனியார் கம்பெனிகளின் உயர் அதிகாரிகள், தவிர, இல்லத்தரசிகளும் பாட்டிமார்களும், வெளிநாடு போக விரும்பு பவர்களும் வயது வித்தியாசமின்றி சேர்ந்து பயிலுகிறார்கள். ஒரு 56 வயது எக்ஸிக்யூடிவ், ஆறு மாதத்துக்கொருமுறை மூன்று முறை என்ரோல் பண்ணிக் கொண்டு விட்டாராம். எதற்கென்று கேட்டால், நிறைய புத்துணர்ச் சியும் புதுத் தெம்பும் இடைக்கிறதென் கிறாராம்!

"பிரிண்ட் மீடியாவில் விளம்பரப் படுத்துவது (எலக்ட்ரானிக் மீடியா பிரயோஜனமில்லையாம்!) இடத்துக்கான வாடகை, ஆசிரியர்களுக்கான சம்பளம் (டாக்டர் ஸின்ஹா அரைமணி ஆபரே ஷனுக்கே எக்கச்சக்கமாகத் தாளிப்பார்; ஒரே நாளில் ஐந்து மணி நேரத்தை இவர்களுக்கு ஒதுக்குவதென்றால்...) மாணவ மாணவி யருக்கு மதிய உணவு, டீ வகையறா... என்ற வகையில் அருணாமுகி செலவழிக்க வேண்டியிருக்கிறது.

"98-ல் துவங்கினேன்; வெளிக் கடன் ஏது மில்லை; ஆனால் என் கணவரிடமிருந்து வாங் கியதைத் திருப்பித் தர வேண்டும். சின்ன அள வில் நடத்துபவர்கள் போட்ட முதலை உடனே எடுத்து விடலாம்; இதுவரை பெயர் புகழ் என் பதைத் தவிர பணத்தளவில் பெரிய லாபங் களைப் பார்த்துவிடவில்லை. ஆனால் இதற்கு நிச்சயம் ஓர் எதிர்காலமிருக்கிறது. ஒரு முழு நேர இன்ஸ்டிட்யூட்டை நிர்மாணிப்பதே என் கனவு. என் மகள் யுக்தா உலக அழகியானதே என் வெற்றிக்குக் கிடைத்த மிகப் பெரிய விளம் பரமல்லவா?'' என முடிக்கிறார் அருணா முகி.

— ஜெயஸ்ரீ ராஜ்

அட்டை வண்ணப்படம்: பிரவீன்குமார்

**து**றவிகள் எழுப்பிய ஆலயங்களை நமக்குத் தெரி யும். ஆனால் ஒரு துறவிக்கு ஆலயமெழுப் பப்பட்ட கதை தெரியுமா?

முப்பது லட்ச ரூபாய் செல வில் மக்களாலேயே ஆலய மெழுப்பப்பட்ட அத் துறவி - குன்றக்குடி அடிகளார்!

குன்றக்குடி அடிகளாரின் சமாதி அமைந்துள்ள இடத்திலேயே, தற் போதைய பீடாதிபதி பொன்னம்பல அடி களார் தலைமையில் குடமுழுக்கு செய்யப் பட்டுள்ளது, இந்த 'மக்கள் எழுப்பிய அரு ளாலயம்'

அடிகளாரின் தமிழ்ப்பற்று பிரசித்த மல்லவா! குடமுழுக்கு தினத்தன்று மந்திரங் கள் கூடத் தமிழிலேயேதான் ஓதப்பட்டன!

கிருத்துவ, இஸ்லாமிய மதப் பெரி யோர்கள் பலரும் கலந்துகொண்டு சிறப் பித்தார்கள், இக் குடமுழுக்க விழா வில்!

— ஒ. சிங்காரவடிவேல்

# மொட்டை மாடி

பக்கத்துத்
தென்னைமரம்
வெட்கத்தில் வேர்சிலிர்த்துப்
பச்சைப் பசும் ஓலைவழி
பரிமாறும் பனிமுத்தம்

எட்டத்துக் கிளைகளிலே
'உன்னிலும் உயரமென'
ஓயாமல் கூவுகின்ற
ஓட்டைவாய்க் குயில்கள்!

உச்சத்தில் இருந்தாலும்
உன்மத்தம் கொள்ளாமல்
ஒடுங்கிக் கிடக்கின்ற
ஓங்கார நாரைகள்.

வெட்ட வெளியென்றும்
பாராமல் வயமிழந்து
கட்டிக் கொஞ்சுகிற
சிருங்கார அணில்கள்

பக்கச் சுவர்களிலே
புறம்காட்டி அமர்ந்து
எச்சம்மட்டும் விட்டுச்செல்லும்
அகங்காரக் காக்கைகள்

பட்டம், பாராட்டு
பயனெதுவும் கருதாமல்
ஊனுருக்கி ஒலிவார்க்கும்
பேரறியா ஒருகுருவி

சொக்குப்பொடி போட்டு
சுண்டிச் சுண்டியிழுக்கும்
பட்டுக் கருவானின்
பகட்டுத் தாரகைகள்

கட்டிப் போடாமல்
கண்களை வருடிவிட்டு,
கண்ணனைக் காட்டுகிற
ககனத்து நீலநிறம்

சற்றும் கருணையின்றி
சுத்தி செய்வேனென்று
பொசுக்கிப் புடம்போடும்
புரட்டாசிச் சூரியன்

விட்டேனா பாரென்று
விரட்டிப் பின்வந்து
கொட்டித் தீர்த்துவிடும்
கார்த்திகை கனமழை...

இத்தனையும் போதாதென்று
நித்தம்நித்தம் நான்பொழியும்
சம்சாரச் சள்ளைகள்
சளைக்காத சர்ச்சைகள்

பத்துப் பதினைந்து
நாளாகப் பெருக்கெடுத்து
மெத்தத் துன்புறுத்தும்
மனச்சுரங்கத் தனித்தேடல்

அத்தனையும் தாங்கிடினும்
சிலிர்க்காமல் சுணங்காமல்
கல்லால நிழல்குருபோல்
காத்திருக்கும் மொட்டைமாடி!...

ஏகாந்தம் எனக்கருளும்
ஏற்றமிகு தோழா!

எத்தனை முயன்றாலும்
ஃகான உனதுறுதி
எள்ளளவும் எனதாகுமோ?

உள்ளத்தலையடங்கி
உன்போல் மனமடங்கி
தெள்ளத்தெளிவு வருமோ?

— மலர்




2000 மார்ச் 12
பிரமாதி மாசி 29
மலர் : 58
இதழ் : 33

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பட்ஜெட்: தீர்க்க தரிசனப் பற்றாக்குறை!

நிதியமைச்சரின் பட்ஜெட் உரை பிரமாதமாகத்தான் இருக்கிறது.

நமது கிராமப் பொருளாதாரம் பலப்பட வேண்டும். தகவல் தொழில் நுட்பம், பயோ டெக்னாலஜி, மருந்து தயாரிப்பு போன்ற துறைகளில் நமக்கிருக்கும் வளம் பேணி வளர்க்கப்பட வேண்டும். பாரம்பரிய தொழில்கள் நவீனமயமாக்கப்பட வேண்டும். அடிப்படை வசதிகள்- சாலைகள், துறைமுகங்கள், ரயில்-விமான போக்குவரத்து, மின் சக்தி போன்றவை- தடையின்றிப் பெருக வேண்டும். ஏற்றுமதி பல்கிப் பெருகி, அயல்நாட்டவர் முதலீடு அதிகரித்து அன்னியக் கடன் சுமை குறைய வேண்டும். செலவுகள் கட்டுக்குள் வரவேண்டும்.

-இவையெல்லாம் நடந்தால் இந்தியா சுவர்க்க பூமியாகிவிடும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், பட்ஜெட்டில் யஷ்வந்த் சின்ஹா விவரித்துள்ள லட்சியங்களுக்கும் அவர் அறிவித்துள்ள வரவு செலவுத் திட்டத்துக்கும் சம்பந்தமே இல்லை.

இத்தனை ஆண்டுகளாகப் பெருகி வந்த பட்ஜெட் பற்றாக்குறையை ஒரே வருடத்தில் சரிக்கட்டிவிட முடியாது என்பது உண்மைதான். ஆனால் ஒவ்வொரு பட்ஜெட்டிலும் பற்றாக் குறையைச் சமாளிக்கும் முயற்சியுடன் பொருளாதாரத்தை மேம்படுத்தும் தீர்க்கதரிசனம் மிக்க நடவடிக்கைகளும் இடம்பெற்றால்தான் கடனும் கஷ்டமும் படிப்படியாகக் குறைந்து நாடு முன்னேற முடியும்.




ஆனால், யஷ்வந்த் சின்ஹா அறிவித்திருப்பவை, பட்ஜெட்டில் விழுகின்ற துண்டுத் தொகையை ஈடுகட்டும் நடவடிக்கைகள் மட்டுமே. 6900 கோடி ரூபாய் கூடுதல் வருமானத்துக்கு இந்த நடவடிக்கைகள் வழி செய்கின்றன.

செலவுக் கணக்கிலோ முக்கியமான இரு அம்சங்கள்: வாங்கியுள்ள கடனுக்கான வட்டித் தொகை; ராணுவச் செலவுக்கான கூடுதல் ஒதுக்கீடு.

மொத்த பட்ஜெட்டில் 27 சதவிகிதம் ராணுவச் செலவுக்கு ஒதுக்கப்பட்டிருப்பது ஏழை இந்தியாவுக்குக் கட்டுப்படியாகாது.

பாதுகாப்பு ஏற்பாடுகளில் அலட்சியம் காட்டக் கூடாது என்பதை ஏற்கலாம். கார்கில் சம்பவத்துக்குப் பிறகு பாகிஸ்தானிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டிய கட்டாயம் விளைந்துள்ளது. ஆனால் பேச்சுவார்த்தை, பண்பட்ட அயலுறவுத் துறை செயல்பாடுகள், முதிர்ந்த, திறமையான ஒற்றாடல்-இவை மூலம் மோதல்களைத் தவிர்க்க முற்படாமல் பராக்கிரமத்தை மட்டும் வளர்த்துக் கொள்வதில் பலனில்லை. அண்டை நாட்டை உசுப்பிவிடவும் அளவில்லாத செலவுகளை இழுத்து விடவுமே அது உதவும்.

பட்ஜெட்டுக்கு பட்ஜெட் அதிகரித்து வந்த ராணுவச் செலவு இம்முறை வரலாறு காணாத வகையில் உயர்த்தப்பட்டிருப்பதை நிதியமைச்சர் குறிப்பிட்டிருக்கிறார்.

செலவுகளைச் சமாளிக்க, 1,12,275 கோடி ரூபாய் கடனாகப் பல்வேறு தரப்புகளிலிருந்தும் திரட்டப்படவிருக்கிறது. இதில் 1,01,266 கோடி ரூபாய் ஏற்கெனவே வாங்கியுள்ள கடனுக்கு வட்டித் தொகையாகச் செலவாகிவிடும்! ஆகமொத்தம் புதிய கடன் வாங்கி பழைய கடனுக்கு வட்டி செலுத்துவதற்கு மேலாக நிதியமைச்சர் அதிகம் செய்துவிட முடியாது.

இவ்வாண்டு பட்ஜெட் கடுமையாக இருக்கும்; கார்கில், ஒரிசா புயல் போன்றவற்றால் நேர்ந்த செலவுகளுக்கு ஈடுகட்டியாக வேண்டும் என்று நீண்ட நாட்களாகவே எச்சரிக்கை செய்து வந்துள்ளது அரசு. அதற்கேற்றாற்போல் அனைத்துத் தரப்பினரையும் இந்த பட்ஜெட் கசக்கிப் பிழிகிறது.




ஏழை-எளியவர்கள் ரேஷன் அரிசிக்கு ஐம்பது சதவிகிதம் அதிகம் செலவழிக்க வேண்டும். மாதச் சம்பளக்காரர்கள் வருமான வரிக்கு மேலாக செலுத்தும் சர்சார்ஜ் பத்திலிருந்து பதினைந்து சதவிகிதமாகியிருக்கிறது. கம்பெனிகள் லாபம் சம்பாதித்து டிவிடெண்ட் வழங்கினால் முன்னிலும் கூடுதலாக டிவிடெண்ட் வரி செலுத்த வேண்டும். நுகர்வோர் செலுத்த வேண்டிய எக்சைஸ் தொகை அதிகரிக்கப்பட்டுள்ளது. விவசாயிகள் யூரியாவுக்கு 15 சதவிகிதம் கூடுதலாகச் செலவழித்தாக வேண்டும். ஏற்றுமதியாளர்கள் இனி வரி செலுத்தியாக வேண்டும். சுருக்கமாகச் சொன்னால் குடிசைவாசிகள் முதல் குபேரர்கள்வரை அத்தனைபேரும் கார்கில் யுத்த செலவுகளைப் பகிர்ந்து கொண்டாக வேண்டும். இதற்காக தேசப்பற்றுள்ள எந்தக் குடிமகனும் தன் சொந்த செலவுகளைக் குறைத்துக் கொள்ளத் தயங்கமாட்டான். ஆனால், வரவுசெலவுத் திட்டத்தில் பிரதான செலவுத் தொகை அரசு செலவினங்கள்தான். அதைக் குறைத்துக் கொள்வதன்மூலம் அரசாங்கமும் கார்கில் யுத்த செலவுகளுக்குத் தனது பங்கைத் தரவேண்டாமா?

அதுதான் நடக்கவில்லை!

'அரசுச் செலவுகள் குறைக்கப்படும்' என்று நிதியமைச்சர் கொள்கை அளவில் அறிவித்திருக்கிறாரேயொழிய எந்த செலவுகள் குறைக்கப்படும், அதன் மூலம் என்ன தொகை மிச்சப்படும் என்ற விவரங்கள் எதுவுமில்லை.

வசதி மிக்கோர் செலுத்தும் நேர்முக வரிகளும் எளியோர் வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி செலுத்துகிற மறைமுக வரிகளும் அரசாங்கச் செலவு என்கிற பிரும்ம ராக்ஷசனின் பசியாற்றவே சரியாய்ப் போய்விடும்.

இந்த பட்ஜெட், தொழில் துறையை முடுக்கி விடவோ, பங்கு மார்க்கெட் வளர்ச்சியைத் தூண்டவோ, பொதுமக்கள் சேமிப்பையும் முதலீட்டையும் பெருக்கவோ எதையும் செய்யவில்லை. இந்த அழகில் ஆண்டுதோறும் 7 முதல் 8 சதவிகிதம் பொருளாதார வளர்ச்சி காண்போம் என்று நிதியமைச்சர் பேசியிருப்பது எந்த தைரியத்தில் என்பது அவருக்கே வெளிச்சம். ●

**தமது அற்புதமான கலைப்படைப்பான 'ராமானுஜர்' நாடகத்துக்காக சமீபத்தில் சரஸ்வதி சம்மான் விருது பெற்றவர் இந்திரா பார்த்தசாரதி. அவரை எஸ்.வி. சேகர் சந்தித்து உரையாடுகிறார் :**

# “நிஜ வாழ்க்கையே

**சேகர் :** மியூசியம் தியேட்டர்ல இந்த 'ராமானுஜர்' நாடகம் போட்டபோது நான் கூட அங்க வந்து பேசினேன். நாங்க பேசினது எல்லாம் கூட புத்தகமா வரப் போறதுன்னாங்க...?

**இ.பா:** ஆமா. ஆனா இது ஏற்கெனவே புத்தகமா வந்தாச்சு. இந்தியிலயும் இங்கிலீஷ்லயும் மொழிபெயர்த்துட்டாங்க.

**சேகர் :** நாடகம் நல்லாத்தான் இருந்தது. ஆனா முக்கியமான நடிகருக்கே ழ, ல, ள எல்லாம் சரியா வரலே.

**இ.பா :** கடைசி வரை வரலே!

**சேகர் :** சோஷியல் ப்ளேன்னா பரவாயில்லே. இந்த மாதிரி நாடகத்துல ஆர்ட்டிஸ்ட் தேர்வின்போது கொஞ்சம் கவனமாத்தான் இருக்கணும். ஆனா மியூசியம் தியேட்டர்ல ப்ளே நடந்தபோது ரெண்டு நாளும் நல்ல கூட்டம்! நீங்க பாண்டிச்சேரி யூனிவர்சிடில டிராமா டிபார்ட்மென்ட்டுக்குத் தலைவரா இருந்தீங்க இல்லே?

**இ.பா :** பழைய துணைவேந்தர் வெங்கட சுப்பிரமணியம், பாண்டிச்சேரிக்கு வந்துடறீங்களான்னு கேட்டார்., தமிழ் புரொபசரா வரச் சொன்னார். வாழ்நாள் பூரா தமிழ் தான்! அதனால டிராமா டிபார்ட்மென்ட் ஆரம்பிச்சா வர முடியும்னு சொல்லிட்டேன். வெங்கடசுப்ரமணியம் கெட்டிக்கார மனிதர். ஆனா அவர் எங்க ஆரம்பிக்கப் போறார்னு நினைச்சேன். நான் எதிர்பார்க்கவே இல்லே. டிராமா டிபார்ட்மென்ட் தொடங்கி வச்சு, என்னை வரவழைச்சார். நான் போனேன். மற்ற புரொபசர்ஸ் எல்லாம் தமிழ் புரொபசரா இருந்துட்டு இப்படி டிராமா டிபார்ட்மென்ட்டுக்கா புரொபசரா வரணும்னு கூட கேலியா கேட்டாங்க!

**சேகர் :** எல்லா டிபார்ட்மென்ட்லயுமே டிராமா பண்றாங்க இல்லே, அப்ப எதுக்குத் தனியா டிராமான்னு ஒரு டிபார்ட்மென்ட்னு கேட்ருப்பாங்க!

**இ.பா :** (சிரித்தபடி) உங்க புது நாடகம் 'பெரியப்பா'வாமே? நான் இன்னும் பார்க்கலே.

**சேகர் :** இன்னிக்கு ஆர்.ஆர். சபால இருக்கு. கட்டாயம் வாங்க. சமகால அரசியலை வெச்சு பண்ணியிருக்கேன்.

**இ.பா :** முதல்ல கூட 'தத்துப்பிள்ளை'ன்னு ஒண்ணு பண்ணீங்க இல்லே?

**சேகர் :** எலெக்‌ஷனுக்கு முன்னாலயே பண்ணினேன். தோத்ததுக்கு அப்புறம் சொல்றது வீரம் இல்லையே! ஜெயலலிதா கவர்ன்மென்ட்டை வச்சுப் பண்ணலே. ஜெனரலா ஹை லெவல் பாலிடிக்ஸ் எல்லாம் சந்திரா சுவாமி வீட்டுலதான் நடந்துதுன்னு கேள்விப்பட்டேன். இங்கே பார்த்தா பிரேமானந்தா! இவங்க ரெண்டு பேரையும் லிங்க் பண்ணேன். கூடவே ஒரு செல்வாக்குள்ள லேடி. ஒரு சினிமா நடிகர். ஒரு அரசியல்வாதி. நிறைய கான்ட்ரவர்சி ஆச்சு. டிராமா பண்ணிட்டு அதையே ஆடியோ காசட்டா பண்ணினேன். கடையை எல்லாம் ஒடிச்சுருவேன்னு ரகளை பண்ண ஆரம்பிச்சாங்க. காசட்டை உடைங்க. கடையை ஏன் உடைக்கணும்னு கேட்டேன்!

**இ.பா:** 'கல்கி'ல 'வேதபுரத்து வியாபாரிகள்' எழுத ஆரம்பிக்கறதுக்கு முன்னால கூட நான் ராஜேந்திரன்கிட்ட கேட்டேன்; நிஜ வாழ்க்கையே பொலிடிகல் சடயராத்தானே இருக்கு; இதைத் தனியா வேற எழுதணுமான்னு!

# "பொலிடிகல் சடயர்தான்!"



**சேகர் :** உடைக்கிற ஆசாமிகள் எல்லாம் படிக்கற ஆசாமிகள் இல்லே! படிக்கறவங்களை ஹாண்டில் பண்றது வேற; படிக்காத மக்களை ஹாண்டில் பண்றது வேற. நல்லா இல்லேன்னு விமர்சனம் எழுதினாக்கூட, 'இவன் என்ன சொல்றது? நான் போய்ப் பார்த்துட்டு வந்து சொல்றேன்'ம்பான் படிச்சவன். இப்ப 'ஹே ராம்' ஏ படம். அதுல கிஸ்ஸிங் ஸீன் இருக்கு. எல்லாரும் கமல் மாதிரி ரெண்டு படமாவது எடுக்கணும்னு நினைக்கறாங்க என்கிறது போய், கமல் சீன் மாதிரி ரெண்டு சீனாவது எடுக்கணும்னு நினைக்க ஆரம்பிச்சிட்டாங்க! அதை டிரெய்லர்ங்கற பேர்ல டிவில காலை ஏழு மணிலேருந்து போட ஆரம்பிச்சிடறான். பசங்க எல்லாம் கார்ட்டூன் பார்க்கிற மாதிரி அதையும் பார்த்துட்டு இருக்காங்க!

**இ.பா :** இல்லே! கிஸ்ஸிங் ஸீனைக் கூட ஏஸ்தடிக்கா காட்டலாமே?

**சேகர் :** சினிமால ஏஸ்தடிக்கா காட்ட முடியும்னு தோணலே. அதை விட்டுட்டு, டிராமாக்கு வருவோம். இங்க டிராமாங்கறதே ரெண்டா பிரிஞ்சுப் போச்சு: சபா டிராமா. சபா இல்லாத டிராமா!

**இ.பா :** உங்களைப் பொறுத்தவரை யூ ஆர் க்ளியர் எபவுட் வாட் யு வான்ட் டு டூ. முழுக்க முழுக்க என்டர்டெயின்மென்ட் தான் உங்க நாடகங்களோட குறிக்கோள். ஆனா எங்க நாடகங்களை 'பாரல்லல் தியேட்டர்'னு முத்திரை குத்திட்ற போது,

ஓ இது டிராமா இல்ல போல்ருக்குன்னு ஒரு நினைப்பை உண்டாக்கிடறாங்க. தில்லில என்னோட 'மழை', 'போர்வை போர்த்திய உடல்கள்' நாடகங்களை தட்சிண பாரத சங்கம் போட்டபோது நல்ல கூட்டம் வந்துது.

**சேகர் :** அட, அதையே இங்க கிருஷ்ண கான சபால போட்ட போதும் நல்லாத் தானே கூட்டம் வந்துது?- நாரத கான சபால கூட ஒரே நாள்ல ரெண்டு ப்ளேன்னு ஒரு டிராமா பெஸ்டிவல் நடத்தினாங்க. அஞ்சரை முதல் ஏழரை வரை நல்ல டிராமா – அதாவது உங்களோடது மாதிரி. ஏழரைக்கு அப்புறம் எங்க டிராமா!

**இ.பா :** இந்த சீரியஸ் ப்ளே, பாரல்லல் தியேட்டர்னு எல்லாம் முத்திரை குத்தாம



''அந்தப் பையனுக்கு ஊசி குத்தினா நீ ஏண்டா அழறே?''
''ஜுரம் எனக்குத்தான் டாக்டர்; அவன், என் கூட வந்தவன்!''
– சீர்காழி வி.ரேவதி

இருந்தா போதும். ஆடியன்சா பார்த்துப் புரிஞ்சுப்பாங்க.

**சேகர் :** நான் ஞாநியோட நாடகங்கள் எல்லாத்துக்கும் போவேன். ஆனா ரெண்டு பேரும் சண்டை போட்டுப்போம். நல்லா திட்டிப்போம். ஆனா நாங்க ஃப்ரண்ட்ஸ்... இவங்க, பிராடக்டை ஆடியன்சுக்குக் கொடுத்துட்டு, தயாரிச்சவங்க தங்களை அதுல இருந்து பிரிச்சுட்டாங்க.

**இ.பா :** வெரி ட்ரூ.

**சேகர் :** அல்லியான்ஸ் பிராங்கைஸ்ல கூட என்னோட 'தத்துப் பிள்ளை'யைப் போட்டேன். நல்ல கூட்டம். செட் எல்லாம் ஒண்ணும் கிடையாது.

**இ.பா :** சின்ன இடமாச்சே?

**சேகர் :** ஆனா கூட்டம்! இதுக்குத்தான் சார் மாக்சிமம் கூட்டம்னாங்க.

**இ.பா :** சபா நாடகத்துக்கும் எங்க நாடகத்துக்கும் போட்டியே கிடையாது. ரெண்டு லயுமே கம்யூனிகேஷன்தான் முக்கியம். நீங்க என்ன சொல்றீங்கங்கறது ஜனங்களுக்கு எட்டணும். அதை மறந்துட்டு, நாங்க ஏதோ இன்டெலக்சுவல்ஸ்; நாங்க சொல்றதை நீங்க புரிஞ்சுக்கணும்கற மாதிரி டிராமா போட்டா, எவ்ரிபடி இஸ் ஹ்யுமிலியேட்டட்!

**சேகர் :** நானும் அதைத்தான் சொல்லுவேன். நான் 13 சபால 15 நாடகம் போடறேன். மீதி எல்லாம் தெருவுல, கோயில் திருவிழாலதான். மக்களுக்கு நேரடியா சென்றடையணும்கறதுதான் முக்கியம். ஒரு ப்ளேக்குப் போயிருந்தேன். ஆறு பேர் குனிஞ்சு, கஷ்டப்பட்டு கையைத் தூக்கினாங்க. எனக்கு ஒண்ணும் புரியலே. எதுக்கு இப்படிப் பண்றாங்கன்னு கேட்டேன். பூவுக்காக இப்படி காட்டறாங்கன்னு விளக்கினாங்க! ரெண்டு ரூபாய்க்கு நாலு முழம் பூ விக்கறபோது, இப்படி எதுக்கு சிரமப்பட்டு, டயத்தையும் வேஸ்ட் பண்ணணும்னு கேட்டேன். இதுல என்ன ஆகுதுன்னா, சொல்ல வர விஷயம் மிஸ் ஆயிடுது.

**இ.பா :** இந்த புரியாத நாடகங்களுக்கு பாரல்லல் தியேட்டர்னு சொல்ல ஆரம்பிச்சுட்டாங்க. ஒரு மிடில் தியேட்டர் இல்லாம போயிட்டுது. அதாவது நல்ல, சீரியஸ் செய்தியையே எல்லாருக்கும் புரியும்படியா சொல்ற நாடகங்களே இல்லை...

**சேகர் :** சில பேர் தமிழ் நாடகம் அழிஞ்சதுக்கு நீங்கதான் காரணமாமேன்னு என்னைக் கேட்டாங்க. 'ராமாயணம் இன்னிக்கும் கூட பிரபலமாத்தான் இருக்கு. ராமன் மாதிரி இராவணனும் அதுல ஒரு முக்கிய காரக்டர். அது மாதிரி என்னை இராவணனா நினைச்சு இப்படிக் கேக்கறீங்களோன்னு கேட்டேன்! ஆர்ட்ங்கறது ஒரு பெரிய ப்ளே கிரவுண்டு. அதுல நான் பாட்டுக்கு ஒரு ஓரத்துல கோலி ஆடிட்டிருக்கேன். ஃபுட்பால் ஆடறவங்க ஏன் என் கூட சண்டைக்கு வரணும்?

**இ.பா :** இப்ப சட்டயர், ஹ்யூமர்னு ரெண்டு வகை இருக்கு. சில சமயம் சட்டயர் காயப்படுத்திடக்கூடும். ஹ்யூமர் அப்படி இல்லே. சம்பந்தப்பட்டவங்களே கூட சிரிச்சுட்டுப் போயிடுவாங்க.

**சேகர் :** பொலிடிகல் சட்டயர்ல என்ன அட்வான்டேஜ்னா, சம்பந்தப்பட்டவரே உக்காந்து பார்த்தாக்கூட, அவர் தன்னைப் பத்திச் சொல்றதா நினைக்கறதே இல்லே.

யாரையோ சொல்றாங்க போல இருக்குன்னு இருந்துடறார்! அதுனாலதான் அவங்க திருந்தறதே இல்லேன்னு நினைக்கறேன்!

**இ.பா:** சிலர் அப்ஸ்ட்ராக்ட் ப்ளே போட றாங்க. அதை 'ஸோ கால்ட் இன்டெ லெக்சுவல்' ஆடியன்ஸ் வந்து பார்க்கறாங்க. அவங்க தங்களை அறிவு ஜீவிகள்னு நினைச் சுக்கறாங்க. அதுனால, புரியலேன்னாக்கூட புரிஞ்சது மாதிரி காமிச்சுக்கறாங்க.

**சேகர்:** இங்கிலீஷ் படம் பார்த்துட்டுச் சிரிக்கற மாதிரி.

**இ.பா:** எனி ப்ளே ஷுட் கம்யூனிகேட்! அப்படி ஆடியன்சுக்குப் புரியலேன்னா, நாம தோத்துட்டதாத்தான் அர்த்தம். டில்லி, மகாராஷ்டிரா, பெங்கால் எல்லா ஸ்டேட் லயுமே, சீரியஸ் டிராமாவும் இருக்கு, லைட், ஹ்யூமரஸ் டிராமாவும் இருக்கு. சொல்ற விஷயத்தைப் புரியும்படியா சொல்றதுல தான் நம்ம புத்திசாலித்தனம் இருக்கு.

**சேகர்:** நீங்க எழுதின எல்லா டிரா மாவுமே டிரமடைஸ் ஆகியிருக்கா, இல்லே கதைகள் எழுதி அப்புறம் டிராமாவா பண்ணியிருக்கீங்களா?

**இ.பா:** முதல்ல எழுதினது 'மழை'. தமிழ்நாட்டுலதான் நான் அறியப்பட்டது நாவலாசிரியனாக. ஆனா டெல்லில நான் அறியப்பட்டது நாடக ஆசிரியன்! நந்தன் கதையை 'கதா-நந்தன்கி' என்று இந்தியில், லக்னோவில் போட்டார்கள். தட்சிண பாரத சங்கம்தான் போட்டது. அவர்களே மழை, ஔரங்கசீப், போர்வை போர்த்திய உடல்கள் எல்லாம் போட்டுருக்காங்க.

**சேகர்:** இப்போ நாடகங்கள் அழிஞ்சிட் டிருக்கு, நலிஞ்சிட்டிருக்குன்னு சொல்றாங் களே, உங்க பதில் என்ன?

**இ.பா:** யாராலயும் எதுவும் அழிஞ் சிடலே. ஆனா அன்னிக்கு 1978ல மியூசியம் தியேட்டர்ல நாடகம் பார்க்க வந்த அதே க்ரௌடுதான் இப்பவும் இந்த 2000லயும் வரது. கூடுதலாவோ, வேற புது ஆடி யன்ஸோ வந்துட்டதா தெரியலே. அதுனால இது யோசிக்க வேண்டிய விஷயம். நாம் நம் கடமையைச் செய்யவில்லையோன்னு! போகட்டும். டீ.வி. சப்போர்ட் இல்லாம வெறும் நாடகத்துல சமாளிச்சிடலாமா?

**சேகர்:** முடியாது சார். டீவில 9 டு 6 நடிச்சா வர பணம், நாடகத்துல வராது. ஆனா நாடகத்துல வர பணத்துல நாங்க 50 பேர் படிப்புக்குச் செலவழிக்கறோம். ஹேண்டிகேப்ட் சில பேருக்கு வண்டி வாங்கித் தரோம்... பை த வே, உங்களோட ஒரு தமிழ் நாடக நூலுக்கு இவ்வளவு பெரிய பரிசும் கௌரவமும் கிடைச்சிருக்குங்கறது பெருமைப்படக்கூடிய விஷயம். ஏன்னா நார்த் இன்டியாவிலிருக்கறவருக்குத்தான் இதெல்லாம் கொடுப்பாங்க...

**இ.பா:** இதுல என்னன்னா, தமிழை ஐசலேட் பண்ணிட்டாங்கன்னு ஒரு குறை வேற சொல்றாங்க. அப்படி எல்லாம் ஒன் னுமே இல்லே. கன்னடம், தெலுங்கு, மலை யாளத்துக்காரர்கள் எல்லாரும் அவங்கவங்க லிட்டரேச்சரை இந்தில அப்பப்ப மொழி பெயர்த்துக் கொடுத்துட்டே இருக்காங்க. நாம் செய்யறோமா?

**சேகர்:** இங்கிலீஷையும் அந்த நிலை மைக்குக் கொண்டு வந்துட்டாங்க!



"அந்த ஊருக்குள் பஸ் விடணும்னு திடீர்னு போராட்டம் பண்ணுறாங்களே, என்ன விஷயம்?"

"ஒரு கலவரம் வந்தா கல் எரியற துக்குக் கூட ஒரு பஸ் இல்லையாம்...!"

– பாளை பசும்பொன்

**இ.பா:** தேவநாகிரி லிபி குரூப்ல இருக்கற இந்தி, மராத்தி, பெங்காலிக்காரங்களுக்கு அதுனால மற்ற தென்னிந்திய மொழிகள்ள என்ன நடக்குதுன்னு தெரியுது. தமிழ்ல புதுசு என்னன்னு தெரிய வாய்ப்பே இல்லே!

**சேகர்:** முப்பத்தைஞ்சு வருஷத்துக்கு முன்னாலயே மொழி அரசியலாக்கப் பட்டுது. எப்போது அரசியலாச்சோ, அப் பவே அதன் வளர்ச்சி தடைப்படத்தான் செய்யும்.

**இ.பா:** பொலிடிக்கலா தமிழைப் பயன் படுத்திக்கிட்டாங்களே ஒழிய உண்மை யிலேயே ஆக்க பூர்வமா அதன் வளர்ச்சிக்கு ஒண்ணும் பண்ணலேங்கறதுதான் வருத்த மான விஷயம்.

தொகுப்பு: **சாருகேசி**
படம்: **வெங்கடேஷ்**

# பேருந்தில் ஒரு காதல்!

“முதல் படமான காதல் மன்னனில், மேன்ஷனும், மெஸ்ஸும்தான் கதைக்களம். அடுத்த 'அமர்க்களத்'தில் சினிவாசா தியேட்டர். இப்போது இயக்கிக் கொண்டிருக்கும் 'பார்த்தேன், ரசித்தேன்' படத்தில் சென்னை மாநகர பஸ்! அடுத்து, பாரதிராஜாவின் மகன் மனோஜ் நடிக்கும் 'அல்லி - அர்ஜுனா'வில்?

“ஊஹூம்... அது இன்னும் கொஞ்ச நாட்களுக்கு சஸ்பென்ஸிலேயே இருக்கட்டும்” என்கிறார் டைரக்டர் சரண்.

நான் முழுக்க சென்னை மாநகர பஸ்ஸில் காட்சிகளை எடுத்து முடித்துவிட்டு, ஒரு முன் இரவுப்பொழுதில், தி.நகரில் சிவாஜி வீட்டுக்கு அருகில் உள்ள ஆபீசில் சாவகாசமாகத் தான் இயக்கிக் கொண்டிருக்கும் படம் பற்றியும், பொதுவாக சினிமா பற்றியும் பேசினார் சரண்.

“பார்த்தேன், ரசித்தேன்... எதை? காதலைத்தானே?”

“ஆமாம்; காதல்தான்! மாநகர பஸ் கூட இந்தக் காதல் கதையில் தன்னைப் பின்னிக் கொண்டிருக்கிறது. பஸ் பயணம் எப்படி நட்புக்கு விதை ஊன்றி, அந்தச் செடியில் எப்படிக் காதல் மலர்கிறது என்பதுதான் கதை. நான் பதினாறு வருடங்களுக்கு முன்னால், கல்லூரியில் படித்த காலத்தில், எங்கு போனாலும் பஸ்தான் என்கிற சூழ்நிலை. அப்போது, நடந்த ஒரு சம்பவம் தான் இப்போது திரை வடிவம் பெற்றுக்கொண்டிருக்கிறது.”

“பதினாறு வருடக் கதை என்றால், முதல் பட வாய்ப்பின் போதே அதை ஏன் படமாக்கவில்லை?”

“என் முதல் படமான காதல்மன்னனை இயக்க வாய்ப்புக் கிடைத்தபோது, பாலசந்தர் என்கிற ஜாம்பவானின் பள்ளியில் ஏழாண்டுகள் படித்த மாணவன் நான். என்னிடமிருந்து வரும் படம் வித்தியாசமான ஒன்றாக இருக்க வேண்டும் என்கிற எதிர்பார்ப்பு இருந்தது. மற்றவர் கவனத்தை என் பக்கம் ஈர்க்கும்படியாகப் படம் பண்ண வேண்டும் என்கிற வெறி என்னிடமும் இருந்தது. எனவேதான் காதல்மன்னன்! வெற்றியும் கிடைத்தது. அடுத்து, அஜித், தனக்கு ஒரு ஆக்ஷன் சப்ஜெக்ட் பண்ணித் தரும்படிக் கேட்டுக் கொண்டதன் பேரில், அமர்க்களம் கதையை நான் எடுத்துக்கொண்டேன். அடுத்து என்ன என்ற கேள்வி எழுந்தபோது, என் மூளையின் ஒரு மூலையில் போட்டு வைத்திருந்த இந்தக் கருவை எடுத்துக் கொண்டேன். இது ஒரு மென்மையான காதல் கதை! சுருக்கமாய்ச் சொல்ல வேண்டுமெனில் தீம் பழசு; சீன் புதுசு!”


• சரண்

“இந்தச் சினிமாக்காரர்களுக்கு, காதலை விட்டால் வேறு எதுவுமே தெரியாதா? இந்த ஒரே விஷயத்தை ஏன் திரும்பத் திரும்ப கட்டிக்கொண்டு அழுகிறீர்கள்?”

“காதல் என்பது மிக அருமையான ஒரு விஷயம். அதில் ஜெயிக்க, கடுமையான முயற்சி தேவை. ஆனாலும் ஜெயிப்பது சுலபமில்லை. அதனால் காதல் கதைகளுக்கு ஒரு ஆழமான அஸ்திவாரம் கிடைத்து விடுகிறது.”

“ஆனால் இன்றைக்கு நடைபெறும் திருமணங்களில் காதல் கல்யாணங்கள் நாலில் ஒரு பங்கு கூட இல்லையே! காதலிக்கிற அத்தனை ஜோடிகளும் காதலில் ஜெயித்து, கல்யாணம் செய்துகொள்வதும் இல்லை; தோல்வியுற்ற

சூரிடி உண்டு. நிச்சயதார்த்தம் நடந்து விட்ட நிலையில், ஒரு பெண் காதலிக்கும் சூழ்நிலை ஏற்படுவதுதான் என் முதல் படமான காதல் மன்னன் படத்தின் கதை. ஒரு கிரிமினலை காதல் எப்படி மென்மைப்



• பார்த்தேன், ரசித்தேன்: பிரசாந்த் & சிம்ரன்

படுத்துகிறது என்பதுதான் அமர்க்களம் படத்தின் கதை. ஆக, நான் நிச்சயமாகச் சொல்ல முடியும், என் படங்களில் சொல்லப்படுவது விடலைக் காதல் இல்லை; மெச்சூர்டு லவ் தான்!"

"என்னதான் புதுமை புதுமை என்று பறை சாற்றிக் கொண்டாலும், சினிமாவின் பார்முலா என்கிற மரபை யாரும் மீறுவதற்குத் துணிவதில்லையே!"

"நான் அதையும் செய்து கொண்டுதான் இருக்கிறேன். அமர்க்களம் படத்தில் அஜித் கேரக்டர், ஒரு கிரிமினல் ஆவதற்கு சிறு வயதில் ஏற்படும் அனுபவங்கள்தான் காரணம். அதுதான் கதைக்கே அஸ்திவாரம். சினிமா மரபுப்படி திரையில் அதைச் சொல்லுகிறபோது, ஒரு நாநூறு அடி நீளம் எடுத்துக் கொண்டு விவரமாய்ச் சொல்வார்கள். நான் அந்த மரபை உடைத்து, வெறும் நாற்பதே அடியில், இம்பாக்ட் துளியும் குறையாதபடி எடுத்தேன். 'ஜனங்களுக்கு இது ரீச் ஆகுமா?' என்று கூட என் அசிஸ்டெண்ட்கள் கேட்டார்கள். 'ஆகும்' என்று உறுதிபடச் சொன்னேன். என் நம்பிக்கை பொய்க்கவில்லை!"

வர்கள் தற்கொலை செய்து கொள்ளவோ, தேவதாஸ் போல மாறவோ இல்லையே!"

"நீங்கள் குறிப்பிடுவது சரிதான். அதனால் தான் காதல் கதைகள் நிறைய வர வேண்டும் என்று நான் கருதுகிறேன். ஜாதி, மதம், அந்தஸ்து, மொழி இந்தத் தடைகளையெல்லாம் மீறி ஏற்படுவதுதான் காதல். அது ஒரு சமுதாய மாற்றத்துக்கு வித்திடும்."

"ஆனால் எந்த சினிமாவில் ஆழமான, அர்த்தமுள்ள காதலைக் காட்டுகிறார்கள்? மேம்போக்கான விடலைக் காதலைத்தானே சொல்லித் தருகிறது தமிழ் சினிமா?"

"இன்றைய சினிமா, காதலை மேம்போக்காகச் சொல்லுவது வாஸ்தவம்தான். என்றாலும், என்னைப் பொறுத்த வரை நான் சொல்ல விரும்பும் விளக்கம் இதுதான். இன்றைய கால கட்டத்தில் படம் பார்க்கும் ரசிகர்கள் மத்தியில் காதல் பற்றி ஒரு மெச்சூரிடி இருக்கிறதோ, இல்லையோ என்னுடைய படத்தில் வரும் காதலர்களுக்கு மெச்

''இன்று ஏகப்பட்ட புதுமுக இளைஞர்கள் டைரக்டர்களாக வருகிறார்கள். ஓரிரண்டு படங்களுடன் காணாமல் போய் விடுகிறார்களே!''

''உண்மைதான். சினிமா பற்றி முறைப்படி படிக்காவிட்டாலும், கிரியேடிவ் ஐடியாக்கள் கொண்ட சிலர், சினிமா ஆர்வம் காரணமாக, கஷ்டப் பட்டு, வாய்ப்பைப் பெற்று விடுகிறார்கள். தன் முழு உழைப்பையும் பயன் படுத்தி, முதல் படத்தை வெற்றி பெறச் செய்து விடுகிறார்கள். ஆனால், முதல் வெற்றி, தொடர் வெற்றிகளுக்கு உத்தரவாதம் தராது. எந்த ஒரு படத்தையும் ஒரு அன்னியனாக இருந்து அலசிப் பார்த்து, நிறை, குறைகளை எடை போடத் தெரிய வேண்டும். கே.பி. சாரிடம் இருந்த ஏழு வருட குருகுல வாசம் எனக்கு அந்தத் திறமையைக் கொடுத்திருக்கிறது. இதற்கு மேல் மற்றவர்களை விமர்சனம் செய்வது நாகரிகமில்லை.''

''அல்லி - அர்ஜுனா பற்றி ஒரு முன்னோட்டம் கொடுங்களேன்?''

''பாரதிராஜாவின் படங்களை முதல் நாள் முதல்காட்சி பார்த்து ரசித்த ரசிகன் நான். பாரதிராஜாவிடமிருந்து அழைப்பு வந்தபோது, எனக்கு அவர் எதற்காக அழைத்தார் என்பது தெரியாது. என்னை மனோஜ் நடிக்க, ஒரு படத்தை இயக்கச் சொன்னது ஒரு இனிய சந்தோஷம். ஒப்புக்கொண்டு விட்ட பின் சும்மா இருக்கக் கூடாது என்பதால், சிந்தனையைக் கிளறிய போது, சட்டென்று தோன்றிய தலைப்பு 'அல்லி - அர்ஜுனா'. ஏவி.எம். நிறுவனம் எடுத்த முதல் படத்தின் தலைப்பும் அதுதான் என்று அறிந்தபோது, சிலிர்த்துப் போனேன். பாரதிராஜாவிடம் தலைப்பைச் சொன்னபோது, 'அட! நான்கூட அல்லி நகரம்தான்! மனோஜ், அல்லி நகரத்திலிருந்து வந்த அர்ஜுனனா?' என்றார்! கிராமத்து இளைஞனாக மனோஜைப் பார்த்தவர்களுக்கு நகரத்து அர்ஜுனன் ஒரு மாறுதல்! புராண கால அல்லி - அர்ஜுனனுக்கு நடந்த உரசல்கள் போல நகரத்து ஜோடி சந்திக்கும் உரசல்கள்தான் கதை!''

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

படம்: **ஸ்ரீஹரி**

'விடுதலையை நோக்கி' என்ற தலைப்பில், இந்திய சுதந்தரப் போராட்ட வரலாற்றை எழுதும் பணியை இந்திய சரித்திர ஆராய்ச்சிக் கழகம் 1973ல் மேற்கொண்டது. தகவல் சேகரித்துத் தொகுக்கும் பொறுப்பை பல பேராசிரியர்களிடம் தந்தது. இதன் கடைசி இரண்டு தொகுதிகள், ஆக்ஸ்போர்டு யூனிவர்சிடி பிரஸ்ஸில் அச்சடிக்கக் கொடுக்கப்பட்டன. திடீரென்று, சரித்திர ஆராய்ச்சிக் கழகம், சொல்லாமல் கொள்ளாமல் திரும்பப் பெற்றுக் கொண்டு விட்டது!

தொகுப்பாளர்களுள் ஒருவர் பேராசிரியர் பணிக்கர். இவரும் வேறு சிலரும் மேலிடத்தின் இந்த திடீர்த் தலையீடு குறித்து கொதித்துப் போயிருக்கிறார்கள். பி.ஜே.பி. அரசு, தான் விரும்பும் வகையில் சரித்திரத்தை மாற்றி எழுத முயற்சி செய்வதாகக் குற்றம் சாட்டுகிறார்கள். சென்னை வந்திருந்த பேராசிரியர் பணிக்கரைச் சந்தித்தோம் :


• பணிக்கர்

# சர்ச்சையான சரித்திரம்!

**● 73லேயே தொடங்கியும், இப் பணி முடிய ஏன் இத்தனை காலதாமதம்?**

ஏராளமான கடிதப் போக்குவரத்து, நாடு முழுதும் இருந்து தருவிக்கப்பட வேண்டிய சரித்திரச் சான்றுகள் பல்வேறு ஆவணக் காப்பகங்களிலிருந்து பெறவேண்டிய ஆவணங்கள், செய்தித்தாள் தொகுதிகள் என்று எல்லாவற்றையும் ஒன்றுசேர்க்க வேண்டியிருந்தது. 1988 வரை இந்தப் பணி தொடர்ந்தது. நான் பொறுப்பேற்றது இதற்குப் பிறகுதான். எங்கள் காசைச் செலவழித்து பெட்ரோல் போட்டுக் கொண்டு சரித்திர ஆராய்ச்சிக் கழகத்துக்குப் போக வேண்டும்! ஒன்றரை லட்சம் பக்கங்களிலிருந்து தகவல் திரட்டி, 3000 பக்கங்களுக்கு எடிட் செய்து, உண்மையான சரித்திரத்தைக் கொடுத்தோம்.

**● நாலு கோடி ரூபாயை நீங்கள் பாழடித்து விட்டீர்கள் என்கிறாரே கழகப் பேராசிரியர் எம்.ஜி.எஸ். நாராயணன்?**

எங்கள் ஒவ்வொருவருக்கும் எழுதுவதற்காகத் தர ஒப்புக் கொண்ட மொத்தத் தொகையே ரூ. 25,000தான். இதைக் கூட, காலஞ்சென்ற பேராசிரியர் பார்த்தசாரதி குப்தாவுக்கு மட்டுமே கொடுத்திருக்கிறார்கள். நானோ, என்னுடன் பணி செய்த சுமித் சர்க்காரோ, இன்னும் ஒரு பைசா கூட வாங்கிக் கொள்ளவில்லை. 1990 வரை செலவழித்த தொகை 1.2 கோடி ரூபாய். இதைக் கூட, சரித்திர உதவியாளர்களுக்காக, ஆராய்ச்சிக் கழகம்தான் நேரடியாகச் செலவழித்திருக்கிறது. எங்கள் பங்கு இதில் துளியும் இல்லை.

**● பார்த்தசாரதி குப்தா தொகுத்த நூல், ஒரே தப்பும் தவறுமாக இருக்கிறது என்கிறாரே எம்ஜிஎஸ் நாராயணன்? குறிப்பாக, காந்திஜி பற்றி சுருக்கமாக இரண்டே வரி...**

அபத்தம். 43-44ல் காந்திஜி சிறையில் இருந்ததால் அவரது தொகுதியில், அந்தத் தகவல்கள், அந்தக் காலகட்டத்தில் அதிகம் இருக்கவில்லை. ஆனால் 55 பக்கங்கள் காந்திஜி பற்றி இருக்கின்றன. 155 ஆவணங்கள் காந்திஜி பற்றி இருக்கின்றன. காந்திஜி பற்றியே இல்லாமல் சுதந்தர வரலாறா?

**● இந்திய சரித்திர ஆராய்ச்சிக் கழகம் முழுக்க மார்க்சிஸ்ட்டுகளின் கையில் சிக்கித் தவிக்கிறது என்கிறார்களே?**

இது அபாண்டம். தொகுப்பாளர்கள் எட்டுப் பேரில் இடதுசாரி சிந்தனையாளர்கள் இரண்டே பேர். மற்ற ஆறு பேரும் நல்ல, சிறந்த, லிபரல் சிந்தனையாளர்கள்.

**● சரித்திரத்தைத் திரித்துக் கூற உங்களைப் போன்ற வரலாற்று ஆசிரியர்கள் முனைந்திருக்கிறீர்கள் என்று பாஜக தரப்பு சரித்திர ஆசிரியர்கள் குற்றம்சொல்லுகிறார்களே?**

சரித்திரத்தைத் திரித்துக் கூற அவர்கள்தான் முனைகிறார்கள். அதனால்தான் இந்தத் தலையீடு. இந்துத்வ அடிப்படைவாதிகளின் அப்போதைய செயல்பாடுகள் அம்பலத்துக்கு வந்துவிடும் என்று பயப்படுகிறார்கள் அவர்கள். 40 களில் இந்து மகா சபா தேச விடுதலைக்காக ஒன்றும் செய்யவில்லை. மாறாக, பிரிட்டிஷ் ஆட்சிக்கு ஆதரவு கொடுத்தார்கள். அந்தக் குட்டு, இந்தப் புத்தகங்கள் வந்தால் வெளிப்பட்டு விடுமே என்று பயப்படுகிறார்கள். இப்போதைய ஆட்சியாளர்கள் அந்த இயக்கத்திலிருந்து வந்தவர்கள்தானே? இந்திய விடுதலைப் போரில் அவர்கள் பங்கு எத்தனை மோசமானது என்று உண்மையான சரித்திரம் காட்டிக் கொடுத்து விடுமே என்பதால்தான் இப்படி ஒரு குறுக்கீட்டைச் செய்திருக்கிறார்கள்!

சந்திப்பு : **எஸ்.வி.என்.**
படம் : **சௌந்தரராஜன்**

# முகவரி

அஜீத் மியூஸிக் டைரக்டர் ஆவது எப்போது என்று ஆடியன்ஸ் உட்பட எல்லோரும் ஆத்மார்த்தமாகக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் நேரம். மகள் ஜோதிகா வாயிலாக அஜீத்-ஜோதிகா காதல் சமாசாரத்தைக் கேள்விப்படும் அப்பா ஜெய்கணேஷ், "ஒரு மியூஸிக் டைரக்டரா நீங்க எப்போ ஆவீங்கன்னு தோராயமா சொல்ல முடியுமா?" என்று இன்னொஸன்டாக அஜீத்தைக் கேட்பதும், "லஞ்சம்-லிஞ்சம் கொடுத்து மியூஸிக் டைரக்டர் ஆக முடியாதா?" என்று ஆர்வமாக விசாரிப்பதும், "நான் பணம் தர்றேன், நல்ல பிஸினஸ் ஒண்ணு - இரண்டு பேரும் சேர்ந்து ஆரம்பிக்கலாமா?" என்று சஜஸ்ட் பண்ணுவதுமாகத் தன் பெண்ணின் எதிர்காலத்தைப் பற்றி அவர் கவலைப்படும் விதம் பியூட்டிஃபுல்!

இதைவிட பியூட்டிஃபுல், கதையின் அனைத்து 'டர்னிங் பாயிண்ட்ஸ்'ம்.

ட.பா.1: ஜோதிகாவின் மேல் தனக்குள்ள காதல் தன் இசை வெறியை அடிப்படையாகக் கொண்டது என்பதை உணர்ந்து, லட்சியமா-காதலா என்று வரும்போது, காதலை விட்டுக் கொடுக்கும் முடிவில் அஜீத் தெளிவாக இருப்பது.

ட.பா. 2: காதலன் லட்சியத்தில் வெற்றி பெறாவிட்டாலும் பரவாயில்லை; எனக்கு அவர் தான் வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்காமல் அப்பாவின் நியாயமான ஆதங்கத்தைப் புரிந்து கொண்டு ஜோதிகாவும் காதலை மறக்கத் துணிவது.

ட.பா.3: தன்னை தாங்கோ தாங்கு என்று தாங்குகிற குடும்பத்திற்குக் கஷ்டம் வந்து விட்டதும் அஜீத் லட்சியத்தை மூட்டை கட்டி வைத்துவிட்டு வேலைக்குப் போகத் தீர்மானிப்பது.

நீட்டி முழக்கும் வசனங்களால் 'டர்னிங் பாயிண்ட்ஸ்'ஐ நியாயப்படுத்தாமல் கதையின் போக்கிலே அதைச் செய்திருப்பது, அதுவும் வலுவாகச் செய்திருப்பது படத்தின் பெஸ்ட் அம்சம்.

இத்தனை விவரமான டைரக்டர், படம் முடிந்து விட்டது என்று எல்லோரும் நிறைவாக எழுந்துவிட்ட பிறகு "சில ஆண்டுகளுக்குப்பின்" என்று கொட்டை எழுத்தில் போட்டு அஜீத்தை மியூஸிக் டைரக்டராக மறுபடியும் காண்பித்து... ஐயோ, ஏன் கேட்கிறீர்கள்? நம் டைரக்டர்களை சில சமயம் புரிந்து கொள்ளவே முடிவதில்லை!

— கிருஷ்ணா சிதம்பரம்



ராஜாவை ஏன் விட்டீர்?

# வட்டமேஜை

✉ சென்னை பல்கலைக்கழக மாணவ, மாணவிகள் நடத்திய 'மாதிரி' பாராளுமன்றம் அசத்தல். நிஜத்திலும் இது போலவே நடக்கக் கூடாதா என்ற ஏக்கம் ஏற்பட்டது.

மொரட்டுப்பாளையம், க.நா. இராஜேஸ்வரன்.

✉ அரசியல் சட்டத்தை மறு ஆய்வு செய்யும் வேகத்தில் ஒரு கால் பங்காவது நாட்டு முன்னேற்றத்தில் காட்டியிருக்கலாமே என்ற தலையங்க யோசனை செவிடன் காதில் ஊதிய சங்கு போல விரயமாகிவிட்டது. இனி அரசியல் சாசனத்தை முறித்துப் போடாமல் விட்டாலே போதும்!

திருவண்ணாமலை, ஆர். ராமசாமி.

✉ அரசியல் சாசனம் அரசியல் ஆக்கப்படக் கூடாதுதான்! யாரும் மறுக்கவில்லை. ஆனால் காலத்திற்கேற்ப, தேவையான மாற்றங்களைக் கொண்டு வருவதில் தவறில்லையே! ஊழல் செய்த, அராஜகம் செய்த அரசியல்வாதிகள் தேர்தலில் நிற்பது -இதற்கெல்லாம் சட்டபூர்வமான மாற்றம் - தடை வர வேண்டும். இந்த மாற்றங்கள் வராத வரை, மக்களுக்கு ஏமாற்றம்தான்!

காஞ்சிபுரம், தென்காசி கணேசன்.

✉ ஹேராம் பட விமரிசனம் அருமை. படத்தின் அத்தனை அம்சங்களையும் அலசி தரமான விமரிசனம் அளித்து விட்டீர்கள். இருப்பினும் இளைய ராஜாவைப் பற்றி இரண்டொரு வார்த்தைகளாவது எழுதி இருக்கலாம்!

திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

✉ யோகியின் 'தாம்பத்யம்' நெஞ்சைத் தொட்ட யதார்த்தமான சிறுகதை.

மேலகிருஷ்ணன்புதூர், கே. பிரபாலிங்கேஷ்.

✉ தெய்வ தரிசனம் பகுதியில் திருநந்திபுர விண்ணகரம் என்ற நாதன் கோவிலின் சிறப்புகளைப் படித்தேன். இந்த இடம் ஒரு காலத்தில் விண்ணை முட்டும் மாடமாளிகைகளும், கூட கோபுரங்களும் சூழ்ந்ததாகவும் சோழ மன்னர்களின் தலை நகரமாகவும் விளங்கியதென்பதை அமரர் கல்கி பொன்னியின் செல்வனில் குறிப்பிட்டுள்ளது நினைவுக்கு வந்தது!

நெய்வேலி, வித்யா தேவராஜன்.

✉ தாத்தா, அப்பா, குரு, தெய்வம் கட்டுரையைப் படித்தேன். யாரிடமும் எதையும் எதிர்பார்க்காமல், சங்கீதக் கலையைக் கேட்பவர்களுக்கெல்லாம், சொல்லிக் கொடுக்கும் செம்மங்குடியின் சிஷ்யரான பி.எஸ். நாராயணசாமி, குருவுக்கு ஏற்ற சிஷ்யர்.

சென்னை-73, கேவி ராமன்.

✉ பி.எஸ். நாராயணசாமி பற்றி அவரது சிஷ்யர்கள் பேசியிருக்கும் பேட்டிக் கட்டுரையில் பி.எஸ்.என். பதினெட்டு ஆண்டுகளாக 'நெரூரில் சதாசிவ பிரும்மேந்திரர் ஆராதனை நடத்துகிறார்' என்று தவறாக இடம் பெற்றுள்ளது. மானாமதுரையில் நடைபெறும் இவ்வாராதனையை நடத்த அவர் கடந்த பதினைந்து ஆண்டுகளாக உதவி வருகிறார்.

சென்னை - 78, கல்கத்தா வி.என். சங்கர்.

✉ மும்பை மசாலா பகுதியில் ஆஞ்சநேயர் சிலையின் புகைப்படம் வெளியிட்டிருந்தீர்கள். 33 அடி சிலை என்ற செய்தி மட்டுமே உள்ளது. அந்த சிலை 55 டன் எடை கொண்ட ஒரே கருங்கல்லில் செதுக்கப்பட்டது. நம் ஊர் முத்தையா ஸ்தபதிதான், 50 சிற்பிகளை உடன் வைத்துக் கொண்டு பத்து மாதங்கள் கஷ்டப்பட்டு உருவாக்கியிருக்கிறார்!

புதுப்பேட்டை, க. இராமலிங்கம்.

கே. பாலச்சந்தர் வழங்கும்

# ஊஞ்சல்



பைரவியும் விஷ்ணுவும் எதிரெதிர் வீட்டில் வசிப்பவர்கள். இரண்டு குடும்பங்களும் நல்ல நட்பு. விதவைத் தாயுடன் வசிக்கும் விஷ்ணு ஏர் இந்தியாவின் உயர் அதிகாரி. பைரவியோ மத்திய குடும்பத்தைச் சேர்ந்த டைப்பிஸ்டாக பணிபுரிபவள். அவளை விட குறைவாக சம்பாதிக்கும் தந்தையும், 12 வயதில் ஒரு தம்பியும். பைரவி விஷ்ணுவை மனதாரக் காதலிக்கிறாள். ஆனால் விஷ்ணுவோ, பாடகியான பல்லவியை பெற்றோர் சம்மதத்துடன் காதலித்து நிச்சயதார்த்தமும் நடக்கிறது.

பைரவிக்கு அதிர்ச்சி! விஷ்ணுவை எக்காரணத்திற்காகவும் இழக்கத் தயாராயில்லை அவள்! ஒரு முடிவுக்கு வருகிறாள் – உடனே பல்லவியுடன் நெருங்கிப் பழகி அவளுடைய தீவிர நட்புக்கு ஆளாகிறாள்! இப்பொழுது தன்னுடைய திட்டத்தை செயல்படுத்த தொடங்குகிறாள். பல்லவியையும், விஷ்ணுவையும் பிரிப்பதற்கு!

அநாமதேய கடிதங்கள், நம்பக்கூடிய கிசுகிசு, விஷ்ணுவின் பேச்சுக்கள் அடங்கிய குறிப்பிட்ட கேசட் – இது போல எத்தனையோ முயற்சிகள் மூலம் அவள் விஷ்ணுவை பல்லவியிடமிருந்து பிரிக்க பார்க்கிறாள். ஏனென்றால் அவள் எக்காரணத்திற்காகவும் விஷ்ணுவை இழக்கத் தயாராயில்லை!

ஆனால் பைரவியின் ஒவ்வொரு முயற்சியும் முறியடிக்கப்படுகிறது! யாரால்?

அவள் விஷ்ணுவை அடைந்தாளா? அல்லது விஷ்ணு தடைகளைத் தாண்டி பல்லவியை மணந்தானா?

விஷ்ணுவை யார் அடைந்தார்கள்?

இந்த இழையில்தான் கதையின் ஓட்டம்! விறுவிறுப்பு!
இது ஒரு இளமையான சங்கீதக் காதல் கதை!
காணத் தவறாதீர்கள்! உங்கள் விஜய் டிவியில்!

கதை, திரைக்கதை & வசனம் : தேவிபாலா

இயக்கம் : சுந்தர் கே. விஜயன்

நடிகர்கள் : எஸ்.பி.பி., சரண், ஷாலினி & ஸ்ரீதுர்கா.




**விஜய் டி.வியில் ஒவ்வொரு செவ்வாய்க்கிழமையும் இரவு 8.30 மணிக்கு**

- ADVT -


• சக்திவேல்

# எதிர்ப்புக்கு என்ன அவசியம்?

**சி**வில் சட்டத் திருத்தத்தை எதிர்த்து சென்னையிலிருந்து டெல்லி வரையிலான வக்கீல்கள் போராட்டம் நடந்து ஓய்ந்தது. என்ன மாற்றங்கள் திட்டமிடப் பட்டன? சொல்கிறார் வழக்கறிஞர் கே. சக்திவேல்:

**நா**ன் காங்கிரஸ்காரன் என்றாலும் பா.ஜ.க அரசால் கொண்டு வரப்படும் இச் சட்டத் திருத்தத்தை வரவேற்கிறேன். இதில் பல விஷயங்கள் இருக்கின்றன:

● கோர்ட்டில் வழக்குகள் தாக்கல் செய்யப்படும்போது எடுத்தவுடன் வழக்கைப் பதிவு செய்ய மாட்டார்கள். இரு தரப்பு வழக்கறிஞர்களும் ஒப்புக் கொண்டால், கோர்ட்டே நடுவர் ஒருவரை ஏற்பாடு செய்து வழக்கை விசாரிக்கச் சொல்லும். கோர்ட் நடவடிக்கைகளில் அனாவசியமாக மாட்டிக்கொண்டு மக்கள் சிரமப்படக் கூடாது என்பதற்காக இந்த ஏற்பாடு. 'நடுவர் வேண்டாம். கோர்ட் மூலம் தீர்த்துக் கொள்கிறோம்' என்றால்தான் வழக்குப்பதிவு செய்யப்படும்.

● வாதியின் மனு கோர்ட் மூலமாகப் பிரதிவாதிக்குப் போய் பதில் மனு பெறுவது வழக்கம். ஆனால் பல சமயங்களில் பிரதிவாதி, வாதியின் மனு வரவில்லை என்று வழக்கை இழுத்தடிக்கலாம். இதைத் தவிர்க்க வாதியிடமே சொல்லி மனுவை ஸ்பீட் போஸ்டிலோ, ஈ-மெயிலிலோ அல்லது கூரியரிலோ அனுப்பச் சொல்லப்படும்.

● வழக்கு இரண்டு மாதத்துக்குள் முடிக்கப்பட வேண்டும். அதாவது மூன்று வாய்தாக்களுக்கு மேல் கிடையாது.

● தீர்ப்பை, பதினைந்து நாட்களுக்குள் கோர்ட் வழங்க வேண்டும்.

● சொத்து மதிப்பு ரூ.25,000 ரூபாய்க்கு மேல் இருந்தால் மட்டும்தான் மாவட்ட கோர்ட்டிலிருந்து உயர்நீதிமன்றத்துக்கு அப்பீல் செய்ய வேண்டும்.

இந்தச் சட்டத் திருத்தங்கள் 99-ம் ஆண்டு நவம்பரிலேயே நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டாலும், அமலாகும் தேதி அறிவிக்கப் படவில்லை. இத் திருத்தங்கள் நடைமுறைக்கு வரும் பட்சத்தில் மக்களுக்கு விரைவாகத் தீர்ப்பு கிடைக்கும். ஜூனியர் வழக்கறிஞர்களுக்கு நிறைய வழக்குகள் கிடைக்கும்.

— ப்ரியன்

## செல்போனுக்குத் தடா!

**ராஜதர்பார் :**

**ரா**ஜீவ் கொலை வழக்கில் தூக்குத்தண்டனை விதிக்கப்பட்ட குற்றவாளிகளின் மனு மத்திய அரசுக்கு வந்திருக்கிறது. இன்னும் சில நாட்களில் தீர்மானமான ஒரு முடிவை அரசு எடுத்தாக வேண்டும். மத்திய சட்டத் துறையோ உள்துறையைக் கை காண்பிக்க, உள்துறை மத்திய அமைச்சரவை முடிவெடுத்து ஜனாதிபதிக்கு அனுப்பும் என்கிறது! இதில் கமுக்கமாக நடந்த விஷயம், எந்தப் பரிந்துரையும் செய்யாமல் தமிழக அரசு பிரேரணையை மத்திய அரசுக்கு அனுப்பியதுதானாம்! இதன் மூலம் ஒரு சர்ச்சையிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம் என்று தி.மு.க. நினைப்பதாகத் தலைநகரில் பேசிக்கொள்கிறார்கள்!

● பா.ஜ.க. தலைவரான குஷாபாவு தாக்கரேவுக்கு உடல்நிலை சரியில்லாததால் தலைவர் பொறுப்பைத் தாற்காலிகமாக கவனித்துவருகிறார் ஜனா. கிருஷ்ணமூர்த்தி. ஜனாவைத் தலைவராக்க எடுக்கப்பட்ட முதல் ஸ்டெப் இது என்கின்றனர் 'தர்பார்' வளாகத்தினர். ஆனால் விவசாயிகளுக்கு வருமான வரி என்று ஏதோ ஜனா சொல்லி வைக்க, எழுந்த சர்ச்சையில் அந்த வாய்ப்பு நழுவி விடும் போலிருக்கிறதாம்! இது கட்சியில் தென்னிந்தியர்கள் வளர்வதைப் பிடிக்காதவர்கள் கிளப்பிய சர்ச்சை என்றும் முணுமுணுப்புகள் கிளம்பியிருக்கின்றன.

● பாராளுமன்ற அவைக்குள் மொபைல் போனுக்குத் தடை செய்திருந்தார் சபாநாயகர். ஆனால் பட்ஜெட் உரை நடந்த போது பல உறுப்பினர்களின் செல்லுலர்கள் சிணுங்கின. கல்பனாத்ராய் அவைக்குள்ளேயே போனில் சப்தமாய்ப் பேசி வைக்க, காவலர்களுக்கு தர்மசங்கடம்! இனிமேல் இப்படி செய்தால் 'பிடுங்கிடுவோம்' என்று எச்சரித்திருக்கிறார்களாம்!

— இந்திரப்ரஸ்தன்


• ஜனா கிருஷ்ணமூர்த்தி

# தத்துவம்

இப்போது நமது கல்லூரிகளில் மட்டுமல்ல, எந்தப் பள்ளிக் கூடத்தை எடுத்துக் கொண்டாலும் கம்ப்யூட்டர் கல்விதான் மிகச் சிறந்த கல்வி என்பது போலவும் அப்படியொரு சிறந்த கல்வியைத் தாங்கள் தருவதாகவும் விளம்பரப்படுத்திக் கொண்டிருப்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. மதச் சார்புள்ள கல்வி நிறுவனங்கள் கூட இப்படி விளம்பரப்படுத்திக் கொள்வது மேலும் ஆச்சரியமான விஷயம்!

கம்ப்யூட்டரைக் கற்றுத் தரட்டும்; அல்லது கத்தரிக்காய் நறுக்குவது பற்றியும் கற்றுத் தரட்டும். மருத்துவமாகட்டும் பொறியியல் ஆகட்டும். எதுவாக இருந்தாலும் அதைக் கற்றுக் கொள்வதற்கும் கற்றதை இந்தச் சமுதாய வளர்ச்சிக்காகப் பயன்படுத்துவதற்கும் இவற்றோடு தன்னையும் மேம்படுத்திக் கொண்டு, உண்மையை நோக்கிப் பயணம் செய்வதற்கும் இவை எல்லாவற்றுக்கும் மேலாக வாழ்க்கையை மகிழ்ச்சியாக அனுபவிப்பதற்கும் ஓர் அடிப்படைக் கல்வி தேவை. அதுதான் தத்துவக் கல்வி.

இந்தத் தத்துவக் கல்வி எல்லாப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் அவசியம் இருக்க வேண்டும். கலைக் கல்லூரிகளில் மட்டுமல்ல; மருத்துவ, பொறியியல் கல்லூரிகளிலுள்ள மாணவர்களுக்கும் கற்றுத்தரப்பட வேண்டும். அப்போதுதான் எந்த வேலைக்குச் சென்றாலும் அந்த வேலையில் ஒருவன் சிறந்து விளங்க முடியும். இதைப் பிற நாடுகளில் செய்கிறார்கள். பிற மாநிலங்களில் கூட ஓரளவுக்குச் செய்கிறார்கள். நாம்தான் செய்வதில்லை என்பது நமது சந்ததியினருக்கு நாம் செய்யும் மிகப் பெரிய துரோகம் என்றே கருதுகிறேன்.

தத்துவம் என்பது ஏதோ வாழ்க்கைக்கு உதவாத விஷயம் போலவே நாம் செய்து விட்டோம். உண்மை அதுவல்ல. தத்துவம் என்பது ஐந்து விஷயங்களை உள்ளடக்கியது.

1. அளவையியல் – சிந்தனைகளை ஒழுங்குபடுத்துவது (Logic), 2. அறவியல் – செயல்பாடுகளை ஒழுங்குபடுத்துவது (Ethics), 3. அறிவு அறிவியல் – எந்த ஒன்றையும் அறிந்து கொள்வது எப்படி என்று அறிவது (Epistemology), 4. புலன் கடந்த மெய்யியல் – பிறப்புக்கு முன்பும் இறப்புக்குப் பின்பும் உள்ளதை ஊகித்து அறிதல் (Metaphysics), 5. அழகியல் – உண்மையான பயன் துய்க்க அறிகிற அறிவு (Aesthetics). இந்த ஐந்தும் சேர்ந்ததுதான் தத்துவம்!

இதை நமது ஆட்சியாளர்கள் முழுமையாகப் புரிந்து கொள்ளாததன் விளைவுதான் நமது பாடத் திட்டத்தில் இடம்பெறாமல் போய்விட்டது என்று நான் கருதுகிறேன். தத்துவம் மதம் சம்பந்தப்பட்ட விஷயம் என்று அதை



பேராசிரியர் பெரியார்தாசன்

ஒதுக்கி விடக்கூடாது. அது அறிவு சம்பந்தப்பட்ட விஷயம்; வாழ்க்கை சம்பந்தப்பட்ட விஷயம்.

பி.ஏ. பொருளாதாரம் படித்த எனக்குத் தத்துவத்தில் எப்படி நாட்டம் வந்தது? நான் பி.யு.சி.யில் லாஜிக்கை ஒரு பாடமாகப் படித்தேன். ஆனால் தேர்வில், எல்லாப் பாடங்களிலும் வெற்றியடைந்த நான், லாஜிக்கில் மட்டும் தோல்வியடைந்து விட்டேன். அதனால், மீண்டும் அதைப் படித்துத் தேர்வெழுத வேண்டிய கட்டாயம்.

மறுபடியும் அதை நான் படிக்கும் போது எனது ஆசிரியர், 'லாஜிக்கை வெறுமனே தேர்வுக்கென்று நினைத்துப் படிக்காதே. மனப்பாடமும் செய்யாதே. அதையொரு கதை போல எண்ணிப் படி. வெறும் பாடப் பகுதிகளை மட்டும் படிக்காமல், லாஜிக்கையே படி" என்றார்.

நானும் அதன்படியே படித்தேன். மீண்டும் எழுதிச் சுலபமாக வெற்றி பெற்றேன். பிறகு பி.ஏ. பொருளாதாரத்தில் சேர்ந்தாலும் கூட லாஜிக் என்பது என்னை இழுத்துக் கொண்டேயிருந்தது. விளைவு? கல்லூரி வகுப்பில் பொருளாதாரம் படித்தாலும் பிற நேரங்களில் லாஜிக் நூல்களையும் தொடர்ந்து தத்துவ நூல்களையும் படிக்க ஆரம்பித்து விட்டேன். எனவேதான் பி.ஏ. முடித்ததும் எம்.ஏ. பாடத்தைத் தத்துவப் பாடமாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். பாடத் திட்டத்துக்கும் அப்பால் பல நூல்களை நான் படித்ததால் எம்.ஏ.யில் கோல்டு மெடலிஸ்ட்டானேன். உடனே ஆசிரியர் வேலையும் கிடைத்தது!

இது ஒருபுறம் என்றால், தத்துவத்தை நான் பயிலப் பயில என் பார்வை மதம் கடந்த மெய்ப்பொருளைத் தேடுகிற பார்வையாக விரிந்தது. அதனால்தான் பெரியார் அவர்களிடமான ஈர்ப்பும், அவர் பேசுகிற – எழுதுகிற விஷயங்களை நமது தத்துவ இயலோடு ஒப்பிட்டுப் பார்த்துத் தெளிவு படுத்திக் கொள்கிற அறிவும் எனக்கு அதிகரித்துக் கொண்டே வந்தது.

பெரியார், இந்தப் படைப்புக் கடவுள் மறுப்புக் கொள்கையை எங்கிருந்து எடுத்துக் கொண்டிருப்பார் என்று யோசிக்க ஆரம்பித்தேன்.

இந்த உலகம் இயங்கிக் கொண்டிருக்கிறது என்பதை நாம் நேரடியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். அப்படியானால் இந்த இயக்கம் எங்கிருந்து தொடங்கியிருக்கும் எங்கே போய் முடியும் என்கிற கேள்விகள் நமக்குள் எழுவது இயல்பு.

இயங்குவது கண்கூடு என்றால், தொடக்கம் எங்கே என்று மனிதன் தனது அறிவால் தேடினான். அப்படி ஒரு சாரார் தேடித் தேடி ஒரு முடிவுக்கு வந்ததுதான் கடவுள். கடவுள்தான் எல்லாவற்றையும் படைத்தார். அவர்தான் ஒவ்வொரு அணுவையும் இயக்கிக் கொண்டிருக்கிறார் என்பது அவர்கள் முடிவு. இதை மெய் ஞானம் என்கிறார்கள்.



இன்னொரு சாரார் அறிவியல் பூர்வமாகத் தேடிக் கொண்டிருப்பவர்கள். அதுதான் பரிணாமக் கொள்கை. ஆனாலும் இவர்கள் இதோடு திருப்தியடைந்தவர்கள் இல்லை. இன்னும் இன்னும் தேடிக் கொண்டேயிருப்பவர்கள்.

இந்த இரண்டுக்கும் இடைப்பட்டவர்களும் இருக்கிறார்கள். அவர்கள்தான் கருத்துமுதல்வாதிகள். இவர்கள் கடவுள்

# புறம்போக்கா? வளைச்சுப் போடு!



எங்காவது புறம்போக்கு இடம் இருந்தால், அதை அரசியல்வாதிகள் விட்டு வைப்பதில்லை என்பதற்கு ஆலந்தூர் நகராட்சியைச் சேர்ந்த நங்கநல்லூரிலிருக்கும் இந்த இடமே சாட்சி.

படத்திலுள்ளது புறம்போக்கு இடம். அதை பொதுக் காரியங்களுக்குப் பயன்படுத்துவதுதான் நியாயம். ஆனால் பாருங்கள், காலியிடத்தின் நடுவே குடிசைகள் போட்டிருக்கிறார்கள். யார் போட்டிருப்பது? அரசியல்வாதிகளின் நம்பிக்கையான ஆட்கள்தான் போட்டிருக்கிறார்கள். நாளடைவில் அந்த இடம் தங்களுக்கே சொந்தம் என்று வழக்குத் தொடுப்பார்கள். அவர்களின் அந்த வழக்கு ஜெயிக்கிற வகையிலேயே நகராட்சி ஒப்புக்கு வாதாடும். அப்புறமென்ன! இடம் சம்பந்தப்பட்ட நபருக்கே சொந்தமாகி விடும். பிறகு அதை பொதுமக்கள் யாருக்காவது விற்று, வரும் தொகையை சர்வகட்சியினரும் சமமாகப் பிரித்துக் கொள்வார்கள். அதுதான் இங்கேயும் நடக்கிறது. இந்த இடத்தைச் சுற்றியுள்ள சில வீடுகள் இப்படித்தான் கட்டப்பட்டிருக்கின்றன.

இதெல்லாம் தவறு. இந்த இடம் அப்படியல்ல என்று நகராட்சியினர் நம்பும்படி மறுப்பார்களானால், முதலில் சந்தோஷப்படுவது நாம்தான். செய்வார்களா?

**— பிரின்ஸ்**

என்று ஒருவர் இருக்கிறார் என்கிற மெய்ஞானத்தை ஒப்புக் கொள்ளாதவர்கள். ஆனாலும் இந்த இயக்கத்துக்கு என்ன காரணம், எது காரணம் என்று தேடுவதற்கான வழிகளைச் சொல்லிக் கொடுப்பவர்கள்.

இந்தக் கருத்து முதல்வாதத்திலும் இரண்டு வகை உண்டு. அவை, அகக் கருத்து முதல் வாதம், புறக் கருத்து முதல்வாதம். அகக் கருத்து முதல்வாதத்துக்கு ஒருவரை உதாரணம் காட்ட வேண்டுமானால், ஆதி சங்கரரைச் சொல்லலாம். புறக்கருத்து முதல்வாதிக்கு காரல் மார்க்ஸைச் சொல்லலாம்...

சரி, இந்தியத் தத்துவம் என்பது இதில் எந்த வகையைச் சேர்ந்தது என்றால், கருத்து முதல்வாதத்தைச் சார்ந்தது. காரணம், இந்தியத் தத்துவம் என்பது எந்த இடத்திலும் படைப்புக் கடவுள் ஒன்று உண்டு என்றோ, அந்தக் கடவுள்தான் இந்த இயக்கத்துக்குக் காரணம் என்றோ ஒப்புக் கொண்டுவிடவில்லை. ஆனாலும் இறைவனை அதாவது மேலான ஒன்றைத் தேடு என்கிறது. இன்னும் எளிமையாகச் சொல்வதென்றால், நமது தத்துவம் என்பது இதுவெல்லாம் கடவுள் இல்லை என்றுதான் பட்டியலிடுகிறதே தவிர, இதுதான் கடவுள் என்று எதையும் குறிப்பிட்டுச் சொல்லவேயில்லை.

இந்திய தத்துவ தரிசனங்கள் என்று, சாங்க்யம், யோகம், மீமாம்சம், நியாயம், வைசேசிகம், வேதாந்தம் என்று ஆறு விஷயங்களைச் சொல்லுவார்கள். இந்த ஆறிலும் படைப்புக் கடவுள் என்ற ஒருவர் ஒப்புக் கொள்ளப்படவேயில்லை.

நமது தத்துவ தரிசனங்களுக்கு மூல வேராகச் சொல்லப்படுவது சாருவாகம். சாருவாகம் என்பது எதையும் கேள்வி கேட்பது. பாரபட்சமில்லாமல் எல்லாவற்றையும் கேள்விக்கு உட்படுத்துபவர்கள்தான் சாருவாகர்கள் என்பவர்கள். அவர்களில் பிரகஸ்பதி என்பவர் மிக முக்கியமானவர். ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே அவர் படைப்புக் கடவுளை ஒப்புக் கொண்டவரில்லை. ஆனாலும் அவர், எந்த ஆஸ்திகராலும் நிராகரிக்கப்பட முடியாத நாஸ்திகர்!

ஆக, இங்கே பெரியார் மட்டும்தான் கடவுளை எதிர்க்கிறார் என்பது போன்ற கருத்துப் பரவுவதற்கு என்ன காரணம்? சொல்லப் போனால், இந்திய தத்துவங்களுக்கு எதிராகப் பெரியார் எதையும் போதித்து விடவில்லையே! அப்படியானால் பெரியாரின் படைப்புக் கடவுள் மறுப்பு என்பது உண்மையில் யாருக்கு எதிரானது?

(தொடரும்)

# பெற்றவள் பற்றிய குறிப்புகள்

மார்ச் 8 – மகளிர் தினம்

முப்பத்து நாலு, முப்பத்து ஐந்து, முப்பத்து ஆறு... மொத்தம் முப்பத்து ஆறு கர்ப்பிணிகள் காத்திருக்கிறார்கள் என்று சேது எண்ணினான். உண்டோ, இல்லையோ என்கிற சந்தேக கேஸில் இருந்து - இப்பவோ அப்பவோ என்கிற நிறைமாத கேஸ் வரையில் டாக்டரின் பார்வைக்காக. கூடவே ஆதரவாக அம்மாக்கள். பிள்ளைதாச்சிப் பெண்களை தோளில் சாய்த்துக் கொண்டு, அவ்வப்போது பாட்டிலில் இருந்து தண்ணீர் கொடுத்துக் கொண்டு... கணவர்கள் கவலையோடு மனைவி பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு இருந்தால், முதல் பிரசவம். வாட்சைப் பார்த்துக் கொண்டு, டாக்டர் ரூம் கதவு திறக்குமா என்ற எரிச்சல் முகத்தில் தெரிய வராந்தாவில் நடை பயின்றால், இரண்டாவது பிரசவம். காலம் காலமாக கன்சல்டேஷனுக்குக் காத்திருப்பது போலிருந்தது சேதுவுக்கு. பக்கத்தில் இருந்த ஸ்வேதாவைப் பார்த்தான். இது ஸ்வேதாவுக்கு ஏழாவது மாதம்.

'பசிக்கிறது சேது' என்றாள் ஸ்வேதா. தனியாக விட்டு விட்டுப் போய் ஏதாவது வாங்கி வருவதா, அதற்குள் டாக்டர் கூப்பிட்டால் என்ன செய்வது என்று குழம்பினான் சேது. கிளம்பும்போது, ஒரு எவர்சில்வர் டப்பாவில் தயிர் சாதம் பிசைந்து வந்தாள் அம்மா. 'சும்மா இரு' என்று அவளை அடக்கிவிட்டு வந்தாயிற்று. அம்மா கொஞ்சம் அசடு என்பது அவன் அபிப்பிராயம். சினிமா, அலுவலக பார்ட்டி என்று எங்கே போனாலும் கையில் ஏதாவது கட்டிக் கொடுக்கிறேன் என்பாள். காலை பரபரப்பில் வந்து 'வெண்டைக்காய் குழம்பு, கத்தரிக்காய் கூட்டு செய்யவா, கத்தரிக்காய் குழம்பு, வெண்டைக்காய் கறி செய்யவா என்பாள். 'ரொம்ப முக்கியம் இப்போ' என்று சேது கத்துவான். சேதுவின் நண்பர்கள் யார் வந்தாலும் தம்ளர் காப்பியும் பலகாரமுமாய் வந்து நின்று விடுவாள் உபசாரம் செய்ய. அவர்கள் வீட்டில் யார் யார் இருக்கிறார்கள், கார்ப்பரேஷன் தண்ணீர் எப்போது வரும், வீட்டில் பெரியவர்கள் நோய், நொடி இல்லாது இருக்கிறார்களா, பூர்வீகம் எந்தப் பக்கத்து ஊர்,

என்ன கோத்திரம் என்று நீள மாய் விசாரிக்க ஆரம்பிப் பாள். கேள்விகள் பலவற்றுக் குப் பதில் தெரியாது நண்பர் கள் தர்மசங்கடமாய்ச் சிரித்து வைப்பார்கள். அவர்கள் போனவுடன் சேது கத்து வான். 'நீ வந்து உபசாரம் செய்யலைன்னு யார் அழுதா' என் பான். அடுத்த முறை நண்பர்கள் வரும்போது அம்மாவுக்கு இது எதுவும் ஞாபகம் இருக்காது. 'ஏம்பா, உன் தங்கைக்கு ஏதாவது வரன் தகைஞ்சுதா, பார்க்கறாங்களா' என்று அடுத்த நண்பனிடம் ஆரம்பித்து விடுவாள்.

ஸ்வேதாவுடன் திருமணம் நிச்சயம் ஆனவுடன் சேது அம்மாவை இன்னும் அவமானமாய் உணர்ந்தான். ஸ்வேதா வின் அம்மா ஏதோ காலேஜில் லெக்சரராய் வேலை செய்பவர். புது டெலிகாம் பாலிஸியிலிருந்து ஸாப்ட் வேர் கம்பெனி ஷேர்கள் ஏன் விலை ஏறுகிறது என் பது வரை விவாதிக்கக்கூடியவர். குடும்பமே ரொம்ப நாசூக்கு அதிகம். இவர்களுக்கு எல்லாம் தலை அரிப்பு, தும்மல், ஏப்பம் இதெல்லாம் வரவே வராதா என்று சேது வியப்பான். மனைவி யின் குடும்பத்தாரிடையே தன் இமேஜ் பாழாகாது இருக்க, வர வர அம் மாவை ரொம்பக் கடுமையான வார்த் தைகளால் திட்டும்படி ஆகிவிடுகிறது. இன்று காலை கூட தயிர் சாத டப் பாவை நீட்டிய அம்மாவை 'சும்மா கிட' என்று கத்தும்படி ஆகிவிட்டது. இவன் கத்தினால் அம்மா விக்கித்தாற் போல ஆகிவிடுகிறாள். ஆனால் என்ன செய்ய?

'ஸ்வேதா சேதுராமன்'- அழைப்பைக் கேட்டு டாக்டர் அறைக்குள் நுழைந்தனர்.

'ஸ்வேதா, எப்படி இருக்கிறீர் கள்?' டாக்டர் வழக்கமான விசா ரிப்புடன் பரிசோதனையைத் தொடங்கினார்.

"சேதுராமன், உங்கள் மனைவி நார்மலாக இருக்கிறார்கள். இதே உடல் நிலை தொடர்ந்தால், நார்மல் டெலிவரி தான் ஆகும். இந்த மருத்துவமனை தொடர்ந்து கணவர்கள் பிரசவத்தில் பங்கேற்க வேண்டும் என்று வலியுறுத்தி வருகிறது. மனைவியோடும் குழந்தையோடும் ஏற்படும் நீடித்த உறவுக்கு இது வழிவகுக் கும். எனவே பிரசவம் நடக்கும் லேபர் ரூமில் நீங்களும் இருக்க வேண்டும்."

டாக்டரின் அழகான ஆங்கிலம் சேது வுக்குப் புளித்து வழிந்தது. 'ஆஸ்பத்திரி வாசனை எனக்கு வாந்தி வரும், ரத்தத்தைப் பார்த்தாலே மயக்கம் வரும்' என்று சொல் வதற்கு பதிலாக 'ஓ ஷ்யூர். இட்ஸ் மை பிளஷர்' என்றான்.

**பாரதி பாஸ்கர்**

விரைவில்...

# தமிழ் வார இதழ்

விவரங்கள்? வெயிட் ப்ளீஸ்!

'பிரசவ ரூமில் அப்பாக்கள் இருப்பது யூ.எஸ்ஸில் ரொம்ப சகஜம்' என்று மாமியார் அபிப்பிராயம் சொல்லவே, தன் கருத்தை விழுங்கினான் சேது. தன் அம்மாவை மிரட்டி விழிப்பது போல் ஒரு பார்வை பார்த்தான். அம்மாவுக்கு அதன் அர்த்தம் தெரியும். 'நீ பேசியது அதிகப்படி. வாயை மூடிக்கொள்' அல்லது 'உன் அபிப்ராயத்தை யாரும் கேட்கவில்லை' அதுவும் இல்லையென்றால் 'வீட்டுக்கு வா பேசிக் கொள்கிறேன்'.

'ஆன்ட்டி, நீங்க சொன்னது ரொம்ப சரி. அமெரிக்காவில் இது ரொம்ப சகஜம்' என்றான் அங்கேயே பிறந்து வளர்ந்தது மாதிரி.

'இது என்னடா கூத்து' என்று இரண்டு கைகளையும் தட்டி அம்மா முகவாயில் வைத்தது சேதுவுக்கு அவமானமாய் இருந்தது.

"எங்க நாளிலே குழந்தை பிறந்து மூணு மாசம் வரைக்கும் உங்க அப்பா பக்கத்திலே கூட வந்ததில்லை. வேற டாக்டரைப் பாரு" என்றாள் சப்தமாக.

சேதுவுக்குக் கூட அப்படித்தான் தோன்றியது. பிரசவத்தில் அப்பாக்களின் வேலை குழந்தை பிறந்ததும் சாக்லேட் கொடுப்பது மாத்திரமே என்று அவன் நினைத்திருந்தான்.

நாள் நெருங்க நெருங்க ஸ்வேதாவை விட சேதுவுக்குத்தான் டென்ஷன் எகிறியது. அவள் பாட்டுக்கு ஜாலியாக அம்மா வீட்டில் டீ.வி.பார்த்துக் கொண்டு, காற்று அடைக்கும் பலூன் போல நாளுக்கு நாள் உப்பிக் கொண்டு வந்தாள். 'சரி, ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆனவுடன், ஆபீஸுக்கு ஃபோன் வரும். பல்லைக் கடித்துக் கொண்டு அரைமணி நேரம் லேபர் ரூமில் பேருக்கு நிற்கலாம். பிறகு பாப்பாவை

# வரலாற்றிலேயே முதல்முறையாக

## ஒரு புதிய முயற்சி!

### கட்டுக்கடங்காத ஆர்வமுடன் வாரம் தோறும் வழிமேல் விழி வைக்கப் போகிறீர்கள்!

யும் ஸ்வேதாவையும் வீட்டிற்கு இரண்டு நாளில் கூட்டி வர வேண்டியதுதான் என்று நினைத்தவனைப் பார்த்து 'அரைமணியில் பிர சவமா, மகனே நீ ஒழிந்தாய்' என்று மூலையில் விதி சிரித்தது.

டாக்டர் சொன்ன நாளுக்கு இருபது நாட் களுக்கு முன்னால் ஸ்வேதாவின் சித்தப்பா விற்கு அறுபதாம் கல்யாணம் வர, 'ஒரே ஒரு நாள். நீங்கள் துணையிருங்கள் சேது - இப் ஹர் கம்பெனி' என்று மாமியாரும் மாமனா ரும் போய்விட, சேது அவர்கள் வீட்டில் தங்கி னான். அன்று இரவு சரியாகப் பத்து மணிக்கு ஸ்வேதாவுக்கு சங்கடமாய் இருக்கவே ஹாஸ்பிடலுக்குப் போனார்கள். "பெரியவங்க யாரும் வரலையா... வீட்டிலிருந்து ஒரு சாமான் இல்லாம வந்திங்களாக்கும். போய் காட்டன், ஸானிட்டரி பேட், பழைய துணி எல்லாம் கொண்டு வாங்க" என்று கடுப்படித்தாள் தூக் கம் கலைந்த நர்ஸ். வேறு வழியில்லாமல் அம்மாவுக்கு ஃபோன் செய்து எல்லாம் கொண்டு வரச் சொல்லவும், கூடவே வேப் பிலை, கர்பரட்சாம்பிகை பிரசாதம் கொண்டு வருவதாகச் சொன்ன அம்மாவை பாதியில் கட் செய்து, மாமனாரின் செல்ஃபோனில் அவ ரைப் பிடித்து விஷயத்தைச் சொன்னான். இதற்குள் ஸ்வேதா முனக ஆரம்பித்தாள்.

"எப்போ குழந்தை பிறக்கும் சிஸ்டர்?"

"அது ஆவும் இன்னும் எட்டு மணி நேரம். நீங்க சும்மா தொந்தரவு பண்ணாதீங்க."

வலியின் உச்சம் எட்ட எட்ட ஸ்வேதா வின் முனகல் ஒரு அடிபட்ட மிருகத்தின் உறு மல் போல ஆனது. வலி ஒரு பெண்டுலம் கடி காரம் போலக் குறித்த இடைவெளியில் வந் தது. முக்கால் மணிக்கு ஒரு முறை, அரை மணிக்கு ஒரு முறை, இருபது நிமிடத்திற்கு ஒருமுறை... 'டாக்டர் எப்போ வருவாங்க?' என்று முப்பது தடவை கேட்ட பிறகு 'வலி எடுத்த அப்பால வருவாங்க' என்ற நர்ஸ், 'அப்போ இது வலி இல்லையா' என்று எகிறிய சேதுவை, 'டென்ஷன் பண்ணாதீங்க சார். லேபர் ரூம் போன பின்னாலதான் டாக்டர் வருவாங்க' என்று அடக்கினாள் நர்ஸ். ஒருவழி யாக நடு ராத்திரி இரண்டு மணிக்கு லேபர் ரூம் என்று சொல்லப்படும் பிரசவ அறையை வாழ்வில் முதல் முறையாகப் பார்த்தான். அசப்பில் சித்திரவதைக் கூடங்களை நினைவு படுத்திய அறையின் நடு மேடையில் ஸ்வேதா படுக்க வைக்கப்பட்டாள்.

"என்ன வேடிக்கை பார்க்கவா வந்தீங்க? ஹெல்ப் ஹர். தலையைத் தாங்கிப் பிடிங்க" என்றார் டாக்டர்.

அடுத்த ஆறு மணி நேரங்கள். லேசாக குரல் உயர்த்துவதே அநாகரீகம் என்று நினைக் கும் ஸ்வேதா, அமானுஷ்யமான பயங்கரக் குரலை எழுப்பி இரவின் அமைதியைக் குலைத்த ஆறுமணி நேரங்கள்...

"ஆண் குழந்தை. ஆரோக்கியமா இருக் கான்" என்று டாக்டர் சொன்னபோது சேது மயங்கி விழத் தயாராயிருந்தான். குழந்தை சுத்தம் செய்ய எடுத்துப் போகப்பட, தடுமாறி வெளியே வந்தான். வாழ்த்துச் சொல்ல நீண்ட கைகளுடன் புன்னகை செய்து கொண்டிருந்த மாமனார், மாமியாரை ஒதுக்கி, தள்ளி நின்று கொண்டிருந்த அம்மாவிடம் போனான் சேது.

அவள் தோளில் சாய்ந்து அவன் அழுத போது, புலம்பினாள்.

"இதுக்குத்தான் அப்பவே சொன்னேன். இந்த டாக்டர் வேண்டாம், மாத்திடுன்னு..."

இப்போது அம்மாவிடம் அவனுக்குக் கோபமே வரவில்லை. ●




இருபத்து எட்டாம் அத்தியாயம்

## பாதாளப் பாதை

நாற்புறமும் நன்றாகப் பார்த்துவிட்டு ரவிதாஸன் திறந்திருந்த நிலவறைக் கதவைச் சுட்டிக் காட்டிச் சோமன் சாம்பவனை அதன் உள்ளே போகச் சொன்னான்.

"முதலில் இருட்டில் கண் தெரியாது. அதற்காகக் கதவின் அருகிலேயே நின்றுவிடாதே! உள்ளே கொஞ்சம் தூரமாகவே போய் நின்று கொள்!'' என்றான்.

சோமன் சாம்பவன் நிலவறைக்குள் புகுந்ததும் அவனை இருள் விழுங்கி விட்டது போலிருந்தது.

பிறகு, ரவிதாஸன் நடைபாதை வழியாகத் திரும்பி நந்தினி தேவியின் வஸந்த மண்டபம் வரையில் சென்றான். அங்கிருந்து பழுவேட்டரையரின் அரண்மனையைப் பார்த்துக்கொண்டிருந்தான். தாதிப் பெண்ணைத் தவிர வேறு யாராவது வந்துவிட்டால் அவனும் நிலவறைக்குள் அவசரமாகச் சென்று கதவைச் சாத்திக்கொள்வது அவசியமாயிருக்கலாம் அல்லவா?

ரவிதாஸன் அவ்விதம் வஸந்த மண்டபத்தில் நின்றுகொண்டு அரண்மனை வாசலையே பார்த்துக்கொண்டிருந்த சமயத்தில், மந்தாகினி சிறிதும் சத்தமின்றி நடந்து வந்து திறந்திருந்த நிலவறைக்குள் பிரவேசித்தாள். அடர்ந்த காடுகளில் நள்ளிரவில் எத்தனையோ நாள் இருந்து பழக்கப்பட்டவளுக்கு அந்த நிலவறையின் இருட்டு ஒரு பிரமாதமா என்ன?

அமரர் கல்கி

சில வினாடி நேரத்தில் கண் தெரிய ஆரம்பித்தது. ரவிதாஸனுடன் வந்தவள் சற்றுத் தூரத்தில் ஒரு தூணுடன் முட்டிக் கொண்டு தவித்ததைப் பார்த்தாள். இவள் அதற்கு நேர்மாறான திசையில் சென்றாள். அங்கே ஒரு படிக்கட்டு காணப் பட்டது. நிலவறைப் பாதை அங்கே கீழே இறங்கிச்சென்றது. படிகளின் வழியாக இறங்கிக் கீழே நின்றுகொண்டாள்.

சோமன் சாம்பவனுக்கு ஏதோ சிறிது சத்தம் கேட்டிருக்க வேண்டும். "யார் அது? யார் அது?" என்று குரல் கொடுத்தான். அது திறந்திருந்த வாசல் வழியாகப் போய் ரவிதாஸனுடைய காதில் இலேசாக விழுந்தது.

அதேசமயத்தில் அரண்மனை வாசல் வழியாகத் தாதிப் பெண் கையில் தீவர்த்தியுடன் வந்துகொண்டிருந்ததை ரவிதாஸன் பார்த்தான். தான் முன்னால் சென்று சோமன் சாம்பவனுக்கு எச்சரிக்கை செய்வதற்காக விரைந்து நடந்தான். நிலவறை வாசற்படிக்குள் புகுந்ததும், "சாம்பவா! எங்கே இருக்கிறாய்? என்னைக் கூப்பிட்டாயா?" என்றான்.

"ஆமாம்; கூப்பிட்டேன்!"

"அதற்குள்ளே அவசரமா? உன் குரல் வெளியிலே யாருக்காவது கேட்டால் என்ன செய்கிறது? உன்னை இங்கே இப்படியே விட்டு விட்டுப் போய் விடுவேன் என்று நினைத்தாயா?"

"இல்லை; இல்லை! ஒரு விஷயம் கேட்பதற்காகக் கூப்பிட்டேன்!" என்று சொல்லிக்கொண்டே சோமன் சாம்பவன் ரவிதாஸனை அணுகி வந்தான்.

இச்சமயத்தில் நிலவறையின் வாசலில் பிரகாசமான வெளிச்சம் தெரிந்தது. "ஓகோ! அந்தப் பெண் தீவர்த்தியுடன் வந்து விட்டாள். போ! போ! தூரமாகச் சென்று தூண் மறைவில் நில்! சீக்கிரம்!" என்றான் ரவிதாஸன்.

சோமன் சாம்பவன் அவசரமாகப் பின் வாங்கிச் சென்றான்.

அடுத்த வினாடி நிலவறையின் வாசலில் தாதிப்பெண் கையில் தீவர்த்தியுடன் வந்து நின்றாள். "மந்திரவாதி! மந்திரவாதி! எங்கே போனாய்?" என்றாள்.

"எங்கேயும் போகவில்லை. உனக்காகத்தான் காத்துக்கொண்டிருந்தேன்" என்று கூறிக்கொண்டே ரவிதாஸன் அவளை அணுகித் தீவர்த்தியைக் கையில் வாங்கிக்கொண்டான்.

"பெண்ணே! வெளியில் கதவைப் பூட்டிக்கொள். இன்னும் ஒரு நாழிகைக்கெல்லாம் சாவியுடன் திரும்பி வா! கதவைத் தட்டிப் பார்! நான் குரல் கொடுத்தால் திறந்து விடு! ஒருவரும் இல்லாத சமயமாகப் பார்த்துத் திற!" என்றான் ரவிதாஸன்.

"ஆகட்டும், மந்திரவாதி! ஆனாலும் உனக்கு எச்சரிக்கை செய்கிறேன். சின்னப் பழுவேட்டரையருக்கு ஏதோ சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. நீ அகப்பட்டுக்கொண்டால் என்னைக் காட்டிக் கொடுத்து விடாதே!" என்று கேட்டுக் கொண்டாள் தாதிப்பெண்.

"பெண்ணே! வீணாகக் கலவரப் படாதே! நான்தான் சொன்னேனே! காலாந்தக கண்டனுக்கே இறுதிக்காலம் நெருங்கி விட்டது!"

"என்னை ஏன் மறுபடி வந்து கதவைத் திறக்கச் சொல்லுகிறாய்? நிலவறையிலிருந்து வெளியில் போவதற்குத்தான் வேறு வழி இருக்கிறதே!"

"அந்த வழி இன்றைக்கு உபயோகப் படாது. வெட்டாற்றில் வெள்ளம் கரை புரண்டு ஓடுகிறது. நீ போ! சரியாக ஒரு நாழிகைக்கெல்லாம் திரும்பி விடு!"

தாதிப்பெண் வெளியில் சென்று கதவைச் சாத்தினாள். அவள் வெளியில் கதவைப் பூட்டிய அதே சமயத்தில் ரவிதாஸன் உட்புறத்தில் தாளிட்டான். பின்னர், கையில் தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு சோமன் சாம்பவன் இருக்குமிடம் நோக்கி விரைந்து வந்தான்.

"சாம்பவா! என்னை என்னமோ கேட்க வேண்டுமென்று சொன்னாயே? இப்போது கேள்" என்றான்.

"நீ இதற்கு முன் ஒரு தடவை இங்கு வந்தாயா?" என்று சோமன் சாம்பவன் கேட்டான்.

"ஒரு தடவை என்ன? பல தடவை வந்திருக்கிறேன். நாம் சேர்த்து வைத்திருக்கும் பொருளெல்லாம் வேறு எங்கிருந்து வந்ததென்று நினைத்தாய்?" என்றான்

ரவிதாஸன்.

"நான் அதைக் கேட்கவில்லை. நீ சற்று முன் என்னை இங்கு விட்டு விட்டு வெளியில் போனாய் அல்லவா? மறுபடியும்..."

"இப்போதுதான் வந்திருக்கிறேனே?"

"நடுவில் ஒரு தடவை வந்தாயா?"

"நடுவிலும் வரவில்லை; ஓரத்திலும் வரவில்லை. எதற்காகக் கேட்கிறாய்?"

"நீ போன சிறிது நேரத்துக்கெல்லாம் வாசற்படியின் வெளிச்சம் சட்டென்று மறைந்தது. நான் தூணில் முட்டிக்கொண்டேன்."

"ஒருவேளை கதவு தானாகச் சாத்தித் திறந்துகொண்டிருக்கும்."

"ஏதோ ஓர் உருவம் உள்ளே வந்தது



போலத் தெரிந்தது, காலடிச் சத்தமும் நன்றாகக் கேட்டது.''

''உன்னுடைய சித்தப் பிரமையாயிருக்கும். இந்த நிலவறையே அப்படித்தான். இருட்டிலே நிழல் போலத் தெரியும். திடீரென்று வெளிச்சம் தோன்றி மறையும். விசித்திரமான ஓசைகள் எல்லாம் கேட்கும். இங்கு நுழைந்தவர்கள் சிலர் பயப் பிராந்தியினாலேயே செத்துப் போயிருக்கிறார்கள். அவர்களுடைய எலும்புக்கூடுகள் அங்கங்கே கிடக்கின்றன. பழுவேட்டரையன் வேண்டுமென்றே அந்த எலும்புக்கூடுகளை எடுக்காமல் விட்டு வைத்திருக்கிறான். ஒருவரும் அறியாமல் இந்த நிலவறைக்குள் நுழைகிறவர்கள் எலும்புக்கூடுகளைப் பார்த்துப் பயந்து சாகட்டும் என்று...''

''அப்படி யாருக்கும் தெரியாமல் இந்த நிலவறையில் பிரவேசிக்க முடியுமா என்ன?''

''சாதாரணமாக யாரும் நுழைய முடியாது. என்னைத் தவிர அப்படி யாரும் நுழைந்திருப்பார்கள் என்று தோன்றவில்லை. நானும் இளையராணி அல்லது அவளுடைய தோழியின் உதவியினால்தான் இங்கு வந்திருக்கிறேன்...''

''பின்னே மனிதர்களின் எலும்புக்கூடுகளைப் பற்றிச் சொன்னாயே?''

''அதுவா? பழுவேட்டரையன் யாரையாவது பயங்கரமாகத் தண்டிக்க விரும்பினால், நிலவறைக் கதவை இலேசாகத் திறந்து வைத்து விடுவான். பொக்கிஷ நிலவறையைப் பற்றிக் கேட்டிருப்பவர்கள் பொருளாசையினால் இதில் நுழைவார்கள். அப்புறம் இதை விட்டு வெளியில் போவதில்லை.''

''நீ ஒருவனைத் தவிர இங்கு வந்தவன் யாரும் வெளியில் போனதில்லை என்றா சொல்லுகிறாய்?''

''முன்னேயெல்லாம் அப்படித்தான். இப்போது இரண்டு பேரைப் பற்றி எனக்குச் சந்தேகமாயிருக்கிறது...''

''யாரைச் சொல்லுகிறாய் என்று எனக்குத் தெரியும். வல்லவரையனையும், கந்தமாறனையும் சொல்லுகிறாய்.''

''ஆமாம்.''

''அவர்களை நாம் இன்னும் உயிரோடு விட்டு வைத்திருக்கிறோமே?''

''எத்தனை தடவை உனக்குச் சொல்வது? வல்லவரையனை ஒரு முக்கியமான காரியத்துக்காகத்தான் இளையராணி விட்டு வைத்திருக்கிறாள். சுந்தர சோழனுடைய குலம் நசிக்கும்போது வந்தியத்தேவனும் சாவான். அதற்குக் காலம் நெருங்கிவிட்டது. வா! வா! இந்த நிலவறையிலுள்ள சுரங்கப் பாதைகளையெல்லாம் உனக்குக் காட்டுகிறேன்... ஒரு காரியத்தில் மட்டும் ஜாக்கிரதையாயிரு! இங்கே நவரத்தினக் குவியல் வைத்திருக்கும் மண்டபம் ஒன்றிருக்கிறது. அதில் நூறு வருஷங்களாகச் சோழர்கள் சேர்த்து வைத்த நவரத்தினங்களைக் குப்பல் குப்பலாகப் போட்டு வைத்திருக்கிறார்கள். அங்கே போய் மட்டும் அகப்பட்டுக் கொள்ளாதே. அந்த நவரத்தினங்களின் மோகத்தில் மனத்தைப் பறி கொடுத்து விட்டால், நீ வந்த காரியத்தையே மறந்து போனாலும் போய் விடுவாய்!''

''ரவிதாஸா! யாரைப் பார்த்து இந்த வார்த்தை சொல்கிறாய்? உன்னைப் போல் நானும் வீர பாண்டியனுடைய தலையற்ற உடலின் மீது சத்தியம் செய்து கொடுத்தவன் அல்லவா?''

''யார் இல்லை என்றார்கள்? அந்த நவரத்தினக் குவியல்களைப் பார்த்த போது என் மனங்கூடச் சிறிது சலித்துப் போய்விட்டது; அதனாலேதான் எச்சரிக்கை செய்தேன். இருக்கட்டும், வா, போகலாம். முதலில் சோழன் அரண்மனைக்குப் போகும் வழியை உனக்குக் காட்டுகிறேன். அதைக் காட்டிவிட்டு நான் போன பிறகு நீயே சாவகாசமாக இந்த நிலவறை முழுவதையும் சுற்றிப் பார்த்துக்கொள். பின்னொரு காலத்தில் உபயோகமாயிருக்கலாம்.''

ரவிதாஸன் தீவர்த்தியைப் பிடித்துக்கொண்டு மேலே நடந்தான். சோமன் சாம்பவன் பக்கத்திலேயே சென்றான்.

பின்னொரு சமயம் பெரிய பழுவேட்டரையரும் இளையராணி நந்தினியும் சென்ற அதே பாதையில் அவர்கள் சென்றார்கள்.

தீவர்த்தியின் புகை சூழ்ந்த வெளிச்சத்தில் நிலவறையின் தூண்களும் அவற்றின் நிழல்களும் கரிய பெரிய பூதங்களைப் போல் தோன்றின. இருளில் வாழும் வௌவால்கள் பயங்கரமான குட்டிப் பேய்களின் தோற்றம் கொண்டிருந்தன. ஆங்காங்கு, பிரம்மாண்டமான சிலந்திக் கூடுகளும் அவற்றின் மத்தியில் ராட்சஸ சிலந்திப் பூச்சிகளும் காணப்பட்டன. தரையிலோ விசித்திர வடிவங்கள் கொண்ட ஜீவராசிகள் சில அதிவேகமாகவும் சில மிகவும் மெதுவாகவும் ஊர்ந்து சென்றன. ரவிதாஸன் கூறியதுபோலவே இனந் தெரியாத பலவிதச் சத்தங்கள் கேட்டன. வெளியே இன்னமும் அடித்துக்கொண்டிருந்த புயலின் சத்தமும் எப்படியோ எங்கிருந்தோ அந்தச் சுரங்க நிலவறைக்குள் வந்து எதிரொலி செய்தது.

சோமன் சாம்பவன் திடீரென்று திடுக்கிட்டு நின்று, "ரவிதாஸா! ஏதோ காலடிச் சத்தம் போல் கேட்கவில்லை?" என்று கேட்டான்.

"கேட்காமல் என்ன? நம்முடைய காலடிச்சத்தம் கேட்கத்தான் கேட்கிறது. வீணாக மிரண்டு விடாதே! இப்போது நானும் இருக்கும்போதே இப்படி பயப்பட்டாயானால், இங்கே இரண்டு மூன்று தினங்கள் எப்படியிருப்பாய்?" என்றான் ரவிதாஸன்.

"நான் ஒன்றும் பயப்படவில்லை. நீ போன பிறகு வீண் பிராந்திக்கு உள்ளாவதைக் காட்டிலும் நீ இருக்கும் போதே கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். இந்த நிலவறைக்குள் புகுந்தவர்கள் சிலர் இங்கேயே செத்துப்



போனார்கள் என்று சொன்னாயல்லவா?" என்றான் சோமன் சாம்பவன்.

"ஆமாம்; அவர்களுடைய ஆவிகள் இங்கே உலாவிக்கொண்டுதானிருக்கும். அதனால் என்ன? பேய்கள்தான் நம்மைக் கண்டு பயந்து அலறுமே? அந்தச் சிறு பையன் வந்தியத்தேவன் இந்த நிலவறையில் பயப்படாமல் இருந்து எப்படியோ தப்பி வெளியேறியிருக்கிறான். எத்தனையோ பேய் பிசாசுகளைப் பார்த்த நானும் நீயும் ஏன் பயப்பட வேண்டும்?"

"பேயும் பிசாசும் இருக்கட்டும். அதற்கெல்லாம் யார் பயப்படுகிறார்கள்? வேறு பிராணிகள், விஷ ஜந்துக்கள் இங்கே இருக்கலாம் அல்லவா?"

"பாம்புக்கும் தேளுக்கும் பயப்படப் போகிறாயா? நம்மைக் கண்டாலே அவை வளைகளில் போய் ஒளிந்துகொள்ளும்..."

"இருந்தாலும் இரண்டு மூன்று நாட்கள் இங்கேயே இருக்கிறது என்றால் யோசனையாகத்தான் இருக்கிறது! ரவிதாஸா! அதற்கு முன்னாலேயே ஒரு வேளை சந்தர்ப்பம் கிடைத்தால்...?"

"வேண்டாம், வேண்டாம்! அந்தத் தவறு மட்டும் செய்துவிடாதே! இன்றைக்குச் செவ்வாய்க்கிழமை. புதன், வியாழன் இரண்டு நாளும் நீ காத்திருக்க வேண்டும். சுந்தர சோழன் தனிமையாக இருக்கும் நேரம் எது என்பதைப் பார்த்து வைத்துக்கொள். சுந்தர சோழனுடைய பட்டமகிஷி எப்போதும் அவர் அருகிலேயே இருப்பாள். வெள்ளிக்கிழமை இரவு நிச்சயமாகத் துர்க்கா பரமேசுவரியின் கோயிலுக்குப் போவாள். அன்று இரவுதான் நீயும் உன் காரியத்தை முடிக்க வேண்டும். சுந்தர சோழனுடைய குலம் நிர்மூலமாகும் நாள் வெள்ளிக்கிழமைதான். முன் பின்னாக ஏதாவது நடந்தால் காரியம் கெட்டுப் போகலாம்!" என்றான் ரவிதாஸன்.


இப்படிப் பேசிக் கொண்டே இருவரும் விரைவாக நடந்தார்கள். சோமன் சாம்பவன் மட்டும் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே போனான். ஆயினும் அவர்கள் அறியாமல் தூண்களின் மறைவிலே ஒளிந்தும் சிறிதும் சத்தமின்றிப் பாய்ந்தும் அவர்களைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த ஊமை ராணி அவர்கள் கண்ணில் படவில்லை.

நிலவறைச் சுரங்கத்தின் ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்துக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்கெதிரே நெடுஞ்சுவர் நின்றது. அதில் எங்கும் வாசல் இருப்பதாகவே தெரியவில்லை. ஆனால் சுவரின் உச்சியில் ஒரு சிறு பலகணி வழியாகக் கொஞ்சம் வெளிச்சம் வந்தது.

ரவிதாஸன் தீவர்த்தியைச் சாம்பவன் கையில் கொடுத்து விட்டு அந்தச் செங்குத்தான சுவரில் ஆங்காங்கு நீட்டிக் கொண்டிருந்த முண்டு முரடுகளைப் பிடித்துக்கொண்டு ஏறினான். பலகணி வழியாகச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்து விட்டுக் கீழே சரசரவென்று இறங்கினான்.

"அந்தப் பலகணி வழியாக வெளியில் குதிக்க வேண்டுமா? அதுதான் வழியா?" என்று சாம்பவன் கேட்டான்.

"இல்லை; இல்லை. அந்தப் பலகணி வழியாக, எலிதான் நுழைந்து செல்லலாம். ஆனால் அது வழியாகப் பார்த்தால் சோழன் அரண்மனை தெரியும். அந்த அரண்மனையிலும் முக்கியமான இடம் தெரியும்" என்றான் ரவிதாஸன்.

"சுந்தர சோழன் படுத்திருக்கும் இடமா?" என்றான் சாம்பவன்.

"ஆமாம், அங்கே ஜன நடமாட்டம் எப்படியிருக்கிறது என்பதை இந்தப் பலகணியின் மூலமாகப் பார்த்து நீ தெரிந்துகொள்ளலாம். இப்போது என்னுடன் வா! நான் செய்கிறதை நன்றாய்ப் பார்த்துக் கொள்!"

இவ்விதம் கூறிவிட்டு ரவிதாஸன் கீழே குனிந்தான். உற்றுப் பார்த்து வட்ட வடிவமான ஒரு கல்லின் மீது காலை வைத்து அமுக்கிக்கொண்டு இரண்டு கையினாலும் ஒரு சதுர வடிவமான கல்லைப் பிடித்துத் தள்ளினான். கீழே ஒரு வழி காணப்பட்டது.

"கடவுளே! நிலவறைக்குள்ளே ஒரு பாதாளப் பாதையா?" என்று வியந்தான் சோமன் சாம்பவன்.

"ஆமாம்; இந்தப் பாதை இருப்பது பெரிய பழுவேட்டரையரையும் இளைய

ராணியையும் தவிர வேறு யாருக்கும் தெரியாது. மூன்றாவதாக எனக்குத் தெரியும்; இப்போது உனக்கும் தெரியும்! பாதையைத் திறப்பது எப்படி என்று தெரிந்துகொண்டாய் அல்லவா!''

இருவரும் அப்பாதையில் இறங்கிச் சென்றார்கள். தீவர்த்தியின் வெளிச்சம் சிறிது நேரத்திற்கெல்லாம் மறைந்தது.

ஊமை ராணி தான் மறைந்து நின்ற இடத்திலிருந்து ஒரே பாய்ச்சலாக அங்கு வந்தாள். திறந்திருந்த வழியை உற்றுப் பார்த்தாள். அதில் இறங்குவதற்கு ஓர் அடி வைத்தாள். பிறகு புனராலோசனை செய்தவளாய்ச் சட்டென்று காலை வெளியில் எடுத்தாள்.

சிறிது நேரம் யோசனை செய்து கொண்டிருந்துவிட்டு, முன்னம் ரவிதாஸன் சுவரின் மீது ஏறிய இடத்தை நோக்கினாள். அங்கே ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று அவன் ஏறியது போலவே தானும் சுவர் மீது ஏறினாள். பலகணியை அடைந்ததும் அதில் ஏறி உட்கார்ந்துகொண்டு அப்பால் பார்த்தாள். சுவரை ஒட்டினாற்போல் தோட்டமும் அதற்கப்பால் அழகிய மாடமாளிகையும் தென்பட்டன. அந்த மாளிகையைப் பார்த்ததும் அவளுக்கு உடம்பு சிலிர்த்தது. அதற்குள்ளே தனக்கு உயிரினும் இனியவர்கள் இருக்கிறார்கள் என்பதை அவள் உள்ளுணர்ச்சி கூறியது. இரகசிய வழியாகப் போகிறவர்கள் தனக்குப் பிரியமானவர்களுக்குத் தீங்கு செய்யும் நோக்கங் கொண்டவர்கள் என்பதையும் உணர்ந்தாள். அவர்களுடைய தீய நோக்கத்தைத் தடுக்கும் ஆற்றலைத் தனக்குக் கொடுத்து அருள வேண்டுமென்று அவள் அந்தராத்மாவில் குடி கொண்டிருந்த தெய்வத்தைப் பிரார்த்தனை செய்துகொண்டாள்.

கீழே இறங்கிவிடலாமா என்று அவள் எண்ணிய சமயத்தில், சற்றுத் தூரத்தில் தெரிந்த மாளிகையின் மேன் மாடத்தில் ஓர் அதிசயக் காட்சி தெரிந்தது. சற்று முன் அந்த இருளடர்ந்த நிலவறையிலிருந்த ரவிதாஸனும் சோமன் சாம்பவனும் அதில் ஏறித் தூண்களின் மறைவில் ஒளிந்து நின்றார்கள். அரண்மனையின் உட்பக்கமாக உற்று உற்றுப் பார்த்தார்கள். அப்போது பகல் நேரமாதலால் அந்த மாளிகையின் மேன்மாடம் நன்றாய்த் தெரிந்தது. ரவிதாஸன் கையில் தீவர்த்தி இல்லை. சாம்பவன் கையில் வேல் மட்டும் இருந்தது. ரவிதாஸன் அந்த வேலை வாங்கிக்கொண்டு மாளிகையின் உட்புறத்தை நோக்கி அதை எறிவதற்காகக் குறி பார்த்தான். ஊமை ராணியின் நெஞ்சு அச்சமயம் நின்று விட்டது போலிருந்து. நல்லவேளையாக, ரவிதாஸன் வேலை எறியவில்லை. எறிவது போல் பாவனை செய்து விட்டுச் சோமன் சாம்பவனிடம் திரும்பக் கொடுத்து விட்டான். மறுகணம் அவர்கள் இருவரும் அங்கிருந்து மறைந்து விட்டார்கள்.

ஊமை ராணியும் பலகணியிலிருந்து சுவர் வழியாகக் கீழே இறங்கினாள். சுரங்கப் பாதை தென்பட்ட இடத்தைப் பார்த்துக்கொண்டு மறைந்து நின்றாள். இன்னும் சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தப் பாதையில் மறுபடி தீவர்த்தி வெளிச்சம் தெரிந்தது. இருவரும் வெளியில் வந்தார்கள். சுரங்கப் பாதையை மூடினார்கள்.

"இதைத் திறக்கும் வழியை நன்றாய்த் தெரிந்து கொண்டாயல்லவா?'' என்று ரவிதாஸன் கேட்டான்.

"தெரிந்துகொண்டேன். இனி உனக்குக் கவலை வேண்டாம். ஒப்புக்கொண்ட காரியத்தை நிச்சயமாகச் செய்து முடிப்பேன்! சுந்தர சோழனுடைய வாழ்க்கை வெள்ளிக்கிழமையோடு முடிவடையும். இம்மாதிரியே நீங்களும் உங்கள் காரியத்தைச் செய்யுங்கள்!'' என்றான் சாம்பவன்.

''இளையராணி கரிகாலனைப் பார்த்துக்கொள்வாள். அதைப் பற்றிக் கவலையில்லை. அந்தக் குட்டிப்புலி கடலிலிருந்து தப்பி வந்து நாகைப்பட்டினத்தில் இருப்பதாகக் காண்கிறது. ஆனால் இந்தத் தடவை அவன் தப்ப முடியாது. அவனைக் காப்பாற்றி வந்த இரண்டு பெண் பேய்களும் இப்போது இத்தஞ்சையில் இருக்கின்றன. ஓடக்காரப் பெண்ணையும் ஊமைச்சியையும்

கூட்டத்தில் பார்த்தேன். அந்த வீர வைஷ்ணவத் துரோகிகூட இங்கேதான் இருக்கிறான். ஆகையால் குட்டிப் புலியும் இனித் தப்ப முடியாது. நாகைப்பட்டினத்துக்குக் கிரமவித்தனை அனுப்பப் போகிறேன். சுந்தர சோழனுடைய குலம் இந்த வெள்ளிக் கிழமை நசித்து விடும்..."

"அப்புறம் மதுராந்தகத் தேவன் இருப்பானே?"

"அவன் இருந்தால் இருக்கட்டும். அப்படிப்பட்ட ஒரு பேதை இன்னும் சில காலத்துக்குச் சோழ நாட்டுச் சிங்காதனத்தில் இருந்து வருவதுதான் நல்லது. பாண்டிய சக்கரவர்த்திக்கும் வயது வர வேண்டும் அல்லவா?"

இவ்வாறு பேசிக்கொண்டே ரவிதாஸனும் சோமன் சாம்பவனும் வந்த வழியோடு விரைந்து சென்றார்கள்.

## இருபத்து ஒன்பதாம் அத்தியாயம்

# இராஜ தரிசனம்

அவர்கள் மறைந்த பிறகு ஊமை ராணி சுரங்கப்பாதை தென்பட்ட இடத்துக்கு வந்தாள். உற்று உற்றுப் பார்த்துப் பாதையைத் திறப்பதற்கு முயன்றாள். முடியவில்லை. ரவிதாஸன் அப் பாதையைத் திறந்த போது அவள் தூரத்தில் நின்றபடியால் திறக்கும் வழியை அவள் கவனித்துப் பார்த்துக் கொள்ள முடியவில்லை.

இரண்டு பேரில் ஒருவனாவது அங்கே கட்டாயம் திரும்பி வருவான் என்று அவள் மனத்தில் நிச்சயமாகப் பட்டிருந்தது. ஆகையால், அவ்விடத்திலேயே காத்திருக்கத் தீர்மானித்தாள்.

அவள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. ரவிதாஸனை வெளியில் அனுப்பிவிட்டுச் சோமன் சாம்பவன் அங்கே திரும்பி வந்தான். அவன் கையில் தீவர்த்தி இருந்தது. ஆனால் முன்னைக் காட்டிலும் மங்கலாக எரிந்தது. ரவிதாஸனிடம் அவன் எவ்வளவோ தைரியமாகத்தான் பேசினான். ஆயினும் அவன் மனத்தில் பீதி போகவில்லையென்பது சுற்றுமுற்றும் மிரண்டு பார்த்துக்கொண்டு வந்ததிலிருந்து தெரிந்தது.

சுரங்கப்பாதை திறந்த இடத்தின் அருகில் வந்து அவன் பீதியுடன்

உட்கார்ந்துகொண்டான்.

சற்று நேரத்துக்கெல்லாம் திவர்த்தி அணைந்துவிட்டது.

பிறகு அவன் சுவரின் உச்சியின் மீதிருந்த பலகணியை அடிக்கடி அண்ணாந்து பார்த்துக்கொண்டிருந்தான்.

அதன் வழியாக உள்ளே வந்த வெளிச்சம் சிறிது சிறிதாக மங்கி மறைந்து கொண்டிருந்தது.

நன்றாக வெளிச்சம் மங்கிச் சூரியன் அஸ்தமித்துவிட்டது என்று அறிந்த பிறகு அவன் சுரங்கப்பாதையை மறுபடியும் திறக்கத்தொடங்கினான். இப்போது மந்தாகினி அதன் சமீபமாக வந்து நின்றுகொண்டாள்.

பாதை திறந்தது. சோமன் சாம்பவன் அதனுள் இறங்கப் போனான்.

அப்போது அந்த நிலவறையில், அவனுக்கு வெகு சமீபத்தில், 'கிறீச்' என்ற நீடித்த ஓலக் குரல் ஒன்று கேட்டது. சோமன் சாம்பவன் தன் வாழ்நாளில் எத்தனையோ பயங்கரங்களைப் பார்த்தவன் தான். ஆயினும் அந்த மாதிரியான அமானுஷ்யமான ஒரு சத்தத்தை அவன் கேட்டதில்லை. பேய் என்பதாக ஒன்று இருந்து அதற்குக் குரலும் இருந்தால், அது இப்படித்தான் இருக்க வேண்டும் என்று தோன்றியது. முதல் தடவை அக்குரல் கேட்டதும் சாம்பவன் தயங்கி நின்றான். அதன் எதிரொலி நிற்கும் வரையில் காத்திருந்தான். இரண்டாந் தடவை அந்த ஓலக் குரலைக் கேட்டதும் அவன் உடம்பின் ரோமமெல்லாம் குத்திட்டு நிற்கத் தொடங்கியது. மூன்றாந் தடவை இன்னும் சமீபத்தில் கேட்ட பிறகு அவனுடைய உறுதி குலைந்துவிட்டது. அந்த இருளடர்ந்த நிலவறையில் வழி துறை கவனியாமல் குருட்டாம் போக்காக ஓடத் தொடங்கினான்.

அவன் மறைந்ததும் ஊமை ராணி அந்தப் பாதையில் இறங்கினாள். சில படிகள் இறங்கிய பிறகு சமதரையாக இருந்தது. அதில் விடுவிடு என்று நடந்து போனாள். சோமன் சாம்பவன் அவள் இறங்குவதைப் பார்த்திருந்து திரும்பி வந்தாலும் அவளைப் பிடித்திருக்க முடியாது. அவ்வளவு விரைவாக நடந்தாள். நரகத்துக்குப் போகும் தொலைவில்லாத இருண்ட வழியைப் போல் தோன்றியது. ஆயினும் அதற்கும் ஒரு முடிவு இருந்தது. செங்குத்தான சுவரில் முடிந்த இடத்தில் மேலே இடைவெளி சிறிது தெரிந்தது. சில படிகளும் கைக்குத் தென்பட்டன. அவற்றின் வழியாக ஏறியபோது தலையில் திடீரென்று முட்டியது. பாதாளப் பாதையின் படிகளுக்கும் மேலே தலை முட்டிய இடத்துக்கும் நடுவில் சிறிய சிறிய இடைவெளிகள் காணப்பட்டன. அவற்றுள் ஒன்றில் நுழைந்து வெளியில் வந்தாள். சுற்றிலும் பெரிய பெரிய பூத வடிவங்கள் தென்பட்டன. ஈழத் தீவில் பிரம்மாண்டமான சிலை வடிவங்களைப் பார்த்தவளான படியால் அந்தக் காட்சி அவளுக்குத் திகைப்பை உண்டு பண்ணவில்லை. தான் வெளி வந்த பாதை எங்கே முடிகிறது என்பதை நன்றாய்க் கவனித்துக் கொண்டாள். பத்துத் தலை இராவணன் தன் இருபது கைகளினாலும் கைலயங்கிரியைப் பெயர்த்து எடுத்துக்கொண்டிருந்தான். மலைக்கு மேலே சிவனும் பார்வதியும் வீற்றிருந்தார்கள். இராவணன் மலையைத் தூக்கிய இடத்தில் கீழே பள்ளமாயிருந்தது. மேலே தூக்கி நிறுத்திய மலையை அவனுடைய இருபது கைகளும் தாங்கிக்கொண்டிருந்தன. அவற்றில் இரண்டு கைகளுக்கு மத்தியில் இருந்த இடைவெளி வழியாக அந்தச் சிற்ப மண்டபத்துக்குள் தான் பிரவேசித்திருப்பதைத் தெரிந்துகொண்டாள். கைலையங்கிரிக்கு அடியில் அப்படி ஒரு பாதை இருக்கிறதென்பது சாதாரணமாகப் பார்ப்பவர்களுக்கு ஒருநாளும் தெரியாது. அதன் அடியில் இறங்கிப் பார்க்கலாம் என்ற எண்ணமும் யாருக்கும் தோன்றாது. சமயத்தில் ஒளிந்து கொள்ளுவதற்குக் கூட அது சரியான மறைவிடந்தான்.

சில மணி நேரம் அந்தச் சிற்பச் சுரங்கப்பாதையின் அதிசயத்தைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு மந்தாகினி அச் சிற்ப மண்டபத்தைச் சுற்றினாள். வெளிச்சம் மிகக் குறைவாயிருந்த போதிலும் இரவில் பார்த்துப் பழக்கமுற்ற அவளுடைய கூரிய கண்களுக்கு எல்லாம் நன்றாய்த் தெரிந்தன.

ஓரிடத்தில் சோழ குலத்து முன்

னோர்களில் ஒருவரான சிபிச் சக்கரவர்த்தி புறாவின் உயிரைக் காக்கத் தம் உடலின் சதைகளை அறுத்துக் கொடுக்கும் காட்சி சிலை வடிவத்தில் இருந்தது. சிபியின் வம்சத்தில் பிறந்தவர்களான படியினால் அல்லவோ சோழர்களுக்குச் 'செம்பியன்' என்னும் பட்டம் உரியதாயிற்று? அந்தச் சிற்பத்தைக் கூர்மையாகக் கவனித்துப் பார்த்த பிறகு ஊமை ராணி அப்பால் சென்றாள். பிரம்மாண்டமான சிவபெருமானுடைய சிலையின் சிரஸிலிருந்து கங்கை நதி கீழே விழும் காட்சி ஒரு சிற்பத்தில் அமைந்திருந்தது. அருகில் பகீரதன் கைகூப்பிய வண்ணம் நின்று கொண்டிருந்தான். கீழே விழுந்த பாகீரதி நதி ஒரு பிரம்மாண்டமான ரிஷியின் வாய் வழியாகப் புகுந்து காது வழியாக வெளியேறியது. அப்படி வெளியேறிய கங்கையில் ஒரு சிறிய முனிவர் குண்டிகையில் தண்ணீர் மொண்டு கொண்டிருந்தார். அவர்தான் குறுமுனிவர் என்று பெயர் பெற்ற அகஸ்தியராக இருக்க வேண்டும். அந்தக் குண்டிகையை அவர் இன்னொரு சிறிய மலையின் மீது கவிழ்த்தார். குண்டிகையிலிருந்து பெருகிய நதி வரவரப் பெரிதாகிக்கொண்டு சென்றது. இந்தச் சிற்பக் கங்கையிலும் காவேரியிலும் அவற்றை அமைத்தபோது தண்ணீர் பெருகுவதற்கு ஏற்பாடும் செய்திருக்க வேண்டும். ஆனால் இப்போது அவற்றில் தண்ணீர் இல்லை. காவேரி நீண்டு வளைந்து மலைப் பாறைகளின் வழியாகவும் மரமடர்ந்த சோலைகளின் வழியாகவும் சென்றது. அதன் இருபுறமும் அநேக சிவன் கோயில்கள் இருந்தன. கடைசியாகக் காவேரி கடலில் கலக்க வேண்டிய இடத்தில் அந்தச் சிற்ப மண்டபத்தின் மதில் சுவர் இருந்தது. ஏதோ சந்தேகப்பட்டு ஊமை ராணி அந்த இடத்தில் மதில் சுவரில் கையை வைத்து அமுக்கினாள். சிறிய கதவு ஒன்று திறந்தது. அதன் வழியாக வெளியேறினாள். அவள் வெளியேறிய இடம் அரண்மனைத் தோட்டம். அதற்கு அப்பால் வெகு சமீபத்தில் அரண்மனையின் உன்னதமான மாடங்கள் காணப்பட்டன. சுற்றுமுற்றும் பார்த்தாள். மங்கிய அந்தி மாலையின் வெளிச்சத்தில் தோட்டத்தில் யாருமில்லை என்று தெரிந்தது. பழுவேட்டரையரின் தோட்டத்தில் விழுந்து கிடந்தது போலவே இங்கேயும் மரங்கள் முறிந்து விழுந்து கிடந்தன. ஆகையால் தோட்டத்தில் யாராவது இருந்தாலும் அவள் சிற்ப மண்டபத்திலிருந்து வெளி வந்ததைப் பார்த்திருக்க முடியாது. இன்னும் நன்றாய் இருட்டட்டும் என்று சிற்ப மண்டபத்தையொட்டியே நின்று காத்திருந்தாள். ஒருவேளை கையில் வேலையுடைய அந்த யமகிங்கரன் வந்தாலும் வரக்கூடும். ஆகையால், சிற்ப மண்டபத்துக்குள்ளும் அடிக்கடி எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

அரண்மனையில் தீபங்கள் ஒவ்வொன்றாகச் சுடர்விட்டு எரியத் தொடங்கின. சிறிது நேரத்துக்கெல்லாம் அரண்மனை முழுதும் ஒரே ஜோதிமயமாகக் காட்சி அளித்தது. கீழ் அறைகளில் ஏற்றிய தீபங்கள் பலகணிகளின் வழியாக வெளியில் ஒளி வீசின. மேல் மாடங்களில் ஏற்றிய தீபங்கள் வானத்து நட்சத்திரங்களுடன் போட்டியிட்டுக் கொண்டு பிரகாசித்தன.

"ஐயோ! பகல் வேளையைக் காட்டிலும் இரவு மிகவும் அபாயகரமானதாகத் தோன்றுகிறதே!" என்று மந்தாகினி எண்ணினாள்.

அரண்மனையை நாலுபுறமும் நன்றாக உற்றுப் பார்த்தாள். சிற்ப மண்டபத்துக்குச் சமீபமாக இருந்த அரண்மனைப் பகுதியிலே மட்டும் அதிக விளக்குகள் இல்லை என்பதைக் கவனித்துக்கொண்டாள். காவேரி வெள்ளத்திலிருந்து தான் எடுத்துக் காப்பாற்றிய தன் உயிருக்குயிரான செல்வக் குமாரனை இலங்கையில் கொல்ல முயன்ற பாதகனும் அவனுடைய தோழனும் அரண்மனையின் இந்தப் பகுதியிலேதான் மேல் மாடத்தில் ஏறி நின்றார்கள். ரவிதாஸன் இன்னொருவனிடமிருந்து வேலை வாங்கி யார் மீதோ எறிவது போல் குறி பார்த்த இடம் இதுதான். நல்லவேளையாக, இந்தப் பகுதியில் அதிகமாக தீபங்கள் ஏற்றவில்லை. அதற்குக் காரணம் யாதாயிருக்கலாம்...? நல்லது; அதுவும் சீக்கிரத்தில் தெரிந்து போகிறது.



நன்றாக அஸ்தமித்து அரண்மனைத் தோட்டத்தில் இருள் சூழ்ந்தவுடனே மந்தாகினி சிற்ப மண்டபத்தின் வாசலிலிருந்து மிரண்டோடும் மானின் வேகத்துடன் பாய்ந்து சென்று அரண்மனையை அடைந்தாள். அரண்மனையின் அந்தப் பின் பகுதியில் வட்ட வடிவமான தாழ்வாரங்களும் அவற்றைத் தாங்கி நின்ற வரிசை வரிசையான தூண்களும், பல இடங்களில் மேன் மாடத்துக்கு ஏறும் படிக்கட்டுகளும் காணப்பட்டன. தாழ்வாரங்களில், பெரிய விருந்துகளுக்குச் சமையல் செய்ய உதவும் பிரம்மாண்டமான தாமிரப் பாத்திரங்கள், பழசாய்ப் போன தந்தப் பல்லக்குகள், ஒடிந்த சிங்காதனங்கள், - இப்படிப் பல பொருள்கள் இருந்தன. அவற்றின் மத்தியில் சிறிது நேரம் சுற்றிப் பார்த்துவிட்டு மந்தாகினி கடைசியாக ஒரு படிக்கட்டின் மீது துணிந்து ஏறினாள். கீழே இருந்தது போலவே மேன் மாடத்திலும் வட்ட வடிவமான தாழ்வாரங்களும் அவற்றின் மேற் கூரையைத் தாங்கிய சித்திர விசித்திரமான தூண்களும் வேலைப்பாடு அமைந்த பலகணிகளும் நிலா முன்றில்களும் அவற்றில் பளிங்குக் கல் மேடைகளும் காணப்பட்டன. மனித சஞ்சாரம் அற்றதாகத் தோன்றிய அந்த மேன் மாடக் கூடங்களில் மந்தாகினி சுற்றிச் சுற்றி அலைந்தாள். மாடத்தின் உட்புறத்தில் கீழேயிருந்து தீப வெளிச்சம் வருவதைக் கண்டு அங்கே போய்த் தூண் மறைவில் நின்று எட்டிப்பார்த்தாள்.

ஆகா! அவள் பார்த்தது என்ன?

பார்த்த கண்களைத் திருப்பவே முடியாத காட்சியைப் பார்த்தாள்.

ஒரு விசாலமான மண்டபத்தின் மத்தியில் விசித்திர வேலைப்பாடு அமைந்த சப்ரமஞ்சக் கட்டிலில் ஒருவர் சாய்ந்த வண்ணம் படுத்திருந்தார்.

அவரைச் சுற்றிலும் நாலு ஸ்திரீகளும் இரண்டு ஆடவர்களும் அச்சமயம் நின்றார்கள். படுத்திருந்தவரிடம் அவர்கள் பயபக்தி கொண்டவர்கள் என்பது அவர்களுடைய தோற்றத்திலிருந்து தெரிந்தது. சிறிது தூரத்தில் இன்னும் அதிக மரியாதையுடன் இரு தாதிப் பெண்கள் நின்றார்கள்.

ஒரே ஒரு தீபந்தான் அந்த மண்டபத்தில் எரிந்தது. அதுவும் கட்டிலுக்கு அருகில் இருந்த விளக்குத் தண்டின் மீது பொருத்தப்பட்டு மங்கலான வெளிச்சத்தையே தந்து கொண்டிருந்தது.

சுற்றிலும் நின்றவர்களை முதலில் மந்தாகினி பார்த்தாள். அவர்களில் ஒருத்தி தன் உயிருக்குயிரான சகோதரன் மகள் பூங்குழலி என்பதை அறிந்தாள். மற்றவர்களையும் அவள் முன்னம் சில தடவை மறைவான இடங்களிலிருந்து பார்த்திருக்கிறாள். ஆனால், அவர்கள் எல்லாம் யார் யார் என்பது அவ்வளவு நன்றாகத் தெரியாது.

சுற்றி நின்றவர்களைப் பார்த்து விட்டு மிக மிகத் தயக்கத்துடன் மந்தாகினி கட்டிலில் படுத்திருந்தவரைப் பார்த்தாள். அவளுடைய நெஞ்சு ஒருகணம் ஸ்தம்பித்து விட்டது.

ஆம்; அவரேதான்! எத்தனையோ யுகம் என்று சொல்லக் கூடிய நீண்ட காலத்துக்கு முன்னால், தான் சின்னஞ் சிறு பெண்ணாக ஓடி விளையாடிக் காடுகளில் திரிந்துகொண்டிருந்த காலத்தில், ஓடத்தில் வந்து ஒதுங்கி, தன் உள்ளத்தையும் உயிரையும் கொள்ளை கொண்ட மனிதர்தான். தான் வாழ்ந்திருந்த பூதத் தீவைச் சில காலம் சொர்க்க லோகமாக ஆக்கியிருந்தவர்தான். பெரிய கப்பலில் கூட்டமாக வந்தவர்களால் அழைத்துப் போகப்பட்டவர்தான்!

ஆகா! அவர் இப்போது எப்படி மாறிப் போயிருக்கிறார்!

பூர்வ ஜன்மம் என்று சொல்லக் கூடிய அந்த நாட்களுக்குப் பிறகும் மந்தாகினி அவரைப் பலதடவை அவரறியாமல் பார்த்திருக்கிறாள். காவேரி நதியில் உல்லாசப் படகுகளில் அவர் சென்றபோது கரையில் அடர்ந்த புதர்களின் மறைவில் ஒளிந்திருந்து பார்த்திருக்கிறாள். நகரங்களின் தெருக்களில் வெண் புரவிகள் பூட்டிய தங்க ரதத்தில் வீதி வலம் வந்தபோது கூட்டத்தோடு கூட்டமாய் நின்று பார்த்திருக்கிறாள். ஆனால் கடைசியாக அவரைப் பார்த்துக் கொஞ்ச காலம் ஆகிவிட்டது. அந்தக் காலத்திற்குள்ளேதான் இப்படி மாறிப் போயிருக்கிறார். முகத்தில் தாடியும், மீசையும் வளர்ந்திருந்தன. கன்னங்கள் ஒட்டி உலர்ந்து போயிருந்தன. நெற்றியிலே சுருக்கங்கள். ஆகா! அந்தக் கண்களில் ஒரு காலத்தில் குடிகொண்டிருந்த காந்த ஒளி எங்கே போயிற்று? தெய்வமே! இப்படியும் மனிதர்கள் மாறுவது உண்டா? இலங்கைத் தீவில் விஷ ஜுரத்தினால் பீடிக்கப்பட்டவர்கள் பலரை நீண்ட நாள் காய்ச்சலுக்குப் பிறகு உயிர் போகும் சமயத்தில் ஊமை ராணி மந்தாகினி பார்த்ததுண்டு.

ஆகா! ஒருசமயம் தங்கச் சூரியனைப் போல் பிரகாசித்துக்கொண்டிருந்த இவருடைய களை ததும்பிய முகமும் அவ்வளவாக மாறிப் போயிருக்கிறதே?

ஒருவேளை இவருடைய அந்திம காலமும் நெருங்கிவிட்டதோ!

திடீரென்று மந்தாகினிக்கு அன்று மாலை தான் பார்த்த பயங்கரக் காட்சி நினைவுக்கு வந்தது. அவள் அச்சமயம் நின்ற இடத்தில்தான் ரவிதாஸன் என்னும் கொலைகாரனும் அவனுடைய தோழனும் நின்றார்கள். அங்கிருந்துதான் வேல் எறியக் குறி பார்த்தார்கள். ஒருவேளை கட்டிலில் படுத்திருப்பவர் மீது எறியத்தான் குறி பார்த்தார்களோ?

இந்த நினைவினால் மந்தாகினியின் உடம்பெல்லாம் வெடவெடவென்று நடுங்கியது. கண்களைச் சுற்றிக்கொண்டு வந்தது. மயக்கம் வரும் போலிருந்தது. தூணைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கால்களை ஊன்றி நின்று சமாளித்துக்கொண்டாள்.

(தொடரும்)

# நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம்

ஆம்! அதிர்ஷ்டமான பெயர் அமைத்தால் நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம். பணம், பதவி, யாவும் கிட்டும். வெற்றிமேல் வெற்றிகளைக் குவிப்பீர்கள். இவ்வுலகில் அனுபவிக்கத்தக்க அனைத்து சுகபோகங்களையும் அனுபவிக்கலாம் என்று ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறார் கோவை மாவட்டம்



அன்னூர் பு.புளியம்பட்டி அருகில் உள்ள கணுவக்கரையில் வசிக்கும் ஜோதிட விஞ்ஞானி கே.ஆர். பிரபாகர்ராஜ் அவர்கள். இவரது கருத்துக்கள் பின்வருமாறு:-

ஒரு மனிதனின் வெற்றிக்கும் தோல்விக்கும் மூலகாரணமாக இருப்பது பெயரும், கையெழுத்துமே ஆகும். ஒருவருடைய பெயரை முழுவதுமாக மாற்றத் தேவை இல்லை. சிறு திருத்தம் மட்டும் செய்தால் போதும். அதிர்ஷ்டப் பெயரால் மனித வாழ்வில் ஏற்படும் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மிக நல்ல முறையில் தீர்வுகாண முடியும்.

அதிர்ஷ்டப் பெயர் அமைக்க நியூமராலஜி, நேமாலஜி, சைன், தொழில் வசியம், சிக்னேச்சராலஜி பெயர் வசியம், ஆர்க்கோலஜி, கிராபாலஜி, ப்யூசராலஜி போன்ற 9 வகையான காரணிகளையும் 12 வகையான இயக்கங்களையும் ஆதாரமாக வைத்து பெயர் சூட்டினால் பிரபலம் உண்டாகும். இது பூரணமாக விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட சாஸ்திரமாகும். அதிர்ஷ்டப் பெயர் எண் சாஸ்திரப்படி முறையாகப் பெயரை மாற்றினால் உடனே அதிர்ஷ்டம் உண்டாகும்.

**உங்கள் வெற்றிக்கு வழிகாட்டும்**
**ஜோதிட மாமேதை கே.ஆர். பிரபாகர்ராஜ்**
**நியூமராலஜி-நேமாலஜி-சைன்-தொழில் வசியம்**



அதிர்ஷ்டப் பெயரை அமைத்துக் கொண்டால் அன்பான மனைவி (நல்ல மனைவி) அறிவுள்ள குழந்தைகள் வசதிமிக்க வீடு, வளமான தொழில், குறைவில்லாச் செல்வம், ஆரோக்கியமான உடல், இன்பகரமான வாழ்வு போன்ற அனைத்து அதிர்ஷ்டங்களையும் அள்ளித் தரும். தொழில் முடக்கம் வியாபார மந்தம் உத்தியோகத்தில் இடையூறு, கணவன் மனைவியர்க்கிடையே ஒற்றுமை இல்லாமை, கேஸ் கோர்ட் மனக்குழப்பம், போதைப் பொருளுக்கு அடிமை ஆகுதல், செய்வினை மாந்திரீக பாதிப்பு, தீய சக்தியால் பாதிப்பு திருமணத்தடை, குழந்தைபாக்கியம் இல்லாமை, முன்னேற்ற தடை, புகழ் இல்லாமை, மனநோய் போன்ற எண்ணற்ற வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கும் இக்கலையின் மூலம் நிரந்தரத் தீர்வு காண முடியும்.

பெயர் மாற்றத்தால் பெருஞ்செல்வர் ஆகலாம். பெயரை எந்த வயதிலும் அதிர்ஷ்டமாக மாற்றி வெற்றிகளைப் பெறலாம். முறையாகப் பெயர் அமைத்தால் முன்னேற்றம் உண்டாகும். சிலர் கடைகளில் விற்கும் பல வகையான புத்தகங்களை வாங்கி தாங்களே பெயர் மாற்றி குழம்பி வாழ்வில் பெருந்துன்பத்தை அடைந்தவர்கள் ஏராளம். RAJINI KANT (ரஜினிகாந்த்) என்ற பெயரையோRAMBA (ரம்பா) என்ற பெயரையோ எல்லோருக்கும் வைக்க முடியாது. இது பொருந்தி வருபவர்களுக்கு மட்டுமே வைக்க வேண்டும். அப்போதுதான் அதிர்ஷ்டம் தரும்.



AJITH(அஜீத்) என்ற பெயரையும் SIMRAN(சிம்ரன்) என்ற பெயரையும் ஆய்வு செய்தால் இதில் வசியம் இருக்கும். யாருக்கு எந்தப் பெயர் பொருந்தும் என்று நன்கு ஆய்வு செய்து பெயர் அமைத்தால் அதிர்ஷ்டம் உண்டாகும். செய்கின்ற தொழில் எதுவாக இருந்தாலும் அத் தொழிலில் வசியம் இருக்க வேண்டும். அப்படி தொழில் வசியம் இருந்தால் தான் தொழிலில் பெரும் பணம் சம்பாதிக்க முடியும்.

ஒரு மனிதனுக்கு விடாமுயற்சி, அயராத உழைப்பு, தர்ம குணம், தன்னம்பிக்கை போன்ற குணங்கள் இருந்தும் வாழ்வில் வெற்றி பெற முடியவில்லையெனில் அதிர்ஷ்டம் இல்லை என்பது நன்கு தெரிகிறது. இல்லாத அதிர்ஷ்டத்தை பெற இக்கலை வழிகாட்டும்.

வெற்றிபெற துடிப்பவர்களுக்கு இது ஒரு சிறந்த வழிகாட்டியாகும். இதை பயன்படுத்துபவர்கள் அனைவரும் வெற்றியுடன் வாழலாம். என்னால் சவால்விட்டு நிரூபிக்க முடியும். இக்கலையின் மூலம் எம்மிடம் அதிர்ஷ்டப் பெயர் அமைத்தவர்கள் அனைவரும் இன்று வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். உடலின் காந்த சக்தி உயிர்ப்பு சக்திக்கு தக்கவாறு பெயரையும் கையெழுத்தையும் அமைத்தால் அபரிமிதமான அதிர்ஷ்டங்கள் கிட்டும்.

எம்.ஜி.ஆர்., சிவாஜி கணேசன், ரஜினி காந்த், பாக்கியராஜ், விஜய், சூர்யா, குஷ்பு, ரம்பா, சிம்ரன், ரோஜா, விஜயகாந்த் போன்ற சினிமா துறையினர்களும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும். பெயரில் வசியம் கோபுராம்சம் இருக்க வேண்டும்.

அரசியலில் வெற்றி, சினிமாவில் புகழ், விளையாட்டில் சாதனை, தொழிலில் மேன்மைகிட்டும். அந்த கால இராஜ ராஜ சோழன், அக்பர், புத்தர், மகாவீரர், அசோகர், பொற்கை பாண்டியன், நெப்போலியன், பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், இந்திராகாந்தி, வீரமாமுனிவர், செங்கோல் சேரன், ஆதிசங்கரர், காஞ்சி பெரியவர் போன்றோரும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும்.

அதிர்ஷ்டப் பெயர் சாதாரண மனிதனையும் பெரிய சாதனையாளராக ஆக்கக் கூடியது. கையெழுத்தால் தலை எழுத்தை வெல்லலாம்.

ஆண்-பெண் எந்த தேதியில் பிறந்தவராக இருந்தாலும் அவர்கள் திருமணம் செய்த நாளின் கூட்டு எண், திருமணத் தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண் 2,4,5,7,8 வரும் நாளில் கண்டிப்பாக திருமணம் செய்யக் கூடாது. அப்படி செய்தால் சோதனைகளும், போராட்டங்களும் நடக்கும். இதிலிருந்து விடுபட மறு மாங்கல்ய பூஜை அதிர்ஷ்ட நாளில் செய்து கொண்டால் குடும்ப வாழ்க்கை சந்தோஷமுடனும், வெற்றியுடனும் இருக்கும்.

அதிர்ஷ்டப் பெயர், எண் சாஸ்திரம் எக்காலத்திலும் மாறாத சக்தி கொண்டது. பெயரையும் இடும் கையெழுத்தையும் வளமாக்கிக் கொண்டால் என்றென்றும் வெற்றிகள்தான். இக்கலையின் மூலம் நான் சவால்விட்டு நிரூபித்துக் காட்டிய அறிவியல் விஞ்ஞான சாஸ்திரமாகும்.

இவர் எழுதிய (உலகின் No:1 நியூமராலஜி நூல்)

**"அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம்"**

என்னும் புத்தகத்தை வாங்கிப் படியுங்கள். எல்லா ஊர் புத்தக கடைகளிலும் கிடைக்கும். (தபால் மூலம் பெற ரூ. 300/- M.O. செய்யுங்கள். வெளிநாட்டினர் ரூ.1000/- அனுப்புங்கள்.)

**அதிர்ஷ்ட விஞ்ஞான ஜோதிடர்**
**கே.ஆர். பிரபாகர்ராஜ் எம்.ஏ.,**
**நல்லாத்தோட்டம், கணுவக்கரை (அஞ்சல்),**
**புஞ்சைபுளியம்பட்டி (வழி) - 638 459.**
**கோவை மாவட்டம்.**
**போன்: (04254) 87258, (098422)-13566.**
**விடுமுறை: செவ்வாய், வியாழன்**

**ஒவ்வொரு மாதமும் 2,3-ந் தேதிகளில் மட்டும் வெளியூர்ப் பயணம் குருபிரகாஷ் ஹோட்டல் (கீதாஞ்சலி) 71 ஏ. உஸ்மான் ரோடு. தி.நகர் சென்னை – 17. போன்: 4321414**

**நீங்களும் அதிர்ஷ்டம், புகழ், வெற்றி பெறலாம்.**

# வாட்டர்

## (தீபா மேத்தா, ஷபானா, நந்திதா கலக்காதது)

"தலைவரே, உங்களுக்கு தண்ணில கண்டம்! இப்போதுதான் கவனித்தேன்" என்று அலறியபடி ஓடி வந்தார் ஆஸ்தான ஜோதிடர்.

அசுவாரசியமாகக் கேட்டுக் கொண்ட தலைவர் அதிகம் சலனப்படவில்லை.

"வயதானபின் என் பழக்கவழக்க மாற்றங்கள் உங்களுக்குத் தெரியும். நான் தண்ணி அடிப்பதில்லையே? அப்புறம் எப்படி கண்டம்?"

"ஐயோ! நான் சொல்வது, குடிக்கிற தண்ணி! மக்கள்... குடிநீர்..."

"அதிலென்ன பிரச்னை? நமது 'நீர்'வாகம் மினரல் வாட்டர் போடும் அளவிற்கு வளர்ந்திருக்கிறதே!"

"அங்குதான் பிரச்னை! வரும் கோடையில் 'நீர்'வாகத்தால் மக்களுக்கு புட்டியிலும் கேன்களிலும் மட்டுமே தண்ணி சப்ளை செய்ய முடியும் போலிருக்கிறது! குழாயிலோ, லாரி டாங்கரிலோ அனுப்பிக் கட்டுப்படி ஆகாது. தட்டுப்பாடு, பயங்கர தீவிரமாகப் போகிறது!"

"அப்படியா?" என்று வார்த்தையை முழுங்க ஒரு 'மடக்' 'நீர்'வாக மினரலை உள்ளே இறக்கினார்.

உடனே, அவசரமாக அவை கூடியது.

"ஏதோ, 'வாட்டர்' ப்ராப்ளமாம்..."

"இங்கேயுமா? வடக்கேதான் 'Water' படப் பிரச்னை, தீபா மேத்தா படப்பிடிப்பில் தகராறு..." என்று ஆரம்பித்தார் நீர்வள அமைச்சர்.

"ஐயா, அமைச்சர் ஆகிவிட்டாலே நம் வேலையை இவ்வளவு மறந்து விடுவதா? நாங்கள் சொல்வது நம் நாட்டு குடிநீர் ப்ராப்ளம்!"

"நோ ப்ராப்ளம்! அது தானாக சரியாகிவிடும்!"

"தானாக சரியாகிவிடுமா? எப்படி?"

"நாலு நாள் கோடை மழை அடித்தால் குடிநீர்ப் பிரச்னை வெள்ளப் பிரச்னையாகி விடும். அப்புறம் நிவாரண நிதிதான்!" சிரித்தார் அமைச்சர்.

"கேட்கவே இன்ப நீர் வந்து பாயுது காதினிலே! சரி, மழை வரும் என்பது என்ன நிச்சயம்?"

"வராவிட்டால், வருண பகவானுக்கு பெரிய யாகம் நடத்தி, கொட்டோ கொட்டென்று கொட்ட வைத்து விட மாட்டோம்?"

பொறுப்போடு பதிலளித்தார் அமைச்சர்பெருமான்.

"யாகமா? நம் கொள்கைக்கு ஏற்காதே?"

"ஆனால் நம் சகோதரக் கட்சிக்கு? அல்வாவாயிற்றே! அதை செய்யச் சொல்லி நாம் மறைமுகமாக உசுப்பி விடுவோம். அதோடு ஒரு மேம்பாலம் மீது யாகம் நடத்தினால் அமர்க்களம்! மேகத்திற்கும் வருண பகவானுக்கும் அருகில் நடப்பதாக இருக்கும்! பெய்யெனப் பெய்யும் மழை!"

இப்படி ஒரு சீரிய திட்டம் அமைச்சரிடம் இருக்குமென்பதை எதிர்பார்க்காத கேள்வியின் நாயகன் வாயடைத்துப் போனார்.

பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த இன்னொரு அமைச்சர் குறுக்கிட்டார்.

"யாகம், ஹோமம் என்று போனால் உங்கள் பதவி பஸ்மமாகி விடும். புத்திசாலித்தனமாக செயற்கை மழை, வெளிநாட்டு கம்பெனிக்கு ஆர்டர், கொஞ்சம் மழை, கொஞ்சம் சொத்து என்று நாட்டுக்கு உகந்த நல்ல திட்டமாகப் போடுங்கள், தேறுவீர்!"

அப்போது தலைவர் வரவும், சலசலப்பு தற்காலிகமாக அடங்கியது. கூட்டம் துவங்க, நீர் மந்திரி எதிர்நோக்கியுள்ள பிரச்னையை விவரித்தார்.

தண்ணீர்த் தட்டுப்பாட்டுக்கான முக்கியக் காரணங்கள், மும்மாரி பொழியவில்லை; சரமாரியாக ஜனத்தொகை எகிறியது, ஒரு வீடே இருந்த இடத்தில் இருபது பெட்டிகள், நில நீரை மொடா முழுங்கியாக உறிஞ்சும் ராட்சஸ ஆழ்கிணறுகள், சாலை மறியல் காரணமாக சாய்ந்த மரங்கள், புதிய கூட்டணியை நியாயப்படுத்துவதிலும், எதிர்க் கட்சித் தலைவர்களை மீள முடியாத ஊழல்



வழக்குகளில் மூக்குவதிலும் அதிக நேரம் போனதால் அரசாங்கம் 'நிர்வாகத்தி'ற்கு முன்னேற்பாடாக எதுவும் செய்ய இயலாமை. இப்படியாக எத்தனையோ சதி. இதையெல்லாம் மீறி, 'யாக மழை' திட்டம் தயாராக உள்ளதென்றால் அதுவே நம் அரசின் வலிமை, பெருமை என்று விளக்கி முடித்தார்.

புளகாங்கிதமடைந்தார் தலைவர்.

அடுத்துப் பேசியவர், "எதற்கெல்லாமோ மேல்நாட்டைக் 'காப்பி' அடிக்கிறோம். அவர்களைப் போல இந்தக் கோடையில் யாரும் குளிக்கக் கூடாது; 'சன் பாத்' மட்டுமே எடுக்க வேண்டுமென்று சட்டம் போட்டு விட்டால் பாதிக்குப் பாதி தண்ணீர் தேவை குறைந்து, பற்றாக்குறை ஃபணாலாகி விடும்" என்றார்.

அதை ஆமோதித்த அடுத்தவர், "துர்நாற்றத்தைத் தடுக்க அரசு மக்களுக்கு இலவச சென்ட் வழங்கலாம். புடைவை வேட்டி வழங்கவில்லையா, அது போல!"

"நல்ல உத்தி!" என்று தலைவர் சொன்ன போது, "தலைவரே, அவரோட மச்சான் ஓடாத சென்ட் தொழிற்சாலை வைச்சிருக்கான்!" என்று கும்பலில் ஒரு குரல் கூவியது.

தலைவர் முறைத்தார்.

**மாதுரி**

## மாதம் ஒரு நகரம்

# அன்புள்ள மதுரைவாசிகளே!



மதுரைக்கு வருகிறோம்! மாநகராட்சியின் செயல்பாடுகளை அலசி ஆராயவும் மற்றுமுள்ள சாதனைகளையும் சோதனைகளையும் கவனிக்கவும்தான்!

நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம், உடனே எங்களுக்குக் கடிதம் எழுத வேண்டியதுதான். மதுரை மாநகராட்சிக்குட்பட்ட பகுதிகளின் பிரச்னைகள், அதிகாரிகள் அல்லது தனியாரின் சாதனைகள், பிற வியப்பூட்டும் விஷயங்கள் – வளர்ப்பானேன்? – 'இந்தச் செய்தி அவசியம் வெளி வர வேண்டும்' என்று நீங்கள் கருதுவனதயெல்லாம் உடனே எழுதியனுப்புங்கள்.

உங்கள் கடிதங்களின் அடிப்படையில் செய்தி சேகரிக்க எமது நிருபர்கள், மார்ச் **16, 17,18,** தேதிகளில் மதுரைக்கு வருவார்கள்.

ஆகவே கடிதங்கள் வந்து சேரக் கடைசித் தேதி **15.3.2000**

"அமைச்சரே! நம் நாட்டிலேயே அதிக நீர் உள்ள இடங்களிலிருந்து லாரி மூலம் கொண்டு வரும் திட்டம் என்னவாயிற்று?" எனக் கேட்டார்.

"தங்களுக்கே லாரி காண்ட்ராக்ட் தர வேண்டுமென்று ஒரே உட்பூசல்!"

உடன்பிறப்புகளின் சாமர்த்தியம் தலைவருக்குத் தலையைப் பிய்த்துக் கொள்ள வைத்தது.

நடந்தவற்றைப் பார்த்துக் கொண்டே பேசலாமா வேண்டாமா என்று குழம்பிய படி ஒரு ஓரத்தில் நின்று கொண்டிருந்தார் ஆஸ்தான வைத்தியர். கடைசியில் தலைவரின் உடல், மனநலன் கருதி தாம் நினைத்ததைப் பேசி விடுவதென்று முடிவு செய்தார்.

"தலைவர் அவர்களே, பல மாநிலங்களுக்கு இல்லாத கடல் நம்மிடம் உள்ளதே, அது ஒன்று போதுமே?" என்று ஆரம்பித்ததும் கூட்டமே அவர் பக்கம் திரும்பியது.

"கடல் நீர் குடிநீர்ப் பிரச்னைக்குத் தீர்வா?"

வியப்பாக இருந்தது தலைவருக்கு.

"ஆம் தலைவரே: கடல் நீரை அப்படியே குடிக்கலாம்; கட்டாயம் குடிக்க வேண்டும்!"

"கரிக்குமே! உப்பாயிற்றே?"

"அதற்காகத்தான் குடிக்கச் சொல்கிறேன். 'WHO' ஆய்வு நம் மக்களின் உடலில் உப்புச் சத்து குறைவென்று கண்டுபிடித்துள்ளது. சரியென்றும்படுகிறது. நம் மக்களுக்கு ஏதாவது லேசில் உறைக்கிறதா? ரோஷம் பொங்கி எதற்காவது கொதித்து எழுகிறார்களா? மாட்டார்கள். குடிநீர் இல்லையென்றால் மக்கள் தவிப்பார்களே என்று உறைக்காத அமைச்சர், பற்றாக்குறை வந்தால் தம்மைக் கடித்து குதறுவாரே என கவலைப்படாத 'நீர்வாகம்', அடிப்படைத் தேவைகளையாவது அரசு பூர்த்தி செய்ய வேண்டும் என யோசிக்காமல் வாணமே கதி என்று மானம் கெட்டு நிற்கும் மக்கள்!

"நம் உடலில் உப்புச்சத்து குறைவு என்பதற்கு இதைக் காட்டிலும் வேறு என்ன ஆதாரம் தேவை? 'அயோடைஸ்ட்' உப்பை ரேஷன் கடைகளில் விநியோகம் செய்வதை விட மேன்மையான திட்டம் கடல் நீர் குடிநீர்த் திட்டம்!"

இந்த டூ-இன்-ஒன் திட்டத்தைப் பற்றி அவர் பேசப் பேச, கூடியிருந்த அனைவருக்கும் – தலைவருக்கும் கூட உப்பு இனிப்பது போலிருந்தது. ●




சுவரின் மேலே மேலே போய்க் கொண்டிருந்தது ஒரு சிறிய பூச்சி. ஷாஜஹானின் வெள்ளைக் கல் அதிசயத்துக்குச் சற்றும் குறைந்திராத கலைத் தன்மையுடன் உருவாகியிருந்த சிலந்தி வலையொன்று அதன் பாதையில் குறுக்கிட்டது. விருந்தாளியே விருந்தாகும் வீடு! வேடன் சிலந்தி விரித்த வலையில் பூச்சி சிக்குமா?

மேலும் இந்தக் காட்சியைப் பார்க்கப் பிடிக்காமல் சுவாதி பார்வையைத் திருப்பினாள். காய்கறி நறுக்குவதில் முழுக் கவனத்தையும் செலுத்தத் தொடங்கினாள். முன்னா வெளியே பந்தைத் தூக்கிப் போட்டுப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தான்.

வெகு சீராகவும், வெகு வேகமாகவும் வெண்டைக்காய் நறுக்கப்படுவதைக் கண்டதும் சமைத்துக் கொண்டிருந்த கோமளாவின் நெஞ்சில் ஒரு நெகிழ்வுப் பனிக் கட்டி. 'சத்யாவின் பிரதிபிம்பம் இவள். மரபணுவின் தனித்தன்மை வெளியாகாதா என்ன?' எனினும் எதையும் பேச விடாமல் அவளைக் கழிவிரக்கம் தடுத்துக் கொண்டிருந்தது.

கடும் மௌனம். அர்த்தம் பொதிந்த நிசப்தம். ஆபரேஷன் தியேட்டரிலிருந்து உணர்ச்சிகளை வெளிக்காட்டாது வெளி வரும் டாக்டரின் பேச்சின்மை போல. மௌனத்தின் கனம் தாங்கும் திறனைத் தாண்டியது. கோமளா பேசத் தொடங்கினாள்.

“நீ எனக்கு ஒரு உதவி செய்யணும் சுவாதி. உன் அப்பா அம்மாவின் விவாகரத்தின் பின்னணியைப் பற்றியோ, இத்தனை வருடங்கள் உங்கம்மா ஏன் என்னை வந்து பார்க்கலேங்கிறதைப் பற்றியோ என்னிடம் கேட்காதே. இன்னும் ரெண்டே வாரத்தில் சத்யா வந்து விடுவாள். அவளிடமே இதையெல்லாம் கேட்டுத் தெரிஞ்சுக்க."



அதன் பிறகு சற்று நேரத்தில் உணவுப் படலம் தொடர்ந்தது. முன்னாவின் உடல், மனநலத்தை ஓரளவுக்கு கோமளாவிடம் ஏற்கெனவே விளக்கி விட்டிருந்தாள் சுவாதி.

“கவலையே வேண்டாம். இந்தக் காலனியின் வாட்ச்மேன் ரொம்ப உஷாரானவன். முன்னா வெளியே போய் விடாமல் பார்த்துக்குவான். நீ எப்போதாவது அவனை விட்டுட்டுத் தனியே வெளியே போகணும்னாலும் வாட்ச்மேனிடம் சொல்லிவிட்டுப் போனால் போதும். சுவாதி, நான் கொஞ்சம் கடைக்குப் போயிட்டு வரணும். இதை உன் வீடா நினைச்சுக்கிட்டு சுதந்திரமா இரு. ஆமாம், கையிலே ஏதாவது பணம் இருக்கா? இல்லை நான் தரட்டுமா?"

“இருக்கு."

“எவ்வளவு?"

அப்பாவின் லாக்கரிலிருந்து அவள்

எடுத்து வந்திருந்த தொகையைச் சொன்னதும் கோமளாவுக்குச் சிறு அதிர்ச்சி ஏற்பட்டது.

"இவ்வளவு தொகையைப் பெட்டியிலே வச்சுக்கலாமா? சரி, ஒன்னு செய்வோம். நான் பிரசாதை இங்கே அனுப்பி வைக்கிறேன். அவனுடைய வங்கியில் இந்தப் பணத்தை டெபாசிட் செய்திடு. ஒரு அவசரச் செலவுக்கு நூறோ, இருநூறோ கையில் இருந்தால் போதும்."

கோமளா கிளம்பிச் சென்ற அரை மணி நேரத்தில் வாசலில், "ஹலோ, நான் தான் பிரசாத், உள்ளே வரலாமா?" என்று கண்ணியமும், இனிமையும் நிறைந்த குரல் கேட்டது. நல்ல உயரமும், சுமாருக்கும் அதிகமான உடற்கட்டுமாகத் தோற்றமளித்தான் அந்த இளைஞன்.

இப்போது என்ன செய்ய? தானே யார் வீட்டிலோ இருக்கும்போது, இவனை வரவேற்க வேண்டுமா? தவிர, உரிமையாக வீட்டுக்குள்ளும் அவனே நுழைந்தபிறகு தான் எதற்காக வரவேற்பது?



"உலகம் உருண்டைங்கிறது சரியாத்தான் இருக்கு..."

"இப்ப என்னப்பா அதுக்கு...?"

"எங்க ஊர் சுத்தினாலும் சாப்பாட்டுக்கு கரெக்டா வீடு வந்து சேர்ந்துடறியே, அதான்!"

– மோ.சீ.

"வரீங்களா வங்கிக்குப் போகலாம். எனக்குக் காலை ஷிப்ட். ட்யூட்டி முடிஞ்சாச்சு. ஆனால் இந்த மாலை வேளையிலும் எங்க வங்கிக் கிளை திறந்திருக்கும். வாங்க. நல்ல நாளாயிருக்கு. போய் இன்றைக்கே கணக்கைத் துவங்கிடலாம்."

சுவாதிக்கு அவஸ்தையாக இருந்தது. இந்தக் கோமளா ஆன்ட்டியும் கூட வந்திருக்கக் கூடாதா?

"அடடா, எனக்கு இவ்வளவு இளமையான அழகான அக்கா மகள் இருப்பது இப்போதுதான் தெரியும். என்ன முழிக்கிறீங்க? உங்க அம்மா சத்யா எனக்கு அக்காமாதிரிதான். சரி சரி, சீக்கிரமா பணத்தை எடுத்துக்கிட்டுக் கிளம்புங்க. வாசலிலே முன்னா உட்கார்ந்திருக்கான். அவனையும் அழைச்சுக்கிட்டுப் போயிடலாம்" – அவன் கிளம்பினான்.

பெயரை அறிந்து வைத்திருந்தது மட்டுமல்ல, முன்னாவிடம் ஏற்கெனவே அறிமுகமும் செய்து கொண்டிருக்க வேண்டும் அவன். முன்னா வெகுசகஜமாக அந்தப் பிரசாதின் கையைப் பிடித்துக் கொண்டு நடந்தான்.

அம்மாவைப் பற்றி இந்தப் பிரசாத் அதிகம் அறிந்தவனாக இருக்க வேண்டும். ஆனாலும் சங்கடமான எந்தக் கேள்வியையும் அவன் தன்னிடம் கேட்காதது கொஞ்சம் ஆறுதலாக இருந்ததை நினைத்துக் கொண்டிருக்கும் போதே அவனிடமிருந்து கேள்வி பிறந்தது.

"உங்க பேர்?"

"சுவாதி."

"உங்க முழுப் பெயருமே சுவாதிதானா?"

இதென்ன கிறுக்குத்தனமான கேள்வி என்பது போல் அவனைப் பார்த்தாள்.

"உங்க அப்பா பேர் என்ன?"

"சந்திரமோகன். அவர் முழுப் பேருமே அதுதான்."

அவளது எரிச்சலை ஒரு நகைச்சுவையாகவே நினைத்து அவன் பலமாகச் சிரித்தான். பிறகு, "உங்கள் நட்சத்திரம் சுவாதியா?" என்றான்.

இவனால் கொஞ்ச நேரம் வாயை மூடிக் கொண்டு வர முடியாதா? என்றாலும் அவன் எதுவும் விகல்பமாகப் பேசுவதாகவும் தெரியவில்லையே. இந்நேரம் அப்பாவும் கூட இருந்தால் இதை எப்படி ரசித்திருப்பார் என்ற எண்ணமும் தோன்றியது.

"கேட்டேனே, உங்க நட்சத்திரம் சுவாதிதானா?"

விடாக்கண்டன். ஆமாம் என்பது போல் தலையசைத்தாள்.

"நல்லவேளை. நம்ம நாட்டிலே அவங்கவங்க நட்சத்திரத்தைத்தான் பெயராக வைக்கணும்னு யாரும் சட்டம் போடலே. அஸ்வினி, பரணி, சுவாதி, ரேவதியெல்லாம் தப்பிச்சிடுவீங்க. எங்க பாடுதான் திண்டாட்டம். நீங்களே சொல்லுங்க. மிருகசீரிஷம்னு எனக்குப் பெயர் வச்சிருந்தா நல்லாவா இருக்கும்?

"உங்க பாங்க் இன்னும் எவ்வளவு தூரத்திலிருக்கு?"

"ஓ, உங்க மூடைத் தெரிஞ்சுக்காம அறுக்கிறேனோ? ஆமாம், உங்க அப்பா சமீபத்தில் இறந்துட்டதாகக் கேள்விப்பட்டேன். சாரி. அது இயற்கையான மரணம்தானே?"

கோமளா ஆன்ட்டியின் வீட்டுக்கு மட்டுமல்ல, காசிக்கே திரும்பிப் போய் விடலாமா என்று தோன்றியது அவளுக்கு.

"ஓகே. அவர் இயற்கையாக மரணமடைஞ்சதாகவே வச்சுக்குவோம். உங்க வயது என்ன? மேஜர் ஆயிட்டீங்களா?"

இதுபோன்ற வயது, மேஜர் போன்ற கேள்விகளைக் கேட்கும் இளைஞர்கள் எப்படிப்பட்ட எண்ணம் கொண்டவர்களாக இருப்பார்கள், அவர்களிடமிருந்து எத்தனை தூரம் தள்ளியிருக்க வேண்டும் என்பது பற்றி அப்பா பலமுறை கூறியிருக்கிறார்.

இப்போது என்ன செய்ய? சுவாதியின் கண்களில் நீர் நிரம்பியது.

"ஐயையோ, அழறீங்களா? நான் கேட்ட விவரங்களையெல்லாம் எனக்காகக் கேட்கவில்லை. வங்கியில் கணக்குத் துவக்கும்போது விண்ணப்பத்தில் இந்த மாதிரி விவரங்களைக் கேட்டிருப்பாங்க."

தன்னை அறிமுகப்படுத்திய பிரசாதே அந்த வங்கியின் ஊழியன் என்பதால் கணக்கைத் துவக்கும் படலம் சற்று விரைவாகவே நடந்து முடிந்தது.

'அப்பா, ஒரு தொல்லை விட்டது' என்றபடி பணத்தை கட்டிவிட்டு பாஸ் புக்கோடு அங்கிருந்து கிளம்பும்போதுதான் அந்த விபரீதம் நடந்தது. "அந்த ஆள் என்னைப் பற்றி ஏதோ கேவலமாகப் பேசறான் அங்கிள்" என்று பிரசாதிடம் முறையிட்டான் முன்னா. அவன் முகத்தின் நரம்புகளெல்லாம் முறுக்கேறிக் கொண்டிருக்க, வாய் ஓர் அசௌகரியமான விதத்தில் பிளந்து கொண்டிருந்தது. அவன் குற்றம் சாட்டிய ஆள் – அதுவரை வேறு கவனச் சிதறலின்றி தன் காரியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தவன் – இப்போது, "என்னையா பழி சொல்கிறாய்?" என்ற பிரமிப்பை வெளிக்காட்டினான்.

சுவாதிக்குப் படபடப்பாக இருந்தது. போச்சு, ரயிலில் நடந்தது போலவே இங்கும் ஒரு கைகலப்பு ஏற்படப் போகிறது!

"இல்லேடா முன்னா" என்று அவன் கூறத் தொடங்கும்போதே பிரசாத் இடை மறித்தான். "அவன்தானே, சரியான கிராதகன். என்னைக் கூட அவன் தாறுமாறாகத் திட்டியிருக்கிறான். அப்புறமாக ஒருநாள் வந்து அவனோடு நாம் குஸ்தி போடலாம்" என்று கூறியபடி முன்னாவுக்குத் தெரியாமல் அந்தக் 'கிராதக' நண்பனைப் பார்த்து, "சும்மா விளையாட்டுக் குத்தான்" என்பது போல் கண்ணடித்து விட்டு வெளியேறினான்.

வங்கிக்குப் போகும்போது எவ்வளவு விளையாட்டும் சிரிப்புமாக இருந்தானோ அதற்கு நேர்மாறான சீரியஸ்னெஸ் தென்பட்டது பிரசாதிடம் வீட்டுக்குத் திரும்பும்போது.

"முன்னாவின் கண்டிஷன் பற்றி நாம் கொஞ்சம் விவாதிக்கணும் சுவாதி. அப்புறமா நேரம் கிடைக்கும்போது என் வீட்டுக்கு வாங்க. சத்யாக்காவின் மகனைப் பார்க்கணும்னு எங்க அப்பா அம்மாவுக்கும் ரொம்ப ஆசை" என்று



''காசில்லாம சாப்பிட்டுட்டு ஜொள்ளைப் பார்த்தியா?''

''என்ன விஷயம்?''

''கிரைண்டர்லதான் மாவாட்டுவாராம்!''

- ஜூனியர் சக்தி'

கூறிக் கொண்டே வந்தவனின் முகம் கொஞ்சம் மாறியது. அங்கிருந்த குட்டிச்சுவரில் உட்கார்ந்து கொண்டிருந்த நாலைந்து பேர் இவனைப் பார்த்துக் கையசைத்தார்கள். சங்கடத்துடன் பதிலுக்குத் தலையசைத்து விட்டு வேகமாக அந்த இடத்தைக் கடந்தான் அவன்.

அதற்குப் பிறகு அவன் பேசவில்லை.

வீடு நெருங்கியவுடன், "ஒரே ஒரு நிமிடம் என் வீட்டுக்கு வர முடியுமா? அங்கேயிருக்கும் ஒரு படகை நான் உங்களுக்குக் காண்பிக்க விரும்புகிறேன்" என்றான் தீவிரமான குரலில்.

'அதெல்லாம் இன்னொரு சமயம் பார்த்துக் கொள்ளலாம்' என்றுதான் சுவாதி கூற நினைத்தாள். ஆனால் அதற்குள், "ஹை, படகா? நான் இப்பவே பார்க்கணும்" என்று உற்சாகத்துடன் குதிக்கத் தொடங்கினான் முன்னா. சற்றுமுன் ஏற்பட்ட மனஇறுக்கத்திலிருந்து இப்போதுதான் விடுபட்டிருந்தான்.

"இதுதான் என் வாழ்க்கையையே திசை திருப்பிய படகு" என்று பிரசாத் தன் வீட்டில் மாட்டப்பட்டிருந்த ஒரு ஓவியத்தைக் காட்டினான்.

மிக சாதாரண ஓவியம்தான். ஆற்றின் நடுவே ஒரு மரம். அதற்கருகே ஒரு படகு. அதை இரண்டு பேர் துடுப்புப் போட்டு ஓட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

இதில் எதுவும் அளிக்காத சுவாரசியத்தை அந்த ஓவியத்தின் கீழ் பொடி எழுத்துக்களில் காணப்பட்ட 'சத்யா' என்ற பெயர் அவளிடம் உண்டாக்கியது.

"இந்த ஓவியம் எப்படி உங்களுக்குத் திருப்புமுனையாக அமைந்தது?" என்று கேட்டாள் சுவாதி. தனது வாழ்வுக்கும் அதே ஓவியம் புதிய ஒளியைச் சுமந்து வரப் போகிறது என்பதை அறியாமல்.

(தொடர்ந்து பறக்கும்)

# லீவா? அப்படீன்னா?

சேலத்தில், மணக்காடு கிழக்குத் தெருவில் வசிப்பவர் மதலைமுத்து. அரசு மோட்டார் வாகனப் பராமரிப்புத் துறையின் சேலம் பணிமனையில் 39 வருடங்கள் பணியாற்றி, சமீபத்தில் ஓய்வு பெற்றிருக்கும் இவர், வாழ்வில் ஒருமுறை கூட வேலைக்கு லீவ் போட்டதே இல்லை.

கடின உழைப்பாலும், அபாரமான வேலைத் திறனாலும் சாதாரண மெகானிக் நிலையிலிருந்து படிப்படியாக உயர்ந்து 'ஃபோர்மெனாக'ப் பணியாற்றியுள்ளார் மதலை முத்து.





காலை எட்டு மணிக்கு வேலை ஆரம்பம் என்றால், இவர் ஏழரை மணிக்குள் பணிமனையின் வாசலுக்குச் சென்று விடுவாராம்.

தான் வேலை செய்வதிலாகட்டும், மற்றவர்களை வேலை வாங்குவதிலாகட்டும் அத்தனை கறார்; கண்டிப்பு! கடமையிலிருந்து நழுவாத பொறுப்பு.

விடுமுறை என்றால் பொதுவாக எல்லோருக்கும் வெல்லப் பாகாய் இனிக்கும் விஷயமாய் இருக்க, இவருக்கு மட்டும் கசந்து போன ஒன்றாய் இருக்கிறது.

"ஒரு சாதாரண கூலித் தொழிலாளியின் மகன் நான். என்னை இந்த அளவுக்கு உயர்த்தியது இந்தத் தொழில்தானே! இதன் மீதுள்ள விசுவாசத்தால்தான் எனக்கு விடுமுறை எடுக்கவே மனமில்லை" என்கிறார் மதலைமுத்து.

"சொந்தக்காரங்க, தெரிஞ்சவங்க வீட்டு நல்லது கெட்டதுக்கெல்லாம் நான் மட்டும் புள்ளைங்களை அழைச்சிக்கிட்டு போய் வருவேன். இவர் வேலை முடிஞ்சி வந்ததுக்கப்புறம், இல்லாட்டி சனி, ஞாயிறு போல ஒரு எட்டுப் போயி பாத்துட்டு வந்துடுவார். அவ்வளவுதாங்க!'' என்கிறார் மதலைமுத்துவின் மனைவி அந்தோணியம்மாள்.

பள்ளி மாணவர்களுக்குத் தரப்படும் பிராக்ரஸ் ரிப்போர்ட் போல, பணிமனை ஊழியர்களுக்கும் மெரிட் கார்டு என்று உண்டாம். ஆறு மாதத்திற்கு ஒருமுறை தரப்படுவது. துவக்கத்திலிருந்து தன் சர்வீஸ் காலம் முழுமைக்கும் அந்த மெரிட் கார்டுகள் அனைத்திலும் நூற்றுக்கு நூறு மார்க்குகள் பெற்றிருப்பதாகப். பெருமையுடன் கூறுகிறார் மதலைமுத்து.

1976ல் சேலம் பணிமனைக்கு விசிட் செய்த மோட்டார் வாகனப் பராமரிப்புத் துறையின் இணை இயக்குனர், "மதலைமுத்து நமது அரசின் மோட்டார் வாகனப் பராமரிப்புத் துறைக்குக் கிடைத்த சொத்து!" என்று சர்வீஸ் புக்கில் எழுதி வைத்ததைப் புன்னகையுடன் நினைவு கூர்கிறார்.

மருத்துவ விடுப்பு, ஈட்டிய விடுப்பு என்றில்லாமல் அரைச் சம்பள விடுமுறைகூட எடுத்ததில்லை. மருத்துவ விடுமுறையாக 540 நாட்களும், ஈட்டிய விடுமுறையாக 240 நாட்களும் அவர் தனது பணிக்காலத்திற்குள் எடுத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் இந்த விடுமுறைகளைக்கூட அவர் பயன்படுத்திக் கொள்ளவில்லை. மொத்தம் 780 நாள் விடுப்பை மனப்பூர்வமாக அரசுக்குத் தியாகம் செய்திருக்கிறார்!

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# ஜீ.... பூம்.... பா.



குழந்தைகளை குதூகலப் படுத்த, யூடிவி தயாரித்து அளித்துள்ள தொடர் ஜீ.... பூம்.... பா. இது விஜய் டிவியில் ஜனவரி 23 முதல் ஞாயிறு தோறும் இரவு 8.00 மணிக்கு ஒளிபரப்பாக உள்ளது.

குழந்தைகளின் உலகம் வித்தியாசமானது. அதில் அவர்கள் எண்ணிய வண்ணம் நடக்கிறது. நினைத்த பொருட்கள் அவர்களுக்கு கிடைக்கின்றன. அருணின் பெற்றோர்கள் இருவரும் தங்கள் வேலைப் பளு காரணமாக அருணுடன் அதிக நேரம் செலவிட முடியவில்லை. அருண் தான் ஒதுக்கப்பட்டுள்ளதாக நினைத்து தனிமையில் வளர்கிறான். இந் நேரத்தில் அவனுக்கு ஒரு மேஜிக் பென்சில் கிடைக்கிறது. ஜீ.... பூம்.... பா. அருண் அந்த பென்சிலால் வரையும் உருவங்கள் உயிர் பெற்று வருகின்றன. வாழ்க்கை வண்ண மயமாகிறது அருணுக்கு. அருணுக்கு மட்டுமல்ல அனைத்து குழந்தை களுக்கும்தான்.



சமந்த்ராஜ் இயக்கத்தில் மலர்கிறது ஜீ... பூம்.... பா... தொடர்.




**விஜய் டி.வியில் ஜனவரி 23 முதல் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் இரவு 8.00 மணிக்கு**

## அக்னிசர்மா பக்கம்

### மார்ச் 8 முதல் 14 வரை

# நடக்குமென்பார்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

இந்த வாரம் ரொம்ப சுமுகமாகவே கழியும். பேச்சாற்றல் பிரகாசமா இருக்கும்னாலும் லூஸ்டாக் விட்டு ஆபீஸ்ல மாட்டிக்காதீங்க. பணவரவு திருப்தியாவே இருக்கும். உடன்பிறந்தவங்களால ஏதாவது சிறு பிரச்னை அல்லது கவலை ஏற்படலாம். பெண்களுக்கு இது ரொம்ப நல்ல வாரமா இருக்கும். எதிர்பாராத இடங்கள்லேருந்து ஆதாயம் கிடைக்கும். பயணத்துல மட்டும் எச்சரிக்கையா இருக்க வேண்டியது அவசியம்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உங்க தன்னம்பிக்கைதாங்க உங்க பலமே! எத்தனை தடைகள் வந்தாலும் சமாளிப்பீங்க. உங்களோட முக்கியமான பிரச்னை என்னன்னா, நீங்க வைச்சிருக்கற லட்சியத்துக்கும், இப்ப நின்னுட்டிருக்கற இடத்துக்கும் நடுவுல இருக்கற பெரிய இடைவெளி. சொந்தக்காரங்க, நண்பர்கள் யாருமே உங்களுக்கு ஆதரவா இல்லை. அலுவலகத்திலும் பிரச்னைகள். ஆனாலும் சமாளிப்பீங்க! இந்த வாரம் பல சமயங்கள்ல – குறிப்பா கோபம் வரும் போது மௌனம் காக்கறது ரொம்ப நல்லது.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

இந்த வாரம் கண்ட இடங்கள்ல சாப்பிட்டு உடம்புக்கு வரவழைச்சிக்கப் போறீங்க. வெளில நிறைய அலைய வேண்டி வரும். ஆனா, எதிர்பார்த்த பணவரவு வந்து சேராது! வீட்டுல ஒரு நல்ல காரியம் நடக்கப் போவுது. அநேகமா உங்க பூர்வீக சொத்து ஏதாவது கிடைக்கறதுக்கான அறிகுறி தெரியலாம். ஆபீஸ்ல மேலதிகாரிகளோட வாதம் பண்ணாதீங்க. வீட்டுல கூட பெரியவங்களை எடுத்தெறிஞ்சு பேசாதீங்க. இப்ப உங்க நண்பர்களால சில பிரச்னைகள் வரலாம். கொடுக்கல் வாங்கல் பிசினஸ் மட்டும் வைச்சிக்காதீங்க.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

பிரச்னை அதிகமில்லை. திட்டப்படி உங்க காரியங்கள் நடக்கும். வெளிநாட்டுத் தொடர்புள்ளவங்களுக்கு, அங்கிருந்து ஒரு நல்ல சேதி வரும். பணப் பிரச்னை இருக்காது. பழைய பாக்கிகள் வசூலாகும். விருந்துகள்ல கலந்துக்கற வாய்ப்பு கூடி வரும். ஆபீஸ்ல பிரமோஷனுக்கு வாய்ப்பு இருக்கு. அதிகாரிகள் கூட அனுசரணையா நடந்துக்கறது அவசியம்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உங்க எதிரிகள் ஓடி ஒளியறாப்பல இப்ப உங்க பராக்கிரமம் கூடப் போகுது. எதிலும் வெற்றிதான். கவலையே படாதீங்க. மனைவி மூலமா சில ஆதாயங்கள் கிடைக்கும். பூர்வீக சொத்து விஷயமா ஏதாவது வழக்கு இருந்ததுன்னா அது சுலபமா தீரும். வீட்லே நல்ல காரியங்கள் நடக்குறதுக்கான ஏற்பாடுகள் நடக்கும். தாய் உடல்நலன்ல அக்கறை செலுத்துங்க. சிறு மருத்துவச் செலவுகள் வரலாம்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

கொஞ்சம் உஷாரா இல்லாட்டா, ரொம்ப நெருங்கினவங்களே கூட உங்களுக்கு எதிரா செயல்படக் கூடிய நேரம் இது. புது முயற்சிகள் எதுவும் இப்ப வேணாம். முக்கியமான விஷயங்களை பகிரங்கமா நாலு பேர் எதிர விவாதிக்காதீங்க. குறிப்பா, ஆபீஸ்ல யாரைப் பத்தியும் அபிப்பிராயம் சொல்லாதீங்க. மன அமைதி குறையறாப்பல வீட்டுலயும் சில பிரச்னைகள் வரலாம். பணப் பிரச்னையும் இருக்கும். கடன் வாங்கிட்டுப் பின்னால கஷ்டப்படாதீங்க.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

உங்க புது முயற்சிகள் எதுவானாலும் பலனளிக்கற வாரம். தைரியமா செயல்படுங்க. வீடு, மனை வாங்கவும் ஏற்ற

சூழ்நிலை. வெளிநாட்டு வேலை வாய்ப்பு சிலருக்கு அமையும். பெண்களுக்குத் திருமண யோகம் கூடி வரும். வயசானவங்களுக்கு ஆன்மீக டூர் அடிக்கற வாய்ப்பும் இருக்கு. மருத்துவர்கள் செயற்கரிய சாதனை ஒன்னு செய்து பெரும் புகழடைவாங்க. ஆசிரியர்கள், எழுத்தாளர்களுக்கும் இது ஓஹோ வாரம்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்க திறமையும் ஆற்றலும் வெளிப்படற வாரம். தொட்டதெல்லாம் துலங்கும். வராத பணம் வந்து சேரும். வீட்டுல மகிழ்ச்சிக்கும் குறைவிருக்காதுன்னாலும், உங்க மகன் அல்லது மகளுக்கு லேசான உடல்நலக் குறைவு வரலாம். மனைவி உடல் நலத்துலேயும் அக்கறை செலுத்துங்க. கலைஞர்களுக்குப் புகழ் கூடும் வாரம் இது. புதிய ஒப்பந்தங்கள் ஏற்படும். வர்த்தகத் துறையினருக்கு லாபகரமான நேரம். பார்ட்னர்ஸ் விஷயத்துல மட்டும் கொஞ்சம் எச்சரிக்கையா இருங்க.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்க அந்தஸ்தும் கௌரவமும் உயரும் வாரம் இது. வீட்டு உபயோகப் பொருட்களா வாங்கித் தள்ளுவீங்க. பொருளாதார நிலைமை தாராளமாவே இருக்கும். கொடுக்கல் வாங்கல் சீராவே இருக்கும். நண்பர்கள் சமயத்துல உதவுவாங்க. வீட்டுல மகிழ்ச்சிக்குக் குறையிருக்காதுன்னாலும் பெற்றோர் உடல்நலத்துல கவனம் செலுத்த வேண்டியது அவசியம்.

# நடக்கும்!



மீன ராசிக்காரரான பிரபுவுக்கு ஏதோ இன்ப அதிர்ச்சி ஒன்னு இப்ப வரப் போகுது!



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

விளையாட்டுத் துறையினருக்குப் பிரமாதமான வாரம் இது. பரிசும் பாராட்டும் குவியும். பணப் பிரச்னையோ, வேறெந்த பிரச்னையோ இருக்காது. மனைவி வழில சில ஆதாயங்கள் கிடைக்க வாய்ப்பு இருக்கு. சில புதிய பொருட்கள் வாங்குவீங்க. உபயோகமான பொருட்களோட கூட, சில ஆடம்பரமான பொருட்களும் வாங்குவீங்க. புதிய மனிதர்கள் விஷயத்துல எச்சரிக்கையா நடந்துக்க வேண்டியது அவசியம்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க நல்ல எண்ணங்கள் கண்டிப்பா நிறைவேறும். வீட்டுல மகிழ்ச்சிக் களைகட்டும். கொஞ்சம் விட்டுக் கொடுத்து நடந்துக்கிட்டீங்கன்னா, முரண்டு பிடிக்கறவங்க கூட மாறிடுவாங்க. பெண்களுக்கு உடம்பு கொஞ்சம் படுத்தும். மருத்துவச் செலவு கூட வரலாம். ஆபீஸ்ரீதியா சிலர் வெளியூர் போய் வர வேண்டி இருக்கலாம். சிலருக்கு வீடு, மனை வாங்கற யோகம் இருக்கும். புண்ணியத் தலங்களுக்கும் போய் வரும் வாய்ப்பு சிலருக்குக் கிடைக்கும். மொத்தத்துல இது பிரச்னை இல்லாத வாரம்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உங்க நிர்வாகத் திறமை, சாமர்த்தியம் கொடிகட்டிப் பறக்கும். எதிரிங்க பணாலாயிடுவாங்க. பதவி உயர்வு காலதாமதமில்லாம கிடைக்கும். வீட்டுல கல்யாணப் பேச்சு வார்த்தை நடக்கும். எதிர்பாராத இன்ப அதிர்ச்சி ஒன்னு கண்டிப்பா கிடைக்கும். வெளியூர் பயணங்கள் ஆதாயம் தரும். பணப் பிரச்னை இருக்காது. நாய், தேள் மாதிரியான ஜீவராசிகள் விஷயத்துல எச்சரிக்கையா இருக்கணும். ●

# நர்த்தனக் கோலம்

நீடாமங்கலம் கிருஷ்ணமூர்த்தி பாகவதர் கண்ணன் கதைகளைக் கோத்து ஹரிகதை நிகழ்ச்சி வழங்குவார். இடையிடையே அவர் ஊத்துக்காடு வேங்கடசுப்பையரின் பாடல்களைப் பாடுவதைக் கேட்க வெகு அழகாக இருக்கும்.

காளிங்கநர்த்தன ஜதியைப் பாடி அவையோரை அப்படியே யமுனைக் கரைக்கு அழைத்துக் கொண்டு போய் விடுவார். சபையில் தரையில் உட்கார்ந்து கொண்டு ரசித்த அத்தனை பேருடைய முகங்களும் மலர்ந்து கண்ணன் நடனமாடுவதைப் பார்ப்பது போல மெய்மறந்திருப்பார்கள். பாகவதர், "ஆடாது அசங்காது வா" என்று கண்ணனைக் கூப்பிடும்போது கண்ணன் தளர் நடையிட்டுக் கொண்டு அந்தக் கூட்டத்தில் வழி பண்ணிக் கொண்டு வருவது போலத் தோன்றும். கால்களில் சிலம்புகள் கொஞ்ச, கை வளை குலுங்க முத்து மாலைகள் அசைய மயில் பீலி கொண்டையில் மிளிர கண்ணன் நிற்பது போல் தோன்றும். ஊத்துக்காடு வேங்கடசுப்பையர் பாடல்களில் அப்படி ஒரு கற்பனா சக்தி!



குழந்தை கண்ணனின் லீலைகளை அழகிய தமிழில் வர்ணிக்கும் இந்தக் கீர்த்தனைகள் பிறக்கக் காரணமாக இருந்த காளிங்கநர்த்தனக் கண்ணனை இப்போது தரிசிக்கலாமா?

கும்பகோணத்திலிருந்து பத்து கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது ஊத்துக்காடு. நெல் வயல்கள் கண்ணுக்கெட்டின தூரம் தெரியும் மருதநிலம். கானக யமுனையில் காளியன் தலையில் களிநடம் புரியும் கண்ணன் இங்கே எப்படி வந்தார்?

அதற்கு ஒரு மிக அழகான கதை இருக்கிறது. நாம் கேட்ட காளிங்கன் கதை. ரமணகத் தீவு என்ற நடுக்கடல் தீவில் காளியன் என்ற ஐந்து தலை நாகம் வசித்து வந்தது. கருடன் பாம்புகளின் எதிரியாயிற்றே.

காளியனைக் கொல்ல முயற்சித்தார் கருடன். காளியன் தப்பியோடி கங்கை யமுனை நதிகளின் வழியாக ப்ருந்தா வனம் வரை வந்து விட்டது. அங்கே சௌபரி என்ற முனிவரின் சாபத்தின் காரணமாக கருடனால் வர முடியாது என்பதை அறிந்து கொண்டது! (அது மீன்களின் சரணாலயம்) அந்த மிக ஆழமான மடுவில் தன் மனைவியரோடு குடியேறியது. அதனால் அந்த மடுவும் சுற்றுச் சூழலும் விஷமாகி விட்டன.

இந்த இடத்துக்குக் குழந்தை கண்ணனும் பலராமனும் ஆயர் சிறுவர் களுடன் மாடு மேய்க்க வந்தார்கள். கண்ண னால் சும்மா இருக்க முடியுமா? ஆநிரைகள் ஆனந்த மாகத் தண்ணீர் பருகவும், ஆபத்தில் லாமல் திரியவும் அருள்புரியத் திருவு ளம் கொண்டார். மரத்தில் ஏறி மடுவில் "டைவ்" செய்து சிறி எழுந்த காளியன் தலையில் நின்று திருநட னம் புரிந்தார். காளியன் களைத்துப் போயிற்று. காளியனின் பத்தினிகள் கண்ணனிடம் மாங்கல்யப் பிச்சை கேட்ட னர். கண்ணன் காளியனைப் பழைய தீவுக்கே போகும்படி கட்டளையிட்டதோடு தன்னுடைய சின்னஞ்சிறு பாதங்களின் சுவடுகள் காளியன் தலையில் இருப்பதால் கருடனால் தீங்கு நேரிடாது என்றும் வரம் கொடுத்தார்.

இந்தக் கதை எத்தனை தடவை கேட்டா லும் அலுப்பதில்லை. எத்தனை தடவை சொன்னாலும் அலுப்பதில்லை. கண்ணன் காளியன் தலையில் நர்த்தனம் செய்ததற்குப் பௌராணிகர்கள் பல தத்துவார்த்தங்களைக் கூறுகிறார்கள்.

# சிரித்தாடும் கண்ணன்



• வேங்கடசுப்பையர்



• விநாயகர்

**ஊ**த்துக்காடு என்ற சிறிய கிராமத்துக் குக் காளியநர்த்தனக் கண்ணன் எப்படி வந்தார்? இந்தக் கிரா மத்தின் அருகில் ஆவூர் என் றும் கோ வந்த குடி என்றும் பசுவின் பெயரால் அழைக்கப் படும் சிற்றூர்கள் இருக்கின் றன. மருத நிலமாக மாறு வதற்கு முன்னால் இந்த இடம் காடாக இருந்ததாம். வசிஷ்ட மகரிஷியின் ஆசிரமம் இருந்த தாம். அவருக்குத் தொண்டாற்ற வந்த காமதேனு நந்தினி, பட்டி என்ற தன் இரண்டு பெண்களை யும் வசிஷ்டரிடம் அடைக்கலம் கொடுத்துவிட்டு தேவலோகம் போய் விட்டது. வசிஷ்டர் பூஜித்து வந்த லிங்கத்துக்கு அபிஷேகம் செய்யப் பாலைப் பொழிந்து கொடுத்து வந்த காமதேனுவின் மகள் களான நந்தினியும் பட்டியும், ஈச் வரனுக்கே இந்தப் பசுக்களின்

ஆனந்தி

பக்தியால் பசுபதீச்வரர் என்ற பெயர் ஏற்பட்டது. ஆவூர் பசுபதீச்வரர் கோவிலை தசரதர் கட்டிக் கொடுத்தாராம்.

இந்தக் காட்டுப் பிரதேசத்தில் நந்தினியும் பட்டியும் மேய்ந்து கொண்டு சந்தோஷமாக இருந்தன. ஒருநாள் நாரத முனிவர் அங்கே வந்து சேர்ந்தார். "நாராயணா! நாராயணா" என்று அவர் சொல்லிக் கொண்டும் கண்ணன் அவதார லீலைகளைப் பாடிக் கொண்டும் வந்தார். நந்தினியும் பட்டியும் முனிவரிடம் வந்து, கண்ணன் பிறந்த கதையைச் சொல்லும்படிக் கேட்டன. நாரதரும் ஒரே சந்தோஷமாகக் கதை சொன்னார். ஆர்வத்துடன் கண்ணன் கதையைக் கேட்டுக் கொண்டு வந்த இரண்டு பசுக்களும், "கண்ணன் காளிங்க மடுவில் குதித்தார்; காளிங்கன் அவரைச் சுற்றிக் கொண்டது" என்று நாரதர் சொன்னபோது, கண்ணபெருமானுக்கு ஆபத்து வந்து விட்டதே என்று நடுநடுங்கிப் பதறிப் போய் அங்குமிங்கும் துள்ளித் துள்ளிக் குதித்தன. தவித்துத் தடுமாறிக் கண்ணீர் சொரிந்தன. நாரதரே சமாதானப்படுத்த முயற்சித்தும் அவை சமாதானமடையவில்லை. நந்தினி, பட்டியின் பதற்றத்தையும் அன்பினால் அவை இரண்டும் கதறியழுது சோர்ந்து விட்டதையும் கண்ட கண்ணபிரான் அவர்களுக்கு அருள் புரியத் தீர்மானித்தார்.

உடனே அருகில் ஒரு ஊற்றுப் பிறந்து பெரிய தடாகமாயிற்று. அந்தத் தடாகத்தின் மத்தியில் கண்ணன் காளிங்கன் மீது நடனமாடிய அற்புதக் காட்சியை பசுக்களும் நாரதரும் கண்டு மகிழ்ந்தார்கள். கண்ணனுக்கு ஆபத்து இல்லை என்று அறிந்ததும் பசுக்கள் சமாதானமடைந்தன. இப்படி கண்ணன் அருளால் ஊற்றுப் பிறந்த இடம் ஊத்துக்காடு ஆயிற்று. இந்த இடத்தை மூச்சுக்காடு என்றும் சொல்வார்கள். பசுக்கள் இரண்டும் நிம்மதிப் பெருமூச்சு விட்ட இடம் வடமொழியில் "தேனு ஸ்வாஸபுரம்" ஆயிற்று.

காளிங்க மடு என்றே தடாகத்துக்குப் பெயர் வந்தது. நாரத மகரிஷியே அதன் அருகில் கண்ணனுக்குக் கோவில் கட்டினார்.

**க**தைகள் ஒருபுறமிருக்கட்டும்! ஊத்துக்காடு கோவிலில் காளிங்கனின் சிரத்தின் மீது இடது காலை ஊன்றி வலது காலைத் தூக்கிக் கொண்டு ஒரு கையால் பாம்பின் வாலைப் பிடித்து, வலது கையில் அபய ஹஸ்தத்துடன் தரிசனம் கொடுக்கும் கண்ணனின் திருவுருவத்தைக் காணப் புண்ணியம் செய்திருக்க வேண்டும். மொழு மொழுவென்ற கால்களும், பளபளவென்ற கன்னங்களும் கையை நீட்டியிருக்கும் லாகவமும், தூக்கிக் கட்டிய கொண்டையும் சுருண்டு சுருண்டு நெற்றி வரை தொங்கும் மோதிரச் சுருட்டையான கேசமும் பாதங்களின் பிஞ்சு விரல்களும் மாயப் புன்னகையுமாக நர்த்தனமாடுகிற கண்ணனின் வடிவத்தைச் செய்த பெயர் தெரியாத சிற்பிக்கு நமஸ்காரம்தான் செய்ய வேண்டும். இந்த விக்ரஹத்தை சிலை என்றே பாவிக்க முடியவில்லை. பாம்பின் உடலில் உள்ள நெளிவுகளும், ஐந்து தலைகளுக்கு அடியில் புருஷ ரூபத்தில் காளிங்கனும், கைகூப்பிய நிலையில் அவன் மன்னிப்புக் கேட்பதும் நேரிலேயே காண்பது போல நமக்குப் பிரமையை ஏற்படுத்துகிறது. இதுவே அதிசயம். இதற்கும் மேல் பேரதிசயம் ஒன்று இருக்கிறது. காளியன் தலை மீது கண்ணன் பாதம் முற்றிலும் பதியவில்லை. ஒரு மெல்லிய நூலை தலை மீது வைத்துப் பின்பக்கம் இழுத்தால் கண்ணன் பாதத்துக்கடியில் அது நுழைந்து வந்து விடுகிறது. இந்தச் சிலை கோவிலின் அருகில் உள்ள காளிங்க மடுவில் கிடைத்ததாகச் சொல்கிறார்கள். கண்ணன் முகத்திலுள்ள குழந்தைத்தனம் எப்படி வந்தது? குழந்தையின் புஷ்டியான உருண்டு திரண்ட உடலை சிற்பியால் எப்படிச் செய்ய முடிந்தது?

**சி**ன்னஞ்சிறு கோவில்தான். ஆனால்

---



"அப்பவே சொன்னேன், ஜோக் எழுதினா புனை பெயரில் எழுதச் சொல்லி. இப்பப் பார்த்தீங்களா?"

"ஏன்? என்னாச்சு?"

"வீட்டுக் கதவுக்குப் பக்கத்தில் உங்க பெயர் பலகைக்குக் கீழே யாரோ, 'கடி ஜோக் ஜாக்கிரதை'ன்னு போர்டு வைச்சிருக்காங்க!"

– சீர்காழி கே.ஆர்.வி.

அழகாக இருக்கிறது. கோபுரம் ஆதிசேஷனுடன் தொடர்புடையதாகச் சொல்கிறார்கள்.

நளாந்தக சோழன் என்னும் அரசர் கோவிலுக்குத் திருப்பணி செய்து மதில் எழுப்பியிருக்கிறார். அழகாத்திரி நாயக்கர் என்பவர் திருப்பணிகள் செய்ததாக வரலாறு.

மூலவர் வேத நாராயணப் பெருமாள் ஸ்ரீதேவி பூதேவியுடன் காட்சி தருகிறார். தனிச்சந்நிதியில் மகாலக்ஷ்மி தாயார் வீற்றிருக்கிறார். கோபுர வாசலில் நடனம் செய்யும் விநாயகப் பெருமான் குதூஹலமாகக் குதித்தாடுகிறார். விநாயகருக்கு மவுசு அதிகம்தான். இவர் கோவில் சுத்தமாகப் புதுப்பொலிவுடன் காணப்படுகிறது.

மண்டபத்தின் பக்கத்தில் உள்ள சிறிய பிராகாரத்தில் பஞ்சமுக ஹனுமானைத் தரிசிக்கிறோம்.

நடனமாடும் கண்ணன் மார்பில் லக்ஷ்மி பதக்கம் அணிந்து கொண்டு, தலையில் முத்துக் கிரீடமும், சாமந்திப் பூ மாலையும் அணிந்து நமக்குக் காட்சி தருகிறார். கோவிலில் யாரும் இல்லை. ஜெயராம பட்டர் மட்டும் இருந்தார். மிகவும் சிரத்தையாகக் கண்ணனுக்கு அலங்காரம் செய்து ரோஜாப் பூக்களால் அர்ச்சனை செய்தார். மூன்று கோவில்களில் பூஜை செய்கிறாராம்! ஊத்துக்காடு வருவதற்கே ஒன்பதரை மணி ஆகி விடுகிறதாம். கண்ணனின் திருவுருவச் சிறப்புக்களையும், கண்ணன் பாதங்களில் மடுவின் சேறு கூட ஒட்டிக் கொண்டிருப்பதையும், தலபுராணக் கதைகளையும் எடுத்துச் சொன்னார். முக்கியமாக வேங்கட சுப்பய்யர் அவர்களின் பாடல்களைப் பற்றிச் சொன்னார். அந்தப் பாடல்களை தற்காலத்தில் பிரபலப்படுத்தியவர்கள் மகாராஜபுரம் ஸந்தானமும் பித்துக்குளி முருகதாஸும் என்று சொன்னார். தற்சமயம் ஸேவார்த்திகள் நிறையப் பேர் வருவதாகவும் ரோகிணி நக்ஷத்திரத்தில் விசேஷ பூஜைகள் நடப்பதாகவும் கூறினார்.

பக்தர்கள் ரோஹிணி நக்ஷத்ரதோஷம், விவாகத்தடை, நாக ஸர்ப்ப தோஷங்கள்,



• தேவியருடன்...

இவையெல்லாம் இந்தக் கண்ணபிரானைத் தொழுது நீங்கப் பெறுகிறார்கள். காளிங்க மடுவில் நீராடி காளிங்கநர்த்தனனுக்குத் திருமஞ்சனம் செய்து வைத்தால் ஸகல ரோகங்களும் நீங்கும் என்பது நம்பிக்கை. புத்ர பாக்கியம் வேண்டி தயிர் திருமஞ்சனம் செய்து வைக்கிறார்கள்.

முப்பது நாற்பது வருடங்களுக்கு முன்பு கூட வஸந்தோத்ஸவம் விசேஷமாக நடந்து வந்ததாம். ஊத்துக்காடு இசைச் சிறப்புக்குப் பெயர் போன ஊர். சாலியமங்கலம் முகாரிக்கும், மெலட்டூர் மோஹனத்துக்கும், சூலமங்கலம் அடாணாவுக்கும், ஊத்துக்காடு ஆஹிரிக்கும் புகழ்பெற்ற நாட்டிய நாடக கிராமங்கள். இந்த ஊர்களில் பாகவதர்கள் கூடி நாட்டிய - நாடக வடிவில் பகவானை ஆராதனை செய்து வந்தார்கள். ஸ்ரீகிருஷ்ணனை எழுந்தருளப் பண்ணி அவர் எதிரில் நாடகங்கள் விடிய விடிய நடத்துவார்களாம்.

இன்னொரு முக்கியமான உற்சவமும் முன்காலத்தில் நடந்து வந்ததாம். கிருஷ்ண ஜயந்தியின் போது உரியடி நடத்துவதோடு தெப்போத்ஸவமும் நடக்குமாம். காளிங்க மடு என்ற தடாகத்தின் மத்தியில் இருந்த மண்டபத்துக்குக் கிருஷ்ணன் செல்வாராம். பொம்மலாட்ட வித்தகர்கள் குளத்தில் இறங்கிக் கழுத்தளவு தண்ணீரில் நின்று கொண்டு தலைகளில் பாம்பின் படம் போன்ற முகமூடியணிந்து கொண்டு அதன் தலை மீது கண்ணன் நடனமாடுவது போல பொம்மலாட்டம் ஆட்டிக் காட்டுவார்களாம். இதைக் காண அக்கம்பக்கத்து ஊர்களிலிருந்தெல்லாம் ஜனங்கள் வந்து கூடுவார்களாம்.

இந்த உற்சவங்கள் எல்லாம் நின்று போய் விட்டதே என்று வருந்துகிறோம். மக்களுக்கு இப்போது டி.வி.யும் சினிமாவும்தான் எண்டர்டெய்ன்மெண்ட் ஆகிவிட்டது. குற்ற மற்ற பக்தியே பொழுதுபோக்காக இருந்த காலம் ஒன்று இருந்ததே!

பட்டர் சொன்ன கதை ரொம்ப சுவாரஸ்யமாக இருந்தது. வேங்கட சுப்பையர் கண்களை மூடிக் கொண்டு பாடுவாராம். குழந்தை ஒன்று புழுதி அளைந்த மேனியுடன் மடியில் வந்து உட்கார்ந்ததாம். தன்னுடைய கவனமெல்லாம் இசையில் லயித்திருக்க இரண்டு தடவை குழந்தையைத் தள்ளி விட்டாராம் வேங்கடகவி. மூன்றாவது தடவையும் குழந்தை மடியில் வந்து உட்காரவே சற்று வேகமாகவே தள்ளி விட்டார் போலிருக்கிறது! சதங்கை தண்டை ஒலி கேட்டுக் கண்களைத் திறந்தார் வெங்கடசுப்பையர். ஒருகணம் தன்னுடைய சுந்தரமுகாரவிந்த தரிசனம் தந்து விட்டு மறைந்து விட்டது குழந்தை. எப்படி இருந்திருக்கும் அவருக்கு! "யாரைக் காண வேண்டும் காண வேண்டும்" என்று அல்லும் பகலும் அனவரதமும் தவம் செய்து வந்தாரோ அந்தப் பெருமான் மடியில் வந்து உட்கார்ந்தபோது தள்ளி விட்டாரே! கவியின் வாக்கில் பாடல்கள் ஊற்றாகப் பெருகின.

"இது ஒரு திறமாமோ" "காயாம்பூ வண்ணனே நில்லும்" என்ற பாடல்களும் அப்போது அவர் வாக்கில் பிறந்தனவாம்.

தஞ்சை மன்னர் சாம்பாஜிக்குத் தீராத வயிற்று வலி இருந்ததாகவும் வெங்கட சுப்பய்யர் கண்ணன் பாட்டுக்கள் பாடி வயிற்று வலியை குணப்படுத்தியதாகவும் கூறுகிறார்கள்.

இப்படி ஒரு அழகான இன்பமளிக்கக் கூடிய இசையே மருந்தாக இருக்கும் போது நமக்கு என்ன குறை?

மரகதமணிமயசேலா, கோபாலா... என்ற ஆரபி ராகப் பாடல் கண்ணன் நடனமாடுவதைக் கண்முன் நிறுத்துகிறது.

கும்பகோணத்திலிருந்து தாராசுரம், பட்டீச்வரம், கோவிந்தகுடி, ஆவூர் வழியாக ஊத்துக்காடு சென்றடையலாம். வன்முறை என்ற விஷத்தை அடியோடு போக்கி அவன் படைத்த உலகத்தில் அவனே அமைதியையும் அன்பையும் நிலைநாட்டி நம்மை உயர்த்தும்படி பிரார்த்தனை செய்யலாம்.

கண்ணன் அருள்புரிவான். ஆனால் அந்தக் கண்ணனின் அருள்பெற நாமும் கொஞ்சம் முயற்சி செய்ய வேண்டும்.

இவ்வளவு அழகான கண்ணன் கோயிலை ஊரில் உள்ள மக்கள் கொஞ்சம் சுத்தமாக வைத்துக் கொள்ளக் கூடாதா? துவாரபாலகர்கள் மீது ஒட்டடை தொங்குகிறது. முன் மண்டபத்தில் எல்லா இடங்களிலும் சிலந்தி வலை பின்னியிருக்கிறது. இத்தனை மகிமை வாய்ந்த கோவிலில் மகாலக்ஷ்மித் தாயார் அருள்புரியும் கோவிலில் பட்டருக்கு மாதம் முப்பத்தி ஏழு ரூபாய் சம்பளமாம். அது என்ன படியளப்போ தெரியவில்லை!

படங்கள் : ஸ்ரீஹரி

# இந்த வீட்டு மனையை வாங்கச் சரியான நேரம்

## (கீழே கொடுத்துள்ள 5 காரணங்களுக்காகவே)

# சிந்து நகர், சென்னை–600 056

பூந்தமல்லி பை-பாஸ் அருகே – CMDA அப்ரூவ்டு மனைகள். (நெ. 65/99.)

அமைந்துள்ள இடம் 

மாநகருக்கு மிக அருகில் 

பாதுகாப்பு 

முதலீடு செய்யும் பணத்துக்கு தகுந்த மதிப்பு 

வேகமாக உயரும் நில மதிப்பு 



## சிறப்பு அம்சங்கள்

● உடனே வீடு கட்டலாம் / அருகில் வீடுகள். ● கோயம்பேட்டிலிருந்து 10 நிமிட பயணம். ● அண்ணா நகரிலிருந்து 15 நிமிட பயணம். ● சுலபமான மூன்று வழிப் பாதைகள். கிண்டி, செயிண்ட்தாமஸ் மவுண்ட் போரூர் 100 அடி சாலை, அரும்பாக்கம், கோயம்பேடு, மதுரவாயில் 100 அடி சாலை / அம்பத்தூர், ஆவடி 60 அடி சாலை. ● சென்னை-பெங்களூர் (NH4) தேசிய நெடுஞ்சாலை. ● கோயம்பேட்டில் அமைந்துவரும் பிரம்மாண்ட பஸ் நிலையம். ● தாம்பரம்-வானகரம் புறவழிச் சாலை. ● மாநகரின் அனைத்து பகுதிகளுக்கும் தாராளமான பஸ் வசதி. ● மெடிக்கல், டெண்டல், இஞ்சினியரிங், கேட்டரிங்-ஆர்ட்ஸ் கல்லூரிகள் மிக அருகில். ● சுவையான / மிகுதியான நிலத்தடிநீர். ● சுத்தமான பத்திரம் / நம்பகமான நிறுவனம். ● உடனடி பத்திரப் பதிவு.

## BLBயின் உறுதி செய்யப்பட்ட சேவை (விற்பனைக்கு பின்)

● 5 வருடங்களுக்கு மனை பாதுகாப்பு சேவை. ● பத்திரப் பதிவுக்கு பின் தனிப் பட்டா ஏற்பாடு (பட்டா செலவு தனி) ● வீடு கட்டும் பட்சத்தில் தரமான எஞ்சினியர்களை கொண்டு BLB மூலமாக கட்டுமானப் பணி ஏற்பு. ● வீடு கட்ட கடன் வசதி ஏற்பாடு.

மனையை பார்வையிட இலவச வாகன வசதி தினமும்
காலை 7.00 மணி, 11.00 மணி மற்றும் மாலை 3.00 மணி

**PH : 4357721 / 4357731 / 4353183 ● CELL : 98400-44018**




# BLB Estates (P) Ltd.

S-3, "Ramana Flats", Rathna Nagar, Off : Anna Salai,
Teynampet, Chennai - 18. (Behind Apollo Cancer Hospital)
**R. BHASKAR** - Managing Director

## வர்த்தகத்தில் நேர்மை; பணியில் பொறுப்பு

## நீங்கள் கேட்டவை – தராசு

● ஆர். சாலமன், ஆலங்குளம்.

? ஜெயலலிதா ஆட்சியிழந்து ஐந்து வருடங்கள் ஆகப் போகிறது. தொடர்ச்சியாகப் பத்திரிகைச் செய்திகளில் அடிபட்டுக் கொண்டே இருக்கிறார். இவர் போன்ற பாக்கியம் வேறு எவருக்கேனும் கிடைக்குமா?

! உண்மைதான்; அடிபட்டுக் கொண்டு தானிருக்கிறார், வாங்கிக் கொண்டிருக்கிறார். இந்த பாக்கியம் வேறு எவருக்கும் கிடைக்கவே வேண்டாம்.

● ஜெயா ஜான்பால், சென்னை – 21.

? கலைஞரை வள்ளுவரின் மறுபதிப்பு என்கிறாரே அன்பழகன் – இது குறித்து...?

! திருக்குறள் – கலைஞர் உரை புத்தகத்தின் மறுபதிப்பைக் குறிப்பிட வந்தவர் தவறுதலாக... போகட்டும் விடுங்கள், அணிந்துரையை ஒழுங்காகத்தான் எழுதியிருக்கிறார்.

● புளியரை கணேசன், சென்னை – 30.

? இரயில்வே பட்ஜெட்டில் பயணிகள் கட்டணம் உயர்த்தப்படாதது பாராட்டுக்குரியதுதானே?

! சரக்குக் கட்டண உயர்வே கடைசியில் நுகர்வோர் தலையில்தானே விடியப் போகிறது. ஆனாலும் அடி மேல் அடி அடிக்காமல் ஒரு அடியோடு தப்பினோமே என்று மகிழலாம்தான்.

● கதி. அருணாசலம், ஈரோடு.

? 'என் நாவல்கள் டைம் பாஸுக்காக' என்று சொல்லும் ராஜேஷ் குமார், 'என் எழுத்துக்கள் பொழுதுபோக்குக்கு அல்ல...' என்று சொல்லும் பாலகுமாரன் – இருவரும் வெற்றி பெற்றவர்கள் என்பது ஆச்சர்யமாக இல்லையா?

! ஆச்சர்யமே இல்லை. இசை, சினிமா, இலக்கியம் என்று எல்லா கலைகளிலும் இந்த வேறுபட்ட கலைகளுக்கு இடமிருக்கிறது. இது உலகம் முழுமைக்கும் பொருந்தும்.

● டி. ராமகிருஷ்ணன், குளித்தலை.

? தனியார்வசம் ஒப்படைத்தல் என்றாலே ஏன் சார் போராட்டம் நடத்துகிறார்கள்? அதனால் என்ன கெடுதல்?

! அரசுத் துறையில் வேலை செய்தாலும் செய்யாவிட்டாலும் சம்பளம், ஊதிய உயர்வு, பதவி உயர்வு, தட்டிக் கேட்டால் யூனியன் தலைவலி. தனியார் துறையில் அப்படியில்லை. கெடுபிடி அதிகம். உழைத்தே ஆக வேண்டும்!

● அஜார், சென்னை – 18.

? திடீரென்று தமிழ்வழிக் கல்வியால் இந்தி திணிக்கப்படும் என்று பாய்கிறாரே ஜெ?

! கொள்கையளவில் அ.தி.மு.க. ஏற்றுக் கொள்ளக்கூடிய விஷயங்களைக் கூட தி.மு.க. அரசு அறிவித்தால் எதிர்ப்பது என்று முடிவு செய்துவிட்ட பிறகு, எதிர்ப்புக்கு இப்படிப்பட்ட கற்பனைக் காரணங்கள் தேடுவது தவிர வேறு வழி..?

● டி. சந்திரன், ஈரோடு.

? 'வாட்டர்' படப்பிடிப்பைத் தமிழ்நாட்டில் நடத்தலாம் என்கிறாரே மூப்பனார். சமீப காலமாக இவர் ஏன் இப்படிப் பேசுகிறார்..?

! அது மட்டுமா? 'வாட்டர்' திரைக்கதை கருத்து 'தியாகபூமி'யில் சொல்லப்பட்டதுதான் என்கிறார்! கஷ்டம்! கஷ்டம்!

# கலைஞர் வள்ளுவரின் மறுபதிப்பாமே...?


• ஆச்சர்யம்


• ...இல்லை!

● தி. ராமதாஸ், சென்னை – 23.

? வக்கீல்கள் நடத்திய நீதிமன்றப் புறக்கணிப்பு பற்றி...?

! படித்தவர்கள் – அதிலும் மெத்தப் படித்தவர்கள் எப்படி நடந்து கொள்ளக் கூடாது என்பதற்கு உதாரணமாக விளங்கியது அந்தப் புறக்கணிப்பும் போராட்டமும். நீதிமன்றம் இருக்க இவர்களுக்கு வேலை நிறுத்தம் எதற்கு...? அதிலும் முரட்டுத்தனமான போராட்ட நடவடிக்கைகளில் ஈடுபடுவதும் தடைகளை மீறுவதும் மோசமான முன்னுதாரணங்கள்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

? சின்ன எம்.ஜி.ஆர். என்று சொல்லுமளவுக்கு சுதாகரனிடம் அப்படி என்ன



• ஐந்தாண்டு சாதனை!

• விபரீத ஒப்பீடு!

எம்.ஜி.ஆரின் நற்பண்புகள் இருக்கின்றன?

! சின்ன எம்.ஜி.ஆர். என்று மக்களா சொல்கிறார்கள்? அவரேதானே சொல்லிக் கொள்கிறார்? இதற்கு நற்பண்பும் இன்னொன்றும் எதற்கு? பெரிய சைஸ் போஸ்டர்கள் போதும்!

● எம். பிச்சைக்கனி, திருமால்பூர்.

? சென்னையில் குடிநீர்ப் பற்றாக்குறை ஏற்பட்டுள்ளதற்குத் தார்மீகப் பொறுப்பேற்று முதல்வர் கருணாநிதியும் மேயர் மு.க. ஸ்டாலினும் பதவியை ராஜினாமா செய்ய வேண்டும் என்று முன்னாள் முதல்வர் ஜெயலலிதா கூறியுள்ளது பற்றி...?

! வழக்குகளில் தீர்ப்பு அவருக்கு எதிராக அமைந்து தண்டனை கூட வழங்கப்பட்டிருக்கிறதே. இதற்கு தார்மிகப் பொறுப்பேற்று அவர் அ.தி.மு.க. தலைமைப் பதவியை ராஜினாமா செய்து விட்டு மற்றவர்களுக்கு உபதேசிக்கட்டும்!

● டி.எஸ். சேகர், தென்கடப்பந்தாங்கல்.

? யாப்பிலக்கணம் படிக்காத புதுக் கவிதைவாசிகள் பற்றி...?

! யாப்பிலக்கணம் படித்தவர்களெல்லாம் மரபுக் கவிஞர்களாகி விடவும் முடியாது; அதைப் படிக்காதோர் கருத்துச் செறிவுடனும் ஓசைநயத்துடனும் புதுக்கவிதை எழுத முடியாதென்பதும் கிடையாது.

● கே. முருகப்பா, மன்னார்குடி.

? கலைஞர், பி.ஜே.பி. கூட்டணியில் இல்லாதபட்சத்தில், அரசு ஊழியர்கள் 'ஆர்.எஸ்.எஸ்.ஸில் சேரக் கூடாது' என்பதற்கான அவர் விளக்கம் எப்படி இருந்திருக்கும்?

! பி.ஜே.பி. கூட்டணியில் இல்லாதபோதும் இருக்கும்போதும் அவர் சேரக்கூடாது என்றுதானே சொல்லி வருகிறார். பிரதமருக்கு இக்கருத்தைத் தெரிவித்து ஒரு கடிதம் கூட எழுதினாரே. தமிழ்நாட்டில் அதை அனுமதிக்க மாட்டோம் என்றும் தெளிவுபடுத்தியுள்ளாரே.



• தவறுதலாக...

● என். உஷாதேவி, மதுரை - 9.

? அரசியல் தலைவர்களிடம் தொண்டர்கள் வைத்துள்ள பக்தி எப்போது வெறியாக மாறுகிறது?

! தலைவர்கள் தொண்டர்களிடம் மதிப்பு வைத்து, உண்மை பேசி, அவர்களை அறிவுபூர்வமாகச் சிந்திக்கச் செய்வதற்குப் பதில் மூளைச் சலவை செய்து உணர்ச்சிப் பிழம்பாக்கும்போது!



• ஒரே ஒரு அடி...



• போஸ்டரே போதுமே!

☐ ரூ. 50 முதல் பரிசு பெறுபவர் :
ஆர். சாலமன், 2 A/2, அண்ணா நகர், ஆலங்குளம் - 627 851.

• ரூ. 25 இரண்டாம் பரிசு பெறுபவர் :
கதி. அருணாசலம், 520, வளையக்கார வீதி, சண்முகம் காம்ப்ளக்ஸ், ஈரோடு - 638 001.

# முதல் மழைக்

வைதேகியைத் தேடி அவன் சினேகி தன் ரூமி அன்று காலை வந்தான். குழந்தைகள் பள்ளிக்கூடம் புறப்படும் நேரம். வீடுகளில் அவர்களின் பலகாரம் தயாராகும் வாசனைகள் நிறைந்திருந்தன.

"வாசனைகள்தான் மனிதர்களின் வாழ்க்கைத் துடிப்பை வெளிப்படுத்துகின்றன" என்றான் ரூமி. அவளைச் சந்தித்த அந்த முதல் நிமிஷத்தில்.

"விஞ்ஞானிகள் மூளையால் ஆராய்கிறார்கள். நீ மூக்கால் ஆராய்ச்சி செய்கிறாயாக்கும்."

"மூளை என்கிற சமாசாரம், ஐம்புலன்கள் தருகிற 'சிப்ஸ்'களைக் கொண்டு இயங்கும் கருவி. மூக்கு இல்லாவிடில், உலகத்தின் கால் பகுதி இல்லாமல் போகும்."

அவனுக்குக் காப்பி கொடுத்து உபசரித்தாள் வைதேகி. அக்காவிடம் அறிமுகம் செய்து வைத்தாள்.

"இவன் ரூமி. என் சினேகிதன். பெரிய ஆராய்ச்சியாளன் என்று, தொல்பொருள் துறையினர் சொல்கிறார்கள். இவனது ஆராய்ச்சி, ஏற்கெனவே நிலவுகிற நம்பிக்கைகளுக்கு ஆதரவாக இல்லாதபடியால், இவனை யாரும் பொருட்படுத்துவது இல்லை."

அவள் நிறுத்தியதும், ரூமி சொன்னான்.

"அக்கா... ஆனால் நான் தொடர்ந்து வேலை செய்து கொண்டு இருக்கேன். இது வரையில் படி எடுத்து இருக்கிற கல்வெட்டுகள், சாசனங்கள் அச்சுக்கு வரணும். அப்புறம்தான் தமிழ்நாடு வரலாறு சாத்தியமாகும். பல நூறு கல்வெட்டுக்கள் படியே எடுக்காத நிலையில், அச்சுக்கு வராத நிலையில், வரலாறு என்பது, கற்பனையாக இருக்கும். சொந்தப் பிள்ளைகளைப் பாராட்டுவது போல, நம் இனத்தைப் பாராட்டிக் கொண்டிருக்க முடியாது."

பாரதி அமைதியாகக் கேட்டுக் கொண்டு இருந்துவிட்டுச் சொன்னாள்.

"ஏதோ பெரிய காரியம் செய்கிறாய் போலத் தெரிகிறது. தொடர்ந்து செய். மற்றவர்கள் கருத்துக்கு மதிப்பளி. ஆனால் ஏற்றுக் கொள்ளத் தயங்கு."

"சபாஷ், அக்கா" என்றான் ரூமி. "இதைத்தான் அகந்தை என்கிறாள் வைதேகி. நான் என்ன செய்ய?"

"ஒன்றும் செய்யாதே. எப்படியிருக்கிறாயோ, அப்படியே இரு. தனிச்சே இரு. ஆனா, மத்தவங்களை விடவும் தான் பெரியவன்னு நினைக்காதே. எதை நம்பறாயோ, அதைச் செய். போதும்."

இந்தக் குழந்தைகளுடைய உள் உலகம், மிகவும் ஆச்சர்யமாக இருந்தது. என்ன தன்னம்பிக்கை? உலகம் தனக்கானது என்பதில் என்ன தெளிவு? தன் பங்கு என்ன என்பதில் என்ன தேர்வு?

"எங்கே தங்கப் போறே?" என்றாள் வைதேகி.

"இங்கேயே நம் வீட்டில் தங்கிக் கொள்ளட்டுமே" என்றாள் பாரதி.

"வேணாம்கா. அது அவனுக்கும் கஷ்டம். நமக்கும் கஷ்டம்."

அவன், ஏதாவது லாட்ஜில் தங்கிக் கொள்வது என்று முடிவாயிற்று.

"எத்தனை நாள் தங்கப் போறே?"

"இரண்டு நாள். அதுக்கு மேலே நீ போரடிப்பே."

அவள் அவனை அடிக்க வந்தாள்.

வைதேகி அவனை அழைத்துச் சென்று லாட்ஜில் தங்க வைத்து விட்டுத் திரும்பினாள். வந்து பாரதியிடம் சொன்னாள்.

"பெரிய ஆள்க்கா. பார்த்தா பைத்தியம் மாதிரியிருப்பான். ஆனா, ரொம்ப விஷயமான ஆள்."

"பார்த்தால் தெரிகிறது. எப்பவுமே, தனியான ருசியும் போக்கும் கொண்டவர்கள், இப்படித்தான் இருக்காங்க."

19

காலை பலகாரமாக, அன்று இடியாப்பமும் தேங்காய்ப் பாலும் செய்திருந்தாள், பாரதி.

சாப்பிட்டுக் கொண்டே சொன்னாள், வைதேகி.

"ஏழோ, எட்டோ வகுப்பில் ஒண்ணாப் படிச்சோம்க்கா. அப்புறம், ஒண்ணாத்தான் எஸ்.எஸ்.எல்.சி. எழுதினோம். அப்புறம், டிகிரி, அப்புறம் எம்.ஏ. இப்போ ஆராய்ச்சின்னு வளர்ந்திருக்கோம். இன்னும், எப்படியோ, இவன் சினேகம் மாத்திரம்

துணை

தொடர்ந்து வந்துகிட்டே யிருக்கு. ரெண்டு நாள் என்னைப் பார்க்கலைன்னா, என்னைத் தேடி வந்துடறான். அப்படி ஒரு அன்பு, என் மேல அவனுக்கு..."

பாரதிக்கு, மகிழ்ச்சியாக இருந்தது.

ஆண் பெண் ஆனாலும் சிநேகத்தை உடம்புக்குள் அடக்கிக் கொள்ளாமல், மனுஷ உறவாகவே வளர்த்தெடுத்துக் கொண்டு போகும், இந்தக் குழந்தைகளைப் பார்க்கப் பரவசமாக இருந்தது அவளுக்கு.

பாரதிக்குச் சின்ன வயசில் நேர்ந்த அந்த அனுபவத்தை நினைத்துக் கொண்டாள் அவள்.

அப்போது பாரதிக்கு வயது பத்தோ பன்னிரண்டோ இருக்கும். வெங்கிட்டு, அவளுடன் படித்துக் கொண்டிருந்தான். சாயங்காலங்களில் வந்து, அவளுக்குக் கணக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான். இவள் அவன் வீட்டுக்குப் போவதும், அவன் இங்கு வருவதுமாக இருந்தார்கள். அம்மா அப்போது இருந்தால், வெங்கிட்டுக்குச் சாயங்காலம் டிபன் காப்பி கொடுப்பாள். அவன் வீட்டிலும், அவளுக்கு நல்ல வரவேற்பே இருந்தது.

பாரதிக்கு வெங்கட்டைப் பிடித்தது. நல்ல பையன் என்பது அவள் எண்ணம். அவளது நோட் புத்தகங்களுக்கு உறை போட்டுக் கொடுத்தான் அவன். பெரிய பெரிய கணக்குகளுக்கு ரொம்பச் சுலபமாக விடை போடக் கற்றுக் கொடுத்தான். வெள்ள வாரி ஓடைக்கு அழைத்துச் சென்று, அங்கு யோசித்தபடி நிற்கும் கொக்குகளையும், நாரைகளையும் காட்டிக் கொடுத்தான். கொடுக்காப்புளிக் களை பறித்துக் கொடுத்தான். தித்திப்புப் புளி

பிரபஞ்சன்



யம்பழம் என்ன சுவை என்பதை அவன் மூலம் அவள் அறிந்தாள்.

மாமா, ஒருநாள் வந்திருந்தார். இங்கேதான் சில நாட்கள் அவர் தங்குவதாக இருந்தது. மாமா, மிகவும் கடுமையான கட்டுத் திட்டங்கள் கொண்டவர்.

"மணி என்ன ஆச்சு? பொம்புளப் புள்ளை இருட்டறதுக்கு முன்னால வீடு வர்றதுக்கு என்ன கேடு?"

"வயசு என்ன ஆறது? டவல் எடுத்துக் காமே பாத்ரூம் போலாமா?" என்றார்.

"காலையிலே எழுந்து, வாசல் பெருக்கிக் கோலம் போட என்ன?" என்றார்.

அம்மா ரகசியமாக, "பெரியவர், கொஞ்ச நாள் தங்க வந்திருக்கார். மனசுக்குள்ள நினைச்சதைப் பேசிடுவார். வருத்தப்படாதே" என்றாள்.

"சரிம்மா" என்று வருத்தம் இருந்தாலும் சம்மதித்தாள்.



"பால்காரர் குடியிருக்கிற ஏரியாவுக்கே குடி போயிட்டேன்."

"ஏன் அப்படி?"

"24 மணி நேரமும் குழாய்ல தண்ணீர் வருதாமே!"

– சீர்காழி வி. ரேவதி

சாயங்காலம், வானம் இருட்டிக் கொண்டு, வெட்டி முழக்கியது. மின்னல், மண்ணைக் கிழித்தது. மழை, வெறிகொண்டாற்போலப் பெய்து கொண்டேயிருந்தது. கணக்குப் பாடம் எழுதிக் கொண்டு போக வந்த பாரதியிடம் வெங்கிட்டின் அம்மா சொன்னாள்.

"மழை பெரிசா பெய்யறது. இருந்து, சாப்பிட்டுடு. மழை விட்டதும் போகலாம்" என்றாள்.

பாரதி, அங்கேயே சாப்பிட்டாள். உறக்கம் கண்ணைக் கிறங்கடித்தது. அங்கேயே படுத்து உறங்கியும் விட்டாள்.

அவளை எவரோ எழுப்பினார்கள். எழுந்து பார்த்தாள். அப்பாவும் மாமாவும்.

மாமா முகத்தில் கோபம்.

"மணி என்ன ஆறது?" என்றார் ரௌத்ரத்துடன்.

உறக்கம் கண்களை மயக்க, மணி பார்க்கும் நிலையில் இல்லை, அவள்.

"குழந்தை சாப்பிட்டதும், தூக்கம் வந்து அங்கேயே சுருண்டு படுத்துடுச்சு. பாவம்" என்றாள் வெங்கட்டின் அம்மா.

அவளைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு வெளியே வந்தார் மாமா. எரிச்சல், கோபம், அவமானம் ஆகியவற்றால் பாதிக்கப்பட்ட பாரதி, மாமாவிடம் இருந்து கையை இழுத்தாள்.

"என்னடி, மணி என்ன ஆறது? வயசுப் பொண்ணு, இப்படித்தான் அன்னியர் வீட்டுக்கு வந்து படுப்பாளாம். வெட்கமாக இல்லை உனக்கு?"

பாரதி, உரத்த குரலில் முழங்கினாள்.

"இதுல என்ன வெட்கம். தூக்கம் வந்துச்சு. தூங்கிட்டேன்."

"எதிர்த்தா பேசறே?" பல்லைக் கடித்தார் மாமா.

"இதுல என்ன எதிர்க்கிறது? இப்ப என்ன ஆச்சு? என்னத்துக்காக இப்படி என்னைப் பிடுங்கி எடுக்கணும்? நான் தப்பு செஞ்சா, என்னை என் அப்பா கேட்பாங்க. அம்மா கண்டிப்பாங்க. நீங்க யார் என்னைச் சித்ரவதைப்படுத்த?"

மாமா திடுக்கிட்டு நின்றார்.

அப்பா இப்போது சமாதானத்துக்கு வந்தார்.

"குழந்தை என்ன தப்பு பண்ணிட்டான்னு, இப்படி உணர்ச்சிவசப்படறீங்க?"

மாமா, அப்பாவைப் பரிதாபமாகப் பார்த்தபடி சொன்னார்.

"இது தப்பு இல்லையோ, வைத்தி?"

"இல்லை. நிச்சயமா இல்லை. அவ குழந்தை."

"குழந்தையா?"

"ஆமா, குழந்தைதான். அவ குழந்தையா இருக்கிறதுக்காக நாம் சந்தோஷப்படணும். அவ குழந்தை இல்லைன்னு நாம கற்றுக் கொடுத்துடக் கூடாது. அதுதான் அபாயம்."

"இந்தக் காலத்துல, நாம் கடுமையா இருக்கணும், வைத்தி."

"அது என்ன மாமா, இந்தக் காலம். எந்தக் காலத்துல தப்பு நடக்கலை? இராவணன் பண்ணாத தப்பா? துரியோதனன், பண்ணாத தப்பா? எல்லாக் காலத்திலயும் தப்பு நடந்து கொண்டுதான் இருக்கு."

அப்பா, குழந்தையை அழைத்துக் கொண்டு, முன்னே நடந்தார். மாமா பின் தங்கி நின்றார். மறுநாளே, மாமா புறப்பட்டு ஊர்ப் போய்ச் சேர்ந்தார்.

**பா**ரதி சொன்னதைக் கேட்டு, வைதேகி சிரித்தாள்.

"என்னத்துக்கு அக்கா பெரியவங்க நம்மைப் பத்தி இப்படிக் கவலைப்படறாங்க?"

"ஏன்னா, நாம் பெண்கள்னுதான்."

"பெண்ணுன்னா?"

"ஏதாவது ஆச்சுன்னா, பிரச்னை நமக்குத் தானே அதிகம்?"

"என்ன ஆகும்?"

பாரதி, தயங்கினாள்.

"சொல்லுக்கா. நமக்குள்ள என்ன தயக்கம்?"

"ஆண் பெண் உறவில, ஏதாச்சும் ஆச்சுன்னா, சுமை நமக்குத்தானே?"

"ஆனா, ஆகும்தான். உடம்பை பெரிசா நினைச்சுக்கிட்டு, வாழ்க்கையை அழிச்சுக்க முடியுமா, அக்கா. ஒரு காலத்துல பெண், வெளியே வரதே இல்லை. இப்போ, ராவும் பகலுமா வேலை பார்க்கிறோம். பலதரப்பு ஆண்களோடு பழகறோம். பல சூழ்நிலை கள்ளே, பெண் தன்னை இழக்க நேர்றது இயற்கைதான். இப்போதான் சுமையை சுமையாவே ஏற்காமே இருக்க முடியுமே. அதோடு, பெண் இப்போ அக்கினிப் பிரவேசம் செய்தே ஆகணுமா? தேவையில்லையே. இப்போ, ராமன் இருக்கானா என்ன? யாருக்கு நாம நிரூபிக்க வேணும்? யாருக்கும் நாம நிரூபிக்க வேண்டிய அவசியமில்லை. நமக்கு நாம் திருப்தியா, நிம்மதியா இருக்கோம்கிறதுதான் முக்கியம்னு எனக்குப் படுது."

"இதுதான் மனுஷ நியாயம், ஆனா..."

"என்ன ஆனா?"

"எல்லாரும் இன்னும் இதை ஒப்புக்கலை."

"ஒப்புக்காத பழம் பஞ்சாங்கத்தால, உலகத்துக்குப் பிரயோஜனம் இருக்கா, என்ன?"

பாரதி தனக்குள் மூழ்கிப் போனாள்.

"என்னக்கா பெரிய யோசனை?"

"ஒன்றும் இல்லை."

"மாமா என்னதான் சொல்றாங்க?"

திடுமென, வைதேகி தன் நினைவுக்குள் பிரவேசிப்பது கண்டு அதிர்ந்து போனாள் அவள்.

"கோபத்துல இருக்கார்."

"என்னத்துக்குக் கோபம்?"

"நான் பாடக் கூடாதுங்கறார்."

கையைக் கழுவிக் கொண்டு வந்து அமர்ந்தாள், வைதேகி.

"நீ என்ன சொன்னே?"

"நான் பாடுவேன்னு சொல்றேன்."

"சபாஷ். பாட்டுதான் நீ. பாட்டை உன்கிட்டே இருந்து அழிச்சுட்டா, நீ யாரும் இல்லை. வேஸ்ட்."

"புரியுது."

சற்று நேரம் கழித்து, "விவாகரத்து நோட்டீஸ் கொடுத்திருக்காரே, மாமா" என்றாள்.

"ஆமாம். எனக்கும் சம்மதம்னு சொல்லிடப் போறேன்."

"செய். புருஷனைக் காட்டிலும், உனக்கு நீ முக்கியம். உனக்குப் பிறகுதான் உலகம்."

எவ்வளவு தெளிவாகச் சொல்கிறது. இந்தச்



"உங்களைப் போய் ஏன் மாவாட்டச் சொல்றாங்க? பில் கொடுக்கலியா?"

"டிப்ஸ் தரல!"

— பர்வதவர்த்தினி

சிறு பெண்.

"குழந்தைதான் அடிக்கடி அப்பாவை நினைச்சுக்குறா."

"வயசு கூடியதும், தானாவே உண்மையைப் புரிஞ்சுக்குவா."

சற்று நேரம் ஆனதும், பாரதி கேட்டாள்.

"நீ என்ன, கல்யாணம் பற்றியே பேசலேன்னு உன் அப்பா வருத்தப்படறார்."

"என்ன, எப்போ பேசறதுன்னு எனக்குத் தெரியாதா அக்கா. முதல்லே, நான் என் சொந்த முயற்சியாலே, என் உணவை நான் தேடிக்கிடணும். அப்புறம்தானே அதைப் பற்றி நான் சிந்திக்க முடியும்? கல்யாணம் என்ன பெரிய சாதனையா? உடனே நான் கல்யாணம் பண்ணிட்டா, காவிரியில தண்ணி விடுவானா, மைசூர்க்காரன்? கிருஷ்ணா நதியில, குடி தண்ணி பாயுமா? உண்மையான சமத்துவபுரம் வந்துடுமா, நாட்டுல? அல்லது போலீஸ்காரன், ஜனங்களை மரியாதையா நடத்துவானா? அரசாங்க அதிகாரிங்க லஞ்சம் வாங்கறதை விட்டுடுவாங்களா? எது மாறப் போகுது?"

பாரதி சிரித்தாள்.

"கல்யாணம் உனக்காக. உன் மலர்ச்சிக்காக. உன் தேவைக்காக. வேற எதுக்காகவும் இல்லை."

"என் தேவைக்குத்தானே? பிறகு அப்பா ஏன் கிடந்து அல்லாடுறார்?"

"என்ன இருந்தாலும் கவலை இருக்கும் தானேடி."

"வேண்டாம். எனக்காகக் கவலை, யாருக்கும் வேணாம்."

"காதலிக்கிறியா, இன்னும் இல்லையா?"

"எவனும் மாட்டலை. நான் என்ன பண்ண?"

பாரதி சிரிப்பதைக் கேட்டு, அப்பா எட்டிப் பார்த்தார்.

(தொடரும்)

• 'ஸாரங்' - மயில்



ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது இங்கே பொருந்தாதுதான்! ஒரு சில படங்களைப் பார்த்துவிட்டு ஒட்டு மொத்தமாக 'ஓஹோ' என்றோ, 'உஹூம்' என்றோ சொல்லிவிட முடியாதுதான்.

இருந்தாலும், அண்மையில் மும்பையில் நடந்து முடிந்த 'MIFF 2000'- டாகுமெண்டரி, சிறுபடம், அனிமேஷன் படங்களுக்கான மும்பை இன்டர்நேஷனல் ஃபிலிம் ஃபெஸ்டிவலில் பெற்ற அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளாவிட்டால், 'MUFF 2000'- என்று பட்டம் கொடுத்துவிட மாட்டீர்களா என்ன?

அடூர் கோபாலகிருஷ்ணனின் 'கலா மண்டலம் கோபி'- பிரபல கதகளி ஆட்டக்காரரின் கதை. ஏழைமையான இளமையிலிருந்து படிப்படியாக அவரது வளர்ச்சியை விஸ்தாரமாகக் காட்டியுள்ளார்கள். மேக்-அப் போட்டுக்

# ஒண்ணுமே புரியலைப்பா!

கொள்வதைப் பற்றி தனிக் கதையே எழுத லாம்! க்ளோசப் ஷாட்டுகள் எதுவுமின்றி, ஒரு தூரத்திலிருந்து காட்டி, நாம் "லைவ்-ஷோ"வைப் பார்க்கும் பிரமையை ஏற் படுத்தியுள்ளனர். நீரோட்டம் போன்ற தெளிய உரை; இத்தனை வருட இடை வெளிக்குப் பின் அடூரார் இப்படமெடுக்கக் காரணம்–

"சின்ன வயசிலிருந்தே நான் கதகளி பார்த்து வளர்ந்தவன். கோபி அதி அற்புத மான கலைஞர். ஒரு கலைஞரின் மறை வுக்குப் பின் அவருக்குப் புகழாரம் சூட் டாமல், அவர் உச்சத்திலிருக்கும்போதே அதைச் செய்தால், அது அந்தக் கலையை யும் வளர்க்கும், கலைஞரையும் உயர்த்து மல்லவா?" என்றார் கோபாலகிருஷ்ணன்.

அடூர் பற்றி ராஜீவ் மெஹரோத்ரா எடுத்திருக்கும் படம் "Adoor- A journey in frames"!



• கலாமண்டலம் கோபி

படம் சர்வதேச நான்-ஃபிக்ஷன் பகுதியில் (50 நிமிடம்) 'வெள்ளி'யை வென்றது இது. வெள் ளித்திரையில் வெள்ளி விழா கொண்டாடிய அடூராரின் கலை உலக வாழ்க்கையை–சுயம்வரத்தில் ஆரம்பித்து கதாபுருஷன் வரையில்–ஆராய்ந்திருக்கிறார். சமூகம், அர சியல், கலை என்று வெவ்வேறு துறைகளில் அவரை ஆட்படுத்திய விஷயங்கள் நயமாகப் பிரதிபலிக்கப்பட்டிருக்கின்றன.

'கலா மண்டலம்' கோபி திரையிடப் பட்ட அதே விழாவில் அருணாஹர் பிர சாத்தின் "டான்ஸிங் வித் த குருஸ்" இடம் பெற்றதுதான் வேடிக்கை.

70 வருடங்களாகக் கதகளிக்குத் தன் வாழ்வை அர்ப்பணித்த ராமன் குட்டி நாயர் என்ற கலைஞரின் தினசரி வாழ்வின், ஒரு நாளைய நிகழ்ச்சிகளைப் படம் பிடிக்கிறது. தன்னை மாணாக்கராக ஏற்றுக் கொள்ள மாட் டாரா என்று அவர் வீட்டு வாயிலில் பலர் தவம் கிடக்க, இவர் 'கதகளி சோறு போடாது' என்று, தன் பிள்ளையைத் தன் அடிச்சுவட் டைப் பற்றாமல் இருக்கச் செய்யும் 'irony', கதையின் உயிரோட்டமான திருப்பம்.

'ஸாரங்'- மயிலைப் பற்றிய அழகான வீடியோ படம்.

"சிறு படங்களுக்கு, அதிலும் வீடியோ படங்களுக்கு, சர்வதேச அளவில் போட்டி யிடவும் திரையிடப்படவும் யார் சான்ஸ் தருகிறார்கள்? இந்த 'MIFF 2000' ஃபிலிம்ஸ் டிவிஷனின் மிகச் சிறந்த முயற்சி" என பலபடப் புகழ்ந்தார், இப்படத்தை இயக்கிய டாக்டர் சூசன் ஷர்மா.

"நேஷனல் ஜியாக்ரஃபிக், டிஸ்கவரி சானல் முதலியவற்றில் நிறைய பென் குவின்கள், டால்ஃபின்கள், போலார் கரடி களைக் காட்டுகிறார்கள். ஓரளவு சிங்கம், புலி, யானைகளும் மூக்கை நீட்டுகின்றன. ஆனால் 1963லேயே மயிலை நம் தேசியப் பறவையாக அறிவித்தும், அதைப் பற்றி அதிகம் காட்டியதேயில்லை. மயிலை முருகனின் வாகனமாகத்தான் தெரிந்து வைத்திருக்கிறோம். அதனால் அதைப் பற்றிய சுவையான தகவல்களைத் தெரிந்துகொண்டு வெளியிட நினைத் தேன்" என ஆரம்பிக்கிறார் சூசன்.

"டில்லியைச் சுற்றி நிறைய வனாந்தரப் பகுதிகள். அங்கேயே தவம் கிடப்பேன். தோட்டக்காரர்களை எல்லாம் ஃபிரண்ட் பிடித்துக் கொள்வேன்! மயில் முட்டை யிட்டுக் குஞ்சு பொறிப்பதைப் படம் எடுப் பதற்குள் போதும் போதுமென்றாகி விட் டது. அதற்கே ஒரு வருடம் தேவைப்பட்டது. முட்டைகள் திடீர் திடீரென்று காணாமல் போய்விடும்! அல்லது பாதியிலேயே உடைந்து விடும். அப்பப்பா.... இயற்கையின் போக்கைப் படமெடுக்க அசாத்திய பொறுமை தேவை"– என்றார்.

ஒரு வழியாக மான் பூங்காவிலும், துக்ள காபாத் கோட்டையிலுமாக இந்தப் படத்தை ஒன்றரை வருட காலத்தில் முடித்திருக்கிறார். 22 நிமிட நேரப் படத்திற்கு ஆகியிருக்கும் செலவு இரண்டரை லட்சங்களாம்.

'கூத்துமணிப்பூக்கள்' ஒரு அதிசயக்

குவியல். ஒரு குட்டிப் பையன், பத்து வயதிருக்கலாம். இங்குமங்குமாக ஓடிக் கொண்டிருந்தான். நம் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு பெரிய மனிதத் தோரணையில் படமெல்லாம் பார்த்தான். கடைசியில், 'அபிமன்யு' என்ற அந்த வாண்டுதான், குத்து மணிப்பூக்களில் காட்டப்பட்ட நான்கு கதைகளையும் எழுதிய கதாசிரியராம்! அப்பா வினய்குமார்தான் படம் எடுத்திருக்கிறார்.

முதல் கதையில், தோட்டத்தில் பூப் பறித்துக் கொண்டிருந்த சிறுமியை ஏதோ விஷ ஜந்து கடித்துவிட, அது தெரியாமல் சாதாரண க்ரீமைத் தடவி உறங்க வைக்கிறார் விதவையான தாய். மறுநாள் குழந்தை விழிப்பதில்லை.

அடுத்ததில், டான்ஸ் க்ளாஸ் முடிந்து அம்மா வந்து அழைத்துப் போகக் காத்திருக்கும் ஒரு சிறுவன் முன், ஒரு ஆம்புலன்ஸ் வந்து நிற்கிறது. உள்ளே இருப்பது அவன் அன்னையின் சடலம்!

மூன்றாவதில், 'வாய்'களெல்லாம் உடலிலிருந்து தனியாக வெளியேறி, ஒரு குழுவமைத்து, எல்லோரையும் கடித்துக் குதறுகின்றன!

நான்காவதில், கார்கில் போரில் வெற்றி பெற்று வீடு திரும்பிய ஒரு வீரன், தன் கிராமத்தில் நடந்த குண்டு வெடிப்பில் மாள்கிறான்.

அப்பப்பா! இத்தனூண்டு வயதில் இத்தனை அவலங்களைப் பற்றிய விழிப்புணர்ச்சியா என்று வியக்காமலிருக்க முடியவில்லை!

அபிமன்யு மலையாளத்தில் பரஞ்ஞானும், தந்தை வினய்குமார் ஆங்கிலத்தில் ஓரளவு விளக்கினார். இவன் 6 வயதில் எழுதிய 'ஒரு பூவு' முதலில் பிரசுரமான கதையாம். மலையாள மனோரமா நடத்திய கதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றானாம். இப்படம் ஏற்கெனவே கேரளா கிரிடிக்ஸ் அவார்டை வென்றிருக்கிறது; பல பள்ளிகளில் திரையிடப்பட்டிருக்கிறதாம்!

அனிமேஷன் படங்கள் கொஞ்சம் சுவாரஸ்யமாக இருக்கும் என நினைத்து சில ஜப்பானிய படங்கள் திரையிடப்பட்ட தியேட்டரில் அமர்ந்தோம். 'இன்விடேஷன் டு டெத்' என்ற படத்தில் ஒரே பேய் பிசாசு உருவங்களையும், வீர்ரிட்டுக் கொண்டிருக்கும் கார்களையும், உள்ளே அமர்ந்திருக்கும் ஜோடிகளையும் காட்டினார்கள். ஜப்பானிய மொழியிலேயே கமெண்ட்ரி! ஏதோ மர்மப் படமென்று நினைத்தால்...



**"அரசியல் தலைவரைப் பேட்டியெடுக்கப் போன நீ உடம்பெல்லாம் கட்டோடு வரியே! என்ன நடந்தது?"**

**"ஒண்ணுமில்லை; நான் கேட்ட பல கேள்விகளுக்கு அவர் 'அடிச்சு' பதில் சொன்னார்; அதான்!"**

**— யமுனா ரெங்கநாதன்**

---

கடைசியில் அது வாகன வேகத்தைக் குறைக்க போதிக்கப்பட்ட படமாம்!

அடுத்த படத்தில் 'பார்க்கும்படியாக' சில இளம் பெண்கள் வருகிறார்களே என்று நினைத்தால்... இரண்டே நிமிடத்தில் முடிந்து விட்டது! கமர்ஷியல் படம் என்றார்கள்! அதன் பிறகு பத்து நிமிடத்திற்கு குழந்தைகள், பெரியவர்கள் எல்லோரும் வந்து போன ஒரு படம் பற்றி எந்த அறிவிப்புமே இல்லை! பக்கத்தில் முணுமுணுத்துக் கொண்டே அமர்ந்திருந்த ஒரு பெண்மணி- எஜுகேஷன் டிபார்ட்மெண்ட்டிலிருந்து வருகிறாராம்- 'நீங்கள் ஃபிலிம் மேக்கரா?' என்றார்!

ஐயோ... நம் முகத்துக்கு இப்படி ஒரு ராசியா என்று வியக்கையில், கூடவே பயமும் எழுந்தது. இருக்கின்ற கோபத்தில் அவர் எதையாவது எடுத்து 'சதக்கி'விட்டால்...? 'ஊஹும்.... பத்திரிகையாளர்' என்றதும், பாய்ந்து விட்டார்.

"எழுதுங்கள்... ஒன்றுமே புரியாமல் இப்படி எதற்கு நம் நேரத்தை வீணடிக்கிறார்கள் என காரசாரமாக எழுதுங்கள்..." என்று ஒரு போடு போட்டுவிட்டு எழுந்தே போய் விட்டார்!

சர்வதேச அளவில், இந்திய டாகுமெண்டரிகள் மிகச் சிறப்பானவையாகவே இருக்கின்றன. இங்கே நிறைய திறமை இருக்கிறது. பிரைவேட் சானல்களும் இவற்றைக் காட்ட முன் வரவேண்டும் என்பதுதான் பொதுவான கமெண்ட்டாக இருந்தது!

**— ஜெ.ஆர்.**



ரணாகதிக்கு ஐந்து அங்கங்கள் இருப்பதைச் சொன்னேன் - பகவத் சிந்தனை, பகவத் சிந்தனை அல்லாதவற்றை நீக்குதல், மகா விச்வாசம் என்று மூன்றை விவரித்தேன். 'நீயே எனக்கு ரக்ஷகன் - நீ என்னை ரக்ஷிக்காவிட்டால் வேறு யார் ரக்ஷிப்பார்கள்?' என்று உருகி அவனை வேண்டுவதுதான் நான்காவது அங்கம்.

லௌகிகத்திலே என்ன பார்க்கிறோம்...? ஒருத்தரிடம் உதவி கேட்டுப் போனால், 'உங்களைத்தான் நம்பிக் கொண்டு வந்திருக்கிறேன்' என்றும் 'உங்களை விட்டால் வேறு யாரும் கிடையாது' என்றும் கேட்கிறபோது, கல்நெஞ்சு படைத்தவர் கூட உபகாரம் பண்ண நினைக்கிறார்.

'உங்களை நம்பி நான் இல்லை... இந்த ஊரில் இன்னும் பத்து பேரை எனக்குத் தெரியும்' என்று சொன்னோமானால் என்னாகும்... 'அங்கேயே போவதுதானே, இங்கே ஏன் வந்தாய்?' என்றுதான் கேட்பார்கள்!

அந்த மாதிரி பகவானிடத்தில் நாம், 'நீதான் எனக்கு ரக்ஷகன்; மற்றையவர் யாரும் இல்லை' என்றும் உன்னை அன்றி போக்கொழிந்தேன் என்றும் உருகி வேண்டி அவனை வரித்தல் வேண்டும்.

கார்பண்யம் என்பது இறுதியானது - ஐந்தாவது உத்தமமான அங்கம். நம்முடைய கைமுதல் எதுவுமில்லை என்பது. பகவானிடத்திலே போய், 'நான் அதைப் பண்ணினேன், இதைப் பண்ணினேன் உனக்கு...' என்றெல்லாம் சொல்லவே கூடாது. அவன் காருண்யத்தினெதிரிலே நமது இந்தச் செயல்களெல்லாம் விலை செல்லாது. ஆகையினாலே, 'நின் அருளே புரிந்திருந்தேன்; உன் கருணைக்கே நான் பாத்திரம்' என்று பகவானிடத்திலே நாம் பேச வேண்டும். எதை நாம் அவனிடத்திலே கேட்டாலும் ஒரு எலுமிச்சம் பழத்தைக் கொடுத்துவிட்டு ராஜ பதவியைக் கேட்கிற மாதிரிதான்!

'நோற்ற நோன்பிலேன், நுண் அறிவிலேன்' என்று தன்னுடைய இழிவை - கார்ப்பண்யத் தன்மையைச் சொல்லிக் கொள்ள வேண்டும்.

இந்த ஐந்து அங்கங்களுடன் ஆத்மா அவனுடையது என்று சமர்ப்பித்தால் இது தான் நிறைந்த சரணாகதி பூர்த்தி. சரணாகதியைக் காட்டிலும் உயர்ந்த வித்யை இல்லை.

இந்தச் சரணாகதியை எவரிடத்திலே பண்ண வேண்டும்...? விஷ்ணுவினிடத்திலே அவன் பாதத்திலே பண்ண வேண்டும் என்கிறது பரத்வாஜ சம்ஹிதை.

விஷ்ணுவினுடைய பெருமை அந்யத்ரு சம் - வேறெங்கும் பார்க்க முடியாதது. ஏற்றமுடைய, நலம் தரக்கூடிய சொல் விஷ்ணு என்னும் சொல். அதை ஸ்மரிக்கிறபோதே எல்லா பாபங்களும் நீங்கி எல்லாவிதமான க்ஷேமமும் நமக்கு ஏற்படும்.

# குறையொன்றுமில்லை

**வி**ஷ்ணுவைக் குறித்துப் பண்ணக்கூடிய யக்ஞத்திலே எல்லோரையும் அவன் ரக்ஷிக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்யப்படுகிறது. சர்வேப்ய: என்ற பதத்திலே இது தெரிவிக்கப்படுகிறது.

அந்த யக்ஞத்தினால் எல்லோரும் பலனடைகிறார்கள். 'சர்வான் காமான்' - எல்லோர் மனத்திலும் என்னென்ன கோரிக்கைகள் உண்டோ அத்தனைக்குமான பிரார்த்தனை. ஐதிகமான இந்த உலகத்திலே நாம் சௌக்யமாக இருக்க வேண்டுமானால் அதற்குப் பல விஷயங்கள் வேண்டியிருக்கிறது :

சரீர ஆரோக்கியம் முக்கியமாக வேண்டும். தன்னைச் சேர்ந்தவர்களுடைய ஆரோக்கியம் வேண்டும். குடும்பத்திலே மனக்கிலேசமில்லாமல் எல்லோரும் அந்நியோன்யமாய் இருக்க வேண்டும். தன்னுடைய கிருஹத்திலே இருக்கக்கூடியவர்கள் பரம்பரையை அனுசரித்து ஒழுகக்கூடியவர்களாக இருக்க வேண்டும். நமது பந்து மித்ராதிகள்தான் என்றில்லை. இந்த லோகத்தில் இருக்கும்படியான எல்லா ஜீவராசிகளும் சௌக்யமாக இருக்க வேண்டும்.

சர்வேப்ய: சப்தத்தினாலே எல்லோரும் சொல்லப்படுகிறார்கள். நாம் தனித்து சுகத்தை அனுபவிக்க முடியுமா உலகத்திலே?

# 59 முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

எல்லோரும் சௌக்யமாக இருந்தால்தான் நாம் சௌக்ய மாக இருக்க முடியும்.

சர்வேஜனா: சுகினோ பவந்து என்பது வேதத்தி லிருந்து எடுக்கப்பட்ட விஷயம்.

கால ஸந்தி பண்ணுகிற போது உபஸ்தான மந்திரம் வரும். அதிலே சூர்ய மண்டல அதிபதியான பகவான் நாரா யணனைப் பிரார்த்தனை பண்ணுகிறோம். அதே சமயத்தில் விவசாயி நிலத்தை உழுது கொண்டி ருக்கிறார். அவர் உழுது பயிரிடாவிட்டால் உல கத்திலே அன்ன சம்வ்ருதி ஏற்படுமா? எல்லோருக்கும் அந்த தான்யம் கிடைக் குமா? குடும்பத்தோடு விவசாயி அங்கே நிலத் திலே ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார். சந்த்யாவந்தனம் பண்ணுகிறவர் பிரார்த்திக்கிறார் :

'அந்த விவசாயி சிர மப்பட்டுக் கொண்டிருக் கிறார். ஹே, சூர்யா! அவரு டைய குடும்பத்துக்கும் அவருக் கும் க்ஷேமத்தை உண்டுபண்ணு. - சந்தியாவந்தன மந்திரமானது இதைப் பிரார்த்திக்கிறது. சந்தியாவந்தனமே பண்ண வில்லையானால் விவசாயி குடும்பத்துக்கான நமது பிரார்த்தனை நின்று போய்விடும்!



நமது மந்திரங் களை ஆராய்ந்து பார்த்தோமானால் தனி ஒருவருக்கு மட்டும் பிரார்த் தனை கிடையாது.

இந்திரனுக்கு சோம யாகத்திலே விசேஷ மாக சோம ரஸமானது கொடுக்கப்படுகிறது. இந்திரனானவன் ஸோம ரஸத்திலே பற்று டையவன்.

ஸோமக் கொடியென்று பெயர் அதற்கு - அதை நசுக்கினால் அதிலேயிருந்து ரஸம் வரும். அது இந்திரனுக்கும் ப்ரீதியானது. ப்ரீதியானதைக் கொடுத்தோமானால் க்ஷேமம் உண்டாகும். க்ஷேமோ அஸ்து ந :

ந: என்பதைக் கவனியுங்கள். எங்களுக்கு என்று அர்த்தம். 'மம' என்று கேட்காமல் ந: என்று கேட்பது எல்லோருக்குமாகச் சேர்த்து பிரார்த்திப்பதாகும்.

எல்லோரும் க்ஷேமத்தை அடைய வேண் டும். எல்லோரும் கீர்த்தி பிரதிஷ்டையை

# அருள்வாக்கு

தமிழ்நாட்டில் ஒருத்தனுக்கு இலவசமாகச் சாப்பாடு போடுகிற இடத்துக்கு, ''சத்திரம்'' என்று பேர் சொல்கிறோம். வடக்கே போனால், சத்திரம் என்று சொல்ல மாட்டார்கள். ''தரம் சாலா'' என்பார்கள். ''தர்ம சாலை'' என்பதன் திரிபு அது. இங்கே தக்ஷிணத்தில் மட்டும் ஏன் சத்திரம் என்கிறார்கள்? சத்திரம் என்றால் என்ன? ''ஸத்ரம்'' என்பதுதான் 'சத்திரம்' என்றாயிருக்கிறது. ஸத்ரம் என்பது ஒரு வகை யாகத்தின் பெயர். அந்த யாகத்திற்கும் மற்ற யாகங்களுக்கும் என்ன வித்யாஸம் என்றால், மற்ற யாகங்களில் யஜமானன் என்கிற ஒருவன், தன் திரவியத்தைச் செலவு செய்து, தக்ஷிணை கொடுத்து, யாகம் பண்ணுகிறான்; ரித்விக்குகள் என்ற பிராமணர்கள் (புரோஹிதர்கள்) யஜமானனிடம் தக்ஷிணை வாங்கிக் கொண்டு அவனுக்காக யக்ஞத்தை நடத்தித் தருகிறார்கள். ஸத்ர யாகங்களில் மட்டும் யாகம் பண்ணும் அத்தனை பேருமே யஜமானர்கள். ஒரு யக்ஞத்தினால் லோக க்ஷேமமும், அதில் கலந்து கொள்கிற எல்லோருக்கும் சித்த சுத்தியும், அதைத் தரிசிப்பவர்களுக்குக் கூட நன்மையும் ஏற்படுத்துகின்றனவென்றாலும், இதனால் விசேஷமாகப் புண்ணியம் அடைவது யஜமானன்தான். ஸத்ர யாகங்களில் ரித்விக்குகளே யஜமானர்களாக இருப்பதால், அத்தனை பேருக்கும் ஸமமான புண்ணியம். இந்த யக்ஞம் தன்னுடையது என்ற உரிமை எல்லோருக்கும் இருக்கிற ஸோஷலிஸ யக்ஞம். இதை வைத்தே, எவரானாலும் உரிமையோடு வந்து, யஜமானர்கள் மாதிரி வயிறாரச் சாப்பிட்டுப் போகிற இடத்துக்கு ''சத்திரம்'' என்று பேர் வந்து விட்டது. இந்த வார்த்தையிலிருந்து, சத்திரத்தில் சாப்பிடுகிறவனை விடச் சாப்பாடு போடுகிறவன் தன்னை உயர்வாக நினைக்கவில்லை என்ற உயர்ந்த பண்பும் தெரிகிறது.



— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

இந்த உலகத்திலே அடைய வேண்டும்.

கீர்த்தி பிரதிஷ்டை என்றால் என்ன...? அவரவருக்கென ஏற்பட்ட தர்மத்தைக் கடைப் பிடிப்பதுதான்.

துஷ்டனான ஹிரண்ய கசிபு இதை நமக்குக் காட்டிக் கொடுக்கிறான். பரம துஷ்டன் என்று பெயர் பெற்றவன் அவன். தப்பு காரியங்களைக் குறைவில்லாமல் பண்ணியிருக்கிறான். ஆனால் அவனே சில நல்ல காரியங்களும் பண்ணுகிறான்.

சில ஜீவராசிகளைப் போய் அவன் துன்பப் படுத்துகிறான். அப்படி துன்பப் படுத்தும்போது தன்னையறியாமலே, அப்படி ஹிம்சை படுத்தும் இடங்களிலெல்லாம் விஷ்ணு இருப்பதை நமக்குத் தெரியப்படுத்துகிறான்!

எங்கெங்கு வேதம் சொல்லக் கூடியவர்கள் இருக்கிறார்களோ அங்கெல்லாம் போய் அவர்களுக்கெல்லாம் வாய்ப் பூட்டு போட்டு விடுகிறான். ''வேதத்தைச் சொல்லக் கூடாது!'' என்கிறான்.

"ஏன்?" என்று கேட்கிறார்கள்...

"ஏனென்றால் வேதத்திலே **அவன்** இருக்கிறானே!"

சப்த பிரும்மமயோ தனு: -வேத சப்தத்துக்கு இருக்கும்படியான ஏற்றம் இது. அர்த்தம் சாமான்யமாகப் புரியாது. ஆனால் புரிகிறதோ இல்லையோ அதைக் கேட்பது என்கிற வழக்கம் நமக்கு வர வேண்டும். ஏனென்றால் வேத சப்தத்திலே விஷ்ணு உறைகிறான். ஸ்ருதி என்கிற வேதமும் ஸ்ம்ருதி என்கிற தர்ம சாஸ்திரமும் என்னுடைய ஆக்ஞை என்று பகவானே

கூறுகிறான். அவற்றை வெறுப்பவர்கள் பகவானுக்கு துரோகம் செய்கிறவர்களாகிறார்கள். அவ்வளவு உயர்த்தியானது வேத சப்தம்.

அதை ஹிரண்ய கசிபு தெரிந்து வைத்துக் கொண்டிருப்பதனால்தான் வேதம் ஓதுபவர்களைத் துன்புறுத்தும்படி சொன்னான்!

ஹிரண்ய கசிபு எப்படிப்பட்ட நாஸ்திக வாதம் பண்ணினான் என்பதைத் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும்.

அவனுடைய தம்பி ஹிரண்யாக்ஷனை பகவான் வராக ரூபியாக அவதரித்துக் கொன்றிருக்கிறான். அதனால் பகவானிடத்திலே ஹிரண்ய கசிபுவுக்கு துவேஷம் ஏற்பட்டு விட்டது. அவனைப் பகைத்துக் கொள்கிறான். அதனால் பகவான் இருப்பது தெரியும் அவனுக்கு. 'பகவானை இல்லை செய்வேன்; அவனை நான் அடிப்பேன்' என்று சொல்கிறானேயொழிய பகவானே இல்லை என்று ஒரு நாளும் அவன் சொல்லவில்லை! அப்படி அவன் சொல்லியிருந்தானானால் இந்த மாதிரியெல்லாம் போய்த் துன்புறுத்த ஆக்ஞை இடுவானா?

அவனே சொல்கிறான். எல்லோரையும் கூப்பிட்டு, சேவகர்களையெல்லாம் அழைத்து, 'இங்கிங்கு போய்த் துன்புறுத்துங்கள்– அங்குதான் விஷ்ணுவினுடைய பலம் இருக்கிறது' என்கிறான்.

எங்கே வேத விற்பன்னர்கள் இருக்கிறார்களோ எங்கே பசுக்கள் உள்ளனவோ அங்கெல்லாம் போகச் சொல்கிறான்.

பசுக்களிடமிருந்து கிடைக்கக் கூடிய பால், தயிர், நெய் எல்லாமே யக்ஞத்துக்கு வினியோகம் ஆகிறது. வசிஷ்டர் பண்ணிய ஒரு யக்ஞத்திலே உயர்ந்த காமதேனு என்கிற பசுவின் பெண்ணான நந்தினி என்கிற பசு எப்போதும் இருந்து உபகாரம் பண்ணிக் கொண்டிருந்தது. அந்த ஒரு பசுவினுடைய பாலைக் கொண்டே எல்லாவற்றையும் பண்ணினார்.

ஒரே பசுவினுடைய பால், தயிர், நெய் ஆகியவை ஒரு கர்மாவிலே வினியோகமாயிற்றானால் அதைக் காட்டிலும் உயர்த்தி இல்லை. ஒரே பசுவினுடைய பால், தயிர், நெய் ஒரு சிரார்த்தத்திலே விநியோகமானால் அந்த சிரார்தம் ரொம்ப வீரியம் மிக்கது. பல பாலைக் கலந்து பண்ணுவதாக இருந்தால், இரண்டாவது பக்ஷம்தான். ஒரே பசுவினுடைய பாலைக் கொண்டு பண்ணுவதுதான் ரொம்ப ஏற்றமுடையது என்கிறது சாஸ்திரம்.

அதனால் நந்தினி என்கிற பசுவினிடத்திலிருந்து கிடைத்ததைக் கொண்டு விசேஷமாக நடத்தினார் யக்ஞத்தை.

பசுக்களுக்கே அக்னிஹோத்ரி என்கிற பெயர் உண்டு.

அக்னிஹோத்ரம் என்பது சாதாரணமாக விடியற்காலையிலும் சந்தியா காலத்திலும் பண்ணுகிற நியமம். இதைச் செய்கிறவர்கள் ஊரைவிட்டு வெளியிலே போக முடியாது. இரண்டு வேளையும் உபாஸனை பண்ணியாகவேண்டும் அல்லவா.

அதேபோல் பசுவை வைத்துக் கொண்டிருப்பவர்களும் ஊரை விட்டுவிட்டுப் போக முடியுமோ...? முடியாது! அதனாலேயே பசுவுக்கு அக்னிஹோத்ரி என்றொரு பெயர்!

பசுக்களைப் பற்றி சுவாரஸ்யமாக ஒரு கதை வருகிறது வேதத்திலே: பூர்வ காலத்திலே எருதுகளுக்கு மட்டும்தான் கொம்பு இருந்தது; பசுக்களுக்கெல்லாம் கொம்பு கிடையாதாம். பசுக்களெல்லாம் என்ன நினைத்ததாம்..? தங்களுக்கும் கொம்பு இருந்தால் நன்றாக இருக்குமே என்று நினைத்ததாம்!

பசுக்களுக்குக் கொம்பு எப்படி முளைத்தது...? அடுத்த வாரம் வரை காத்திருங்கள், சொல்கிறேன்.

(தொடரும்)



**"வாழ்க்கையில் முன்னேற நாம எப்பவும் எதிர்நீச்சல் போடத் தயாராக இருக்கணும்னு ஸ்டெனோவுக்கு அட்வைஸ் பண்ணினது தப்பாப் போச்சு..."**

**"ஏன் என்னாச்சு?"**

**"இன்னிக்கு நீச்சல் உடையில வந்திருக்கா!"**

**– எம். அருண்மூர்த்தி**

# "நாங்க யோகாக்கு மாறிட்டோம்!"

சிறைக் கைதிகளின் மன இறுக்கத்தைத் தளர்த்தவும், மன வேற்றுமைகளைக் களையவும் சமீபத்தில் ஒரே கால கட்டத்தில் திருச்சி, மதுரை, பாளையங்கோட்டை, சேலம் ஆகிய நான்கு நகரங்களில் இருக்கும் மத்திய சிறைச் சாலைகளுக்கு உள்ளே யோகா பயிற்சி வகுப்புகள் நடத்தப்பட்டன. நடத்தியவர்கள், ஈசா யோகா மையத்தினர்.

திருச்சி மத்திய சிறைச்சாலையில் முதல் பத்து நாள் வகுப்புகளில் முப்பத்தொன்பது பேரும், இரண்டாம் கட்ட பத்து நாள் வகுப்புகளில் நாற்பத்தியிரண்டு பேரும் கலந்து கொண்டிருக்கிறார்கள். இதில் ஆயுள் தண்டனைக் கைதிகள் 55 பேர். மற்றவர்கள் 26 பேர்.

ஒவ்வொரு நாளும் மூன்று மணி நேரம். அதில் கொஞ்சம் யோகா. கொஞ்சம் அனுபவப் பகிர்வு. கொஞ்சம் ஆசிரியரின் உரை.

''தினமும் வகுப்பு முடியும் நேரத்தில் அனைவருக்கும் 'ஒரு கருவி' தருவோம்'' என்கிறார்கள் யோகா ஆசிரியர்கள்.

'கருவி' என்பது வேறொன்றுமில்லை. 'உண்மை' 'உழைப்பு', 'உயர்வு', 'அன்பு' என்று ஒவ்வொரு நாளும் ஒரு தலைப்பு தந்து அதனடிப்படையில் அன்று முழுவதும் அவர்களைச் சிந்திக்க வைத்து விட்டு, மறுநாள் வந்து அரங்கில் கூடும்பொழுது அது குறித்துப் பேசச் சொல்வார்களாம். அவர்களைப் பேச விட்டுக் கேட்டபொழுது கிடைத்த முத்துக்கள் ஏராளம் என்கிறார்கள் யோகா ஆசிரியர்கள்.

கடைசி தினத்தின்போது யோகா பயிற்சி பெற்ற கைதிகள் பெரும்பாலோர் கவிதை வாசித்தார்கள். பேசச் சொற்களேதும் இல்லாமல் சிலர் மைக் முன்னே வந்து நின்று தவித்து விட்டுப் போனார்கள். பொறியியல் பட்டம் பெற்றவரும், பேராசிரியருமான ஆயுள் தண்டனைக் கைதி ஒருவர் ஆங்கிலத்தில் ஜென்டிலாக உரை தந்து 'தேங்க்ஸ்' சொல்லிச் சென்றார்!

சிலரிடம் பேச்சுக் கொடுத்தோம்.

ஆயுள் தண்டனைக் கைதியான முப்பது வயது இளைஞர் ஒருவர், 'என்னை முழு மனிதனாக பரிணமிக்கச் செய்துள்ளது இந்த ஸ்வஜஸ்திதி யோகா. இதற்கு முன்னர் எவராலும் சகித்துக் கொள்ள முடியாத முழு முரடன் நான்!'' என்கிறார்.



கோவையைச் சேர்ந்த இஸ்லாமிய இளைஞர் ஒருவர். ஆயுள் தண்டனைக்குரிய காலம் முழுவதும் அனுபவித்து விட்டு தற்போது 'விடுதலையாகிப்' போகும் தினத்தை நோக்கிக் காத்திருப்பவர். பத்து வயதில் புகை பிடிக்க ஆரம்பித்தவராம். வயது ஏற ஏற அபின், கஞ்சா என நீண்டு சென்று மயக்கத்தின் எல்லையில் உணர்ச்சிக் கொந்தளிப்பில் உயிர் வதை செய்தவர்!

''இனி உயிர் பிரிந்து செல்லும் கடைசி நொடி வரைக்கும் எந்தவொரு தீய பழக்கத்தின்பாலும் செல்ல

மாட்டேன்'' என்று விழி களில் நீர் வழிந்தபடி உறுதி மொழி தருகிறார்.

நன்றி நவிலலின்போது ஆங்கிலத்தில் அடித்து விளாசிய அந்தப் பேரா சிரியர், தமக்கு முன்பிருந்த முதுகுவலி தற்பொழுது சுத்தமாகவே இல்லை என்கிறார்.

''எதற்கெடுத்தாலும் பட் டென கோபப்படும் பழக் கம் எனக்கு. இந்தப் பயிற்சிகளுக்குப் பின்னர் கோபம் தவிர்த்து பொறு மையாக - நிதானமாக செயல்படுகிறேன்'' என் கிறார் ஆயுள் கைதி ஒருவர்.

''மொத ரெண்டு நாள் ரொம்பக் கஷ்டமா இருந் திச்சு. அப்படியே உடம் பெல்லாம் போட்டு முறுக்கி எடுத்தாப்ல ஆய்டிச்சி. இப்ப பத்து நாளா, உடம் பும் மனசும் சும்மா பஞ்சு போல லேசாயிடுச்சு'' என் கிறார் நாற்பது வயதுக்காரர் ஒருவர்.

குண்டர்கள் தடுப்புச் சட்டத்தின் கீழ் கைதாகி சிறையிலிருக்கும் இருபத்தி யிரண்டு வயது இளைஞர் ஒருவர்,

''டெய்லி பத்தரை மணிக்கு மேலதாங்க படுக்கையிலேந்து எந்திரிப்பேன். ரொம்ப சோம்பலாவும் இருப்பேன். பெரியவங்க யாரா இருந்தாலும் மதிப்பு மருவாதையெல்லாம் தர மாட்டேன். இப்ப இந்த யோகா செய்றது சுத்தமா மாத்திடுச்சி. காலைல ஆறு மணிக்கெல்லாம் நானாவே எந் திரிச்சிர்றேன். எல்லாத்துக்கிட்டேயும் இனிமே மரியாதையாப் பழ கணும்னு தோணுது சார்!'' என் றார் நம்மிடம்.

''இந்த யோகாசன முறை களை இனி தொடர்வீர் களா?'' எனக் கேட் டோம்.

''தொடர்ந்து செய்வோம். அது மட்டுமில்லே; எங்க தொகுதி யில இருக்கற மத்த வங்களுக்கும் இதச் சொல் லித் தருவோம்!'' என்கிறார்கள் அனேகம் பேர்.





சிறைச் சாலைகளில், தண்டனை அனுபவித்து வரும்போது மன நோயாளியாக ஆகிப் போகிறவர் களுக்கென்று தனியாக ஒரு பிளாக் இருக்கும். இந்த யோகா பயிற்சி வகுப்புகளில் பங்கெடுத்த சில கைதிகள் அந்த பிளாக்கிற்குத் தாமாகவே வலிந்து சென்று மனநோய்க்கு ஆளான கைதிகளுக்குப் பணிவிடைகள் செய்துவிட்டு வருவதாக நம்மிடம் சிலர் கூறினார்கள். அவர்களைக் குளிக்க வைப்பது, உடை உடுத்தி தலைவாரி விடுவது, சாப்பிடாமல் இருக்கும் மன நோயாளிகளுக்கு சில நேரங்களில் உணவு ஊட்டி விடுவதும் உண்டாம்.

''அவுங்களும் நம்பளைப் போல மனுசங்கதானே சார்!'' என்று அன்பைச் சுமந்து பேசுகிறார் ஆயுள் தண் டனையை அனுபவித்துவரும் ஒருவர்!

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

"இருபது வகையான சர்க்கரை வியாதிகள் உண்டு, தெரியுமா?" என்று கேட்டார் டாக்டர் ராஜ்குமார்.

'டயபடீஸை முழுமையாகக் குணப்படுத்திக் காட்டுகிறோம்' என்று தமது சிகிச்சையில் நார்மலான மாஜி சர்க்கரை நோயாளிகள் பட்டியலையே தருகிற டாக்டர் இவர்!

சாதாரணமான சர்க்கரை நோயாளிகளை அதிகபட்சம் ஆறு மாதங்களுக்குள்ளும், தீவிர நோயாளிகளை ஓர் ஆண்டுக்குள்ளும் குணப்படுத்திக் காட்ட முடியும் என்று கூறும் இவர் தருவது, வெறும் லேகியம் மட்டும்தான். அதுவும் பீட்ரூட் முதலிய பச்சைக் காய்கள் சேர்த்துத் தயாரிக்கும் இனிப்பான லேகியம்!

கல்கத்தாவிலுள்ள 'இந்தியன் போர்ட் ஆஃப் ஆல்டர்நேடிவ் மெடிசன்' என்கிற அமைப்பு, அண்மையில் நடத்திய ஏழாவது சர்வதேச மாநாட்டில் இவருக்கு 1999ஆம் ஆண்டுக்கான விருது வழங்கிச் சிறப்பித்திருக்கிறது.

பத்தாண்டுகளுக்கு முன்னால் டாக்டர் நீலகண்டன் என்பவர் தலைமையில் ஒரு குழுவாகச் செயல்பட்டு இந்த 'இனிப்பான' மருத்துவ முறையை அறிமுகப்படுத்தினார்களாம். இப்போது டாக்டர் நீலகண்டன் இல்லை. அவர் நினைவாக, இந்த மருத்துவ முறைக்கு 'நீலா இயற்கை வைத்தியம்' என்று பெயரிட்டிருக்கிறார்கள். சென்னை பூந்தமல்லி நெடுஞ்சாலையிலுள்ள குமரன் மருத்துவமனையில் பணியாற்றுபவர், டாக்டர் பி.ஆர். ராஜ்குமார்.

• டாக்டர் ராஜ்குமார்

நீலா மருத்துவமுறையில் தரப்படுகிற லேகியத்தில், குடமிளகாய், பீட்ரூட், முட்டைகோஸ், துளசி, எலுமிச்சைச்சாறு, பெரிய வெங்காயம் போன்ற பச்சைக் காய்கறிகளை மட்டும் குறிப்பிட்ட விகிதத்தில் சேர்த்துத் தயாரிக்கிறார்கள். முக்கியமான நிபந்தனை, இந்த லேகியத்தை ப்ரிட்ஜில் மட்டுமே வைத்திருக்க வேண்டும். அப்படியும் அதிகபட்சம் நாற்பது நாட்கள்தான் வைக்கலாமாம்.

நோயின் தன்மைக்கு ஏற்ப அரை, முக்கால், அல்லது ஒரு ஸ்பூன் அளவு என்று வெறும் வயிற்றில் காலையில் ஒருமுறை மட்டும் சாப்பிட்டு வந்தால் போதும்.

இந்த இயற்கை லேகியத்தை, அலோபதி மருந்து சாப்பிடுகிறவர்களாக இருந்தாலும் சாப்பிடலாம். அவர்கள், டாக்டர்கள் தருகிற இன்சுலின், மாத்திரைகள், போன்றவற்றையும் விட்டு விடாமல் உபயோகிக்க வேண்டும். கூடவே இந்த லேகியத்தையும் சாப்பிட வேண்டும். அவ்வளவுதான்.

லேகியம் சாப்பிடத் தொடங்கிய எட்டாம் நாள், சர்க்கரை அளவு எவ்வளவு குறைந்திருக்கிறது என்று பார்க்கிறார்கள். குறைந்த பட்சம் 60 - 70 மி.கி. சர்க்கரை அளவு குறைந்து விடுகிறதாம். லேகியம சாப்பிடத் தொடங்கிய இரண்டு மூன்று நாட்களிலேயே, சிறுநீர்ப் போக்கில் மாற்றம், களைப்புக் குறைவு, பசி போன்ற வித்தியாசங்களை உணர முடியும்.

இந்த மாயாஜாலத்துக்கு டாக்டர்

சொல்கிற அறிவியல்ரீதியான காரணங்கள் இவை :

- தீவிரமான சர்க்கரை நோய் உள்ளவர்கள் சாப்பிடுகிற உணவில் பாதியளவுதான் செரிமானமாகும். மீதி வீணாகிப் போய்விடும். இந்த 'metabolism' சீரடையக் காய்கறி லேகியம் உதவுகிறது.
- நம் உடம்பில் உள்ள 'பீட்டா செல்' கள்தான் சர்க்கரையை உருவாக்குகின்றன. இது சேதமடைந்தால் டயாபெடிஸ் வருகிறது. நீலா லேகியம் செல்களை மறுபடியும் உயிர்ப்பிக்கிறது. அடிப்படை இதுதான்.

ஆனால் இப்படி செல்கள் உயிர்ப்பிக்கப்படும் என்பதை (regeneration) அலோபதி மருத்துவர்கள் ஏற்கமாட்டார்கள் என்பதையும் டாக்டர் ஒப்புக் கொள்கிறார்.

நீரிழிவு நோய்க்கு அலோபதியில் தருகிற மாத்திரை, இன்சுலின் போன்றவற்றை, டாக்டர்கள் நிர்ணயிக்கும் அளவைக் குறைக்காமல் ஆயுசு முழுவதும் சாப்பிட்டாக வேண்டும். ஏதாவது சோம்பல்பட்டு ஒருவேளை மாத்திரையைச் சாப்பிடாவிட்டால் கூட தவறு.

ஆனால், இவற்றோடு கூடவே நீலா லேகியம் சாப்பிட ஆரம்பித்தால் படிப்படியாக மாத்திரை, இன்சுலின் அளவைக் குறைத்து, முழுவதையும் நிறுத்தி விடலாம். ஆனால் சர்க்கரை அளவு முற்றிலும் குறைந்த பிறகும் தொடர்ந்து மூன்று, நான்கு மாத காலம் லேகியத்தை விடாமல் சாப்பிட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

டயாபெடிஸ் மாத்திரைகளை அரை மாத்திரை அளவிலும், இன்சுலினை 5 யூனிட் அளவிலும், படிப்படியாகக் குறைக்கச் சொல்கிறார்கள். அதுவும் சர்க்கரைச் சோதனை செய்து, அந்த அறிக்கையின் அடிப்படையில்தான் தேவைக்கேற்ப குறைக்க அனுமதிப்பார்கள்.

இந்த மருத்துவக் காலம் முழுவதிலும் முழு வயிறு சாப்பிடச் சொல்கிறார்கள். அரிசி, சிக்கன், பாகற்காய், கீரை, வெண்டை, துவரம் பருப்பு, பட்டாணி, காராமணி, தேநீர், பால் - எதுவும் விலக்கப்படவில்லை.

ஆனால் கிழங்கு வகைகள், பழ வகைகள், கடலைப் பருப்பு, பாசிப் பருப்பு, வேர்க்கடலை, காப்பி இவை கண்டிப்பாகத் தவிர்க்கப்பட வேண்டும்..

"இந்த இயற்கை மருத்துவ முறையில் பக்கவிளைவு ஏதும் இல்லை. தவிர, இந்த லேகியத்தை எங்கு வேண்டுமானாலும் கொண்டு போய்ச் சோதனை பண்ணிப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்றும் அடித்துச் சொல்கிறார் டாக்டர்.

# சர்க்கரை நோய்க்கு இனிப்பு மருத்துவம்!

சர்க்கரை அளவை இயல்பான நிலைக்குக் கொண்டு வந்த பின்னர் ஒரு மாதம் சுதந்திரமாக விட்டு விடுவார்கள், மருந்து, லேகியம் ஏதும் இல்லாமல்! அப்புறம் ஒரு நாள் தேநீரில் முழு அளவு சர்க்கரை போட்டுப் பருகக் கொடுப்பார்கள். அதன் பிறகு ஏழாம் நாள், வழக்கமான முழு அளவு சாப்பிட விட்டு, ஒன்றரை மணி நேரத்தில் சர்க்கரை அளவைக் கவனிப்பார்கள். 90 சதவிகித நோயாளிகள் மிகவும் நார்மலாக 120, 118, 116 என்கிற சர்க்கரை அளவுக்கு வந்து விடுகிறார்களாம்.

— யெஸ்பால்



பிரபலங்கள் கோட்டை விட்டதில் பாரதமே தலை குனிந்த வேளையில் இளந்தலைமுறை கிரிக்கெட் வீரர்கள் நம்பிக்கை விளக்கேற்றி வைத்தார்கள், சமீபத்தில் ஸ்ரீலங்காவில் நடைபெற்ற (19 வயதுக்குட்பட்டவர்களுக்கான) உலகக் கோப்பை ஆட்டங்களில்!

இது 'அண்டர் நைன்டீன்' வகையில் இரண்டாவது உலகக் கோப்பைப் போட்டி.

"ஸ்ரீலங்காவினர் ஒரு சவாலாக எடுத்து நடத்தி அசத்தி விட்டார்கள்" என்கிறார், நமது அணியின் மானேஜராகப் போய்விட்டு வந்த டாக்டர் ஜி. நந்தகுமார்.

"அற்புதமான ஏற்பாடுகள், உபசரிப்புகள், முக்கியமாக பாதுகாப்பு ஏற்பாடுகள். நம்முடைய 'பையன்கள்' ஸ்ரீலங்காவில் போய் இறங்கியது, அங்கே 'கர்ஃப்யூ' அமலாகியிருந்த நேரம். இவர்களுக்கு 40 இருக்கை ஏஸி பஸ், முன்னும் பின்னும் இரண்டு ஜீப்புகளிலும், பேருந்துக்குள்ளும் பாதுகாப்புக் காவல்துறையினர் என்று பக்காவாக ஏற்பாடுகள் செய்து விட்டார்கள்" என்கிறார்.

பதினோறு நாடுகள் பங்கு கொண்ட இந்த இளைஞர் அணிப் போட்டிகளுக்கு ஐந்து டிராஃபிகள் இருந்தன.

• டெரிஃபிக் ட்ரையோ!



இவற்றில் மூன்றை நம்மவர்களும் இரண்டை ஸ்ரீலங்கா அணியினருமே பகிர்ந்து கொண்டார்கள்.

"ரொம்ப நல்ல, மரியாதையான பிள்ளைகள்" என்று பெருமைப்படுகிறார் நந்தகுமார். ஸ்ரீலங்காவில் இருந்த இருபத்து நாலு நாட்களும் இந்த இளம் ஆட்டக்காரர்கள் பார்த்தது ஆடுகளம், ஹோட்டல் இரண்டு மட்டும் தான்!

உலகிலேயே மிகச் சிறப்பான 'அண்டர் நைன் டீன் அணி'

• நந்தகுமார்





• வென்று வந்த டீம்!

னார்கள். இதில் பதினான்கு இளைஞர்கள் டீமுக்குத் தேர்வு பெற்றார்கள். கோச் ஆக ரோஜர் பின்னி.

இரண்டாவது உலகக் கோப்பையைச் சுமந்து வந்த அணியிலிருந்து முகம்மது கைஃப் மட்டுமே இப்போது தென் ஆப்பிரிக்காவோடு நடைபெறுகிற முதல் டெஸ்ட் மாட்ச்சில் சேர்க்கப்பட்டிருக்கிறார். அண்டர் நைன்டீன் அணியிலிருந்து இன்னும் அதிகம் பேருக்கு வாய்ப்புத் தரப்பட்டிருக்க வேண்டும் என்று சொல்கிறார் நந்தகுமார்.

"பாகிஸ்தான் அணிக்கு ஆறு பேர், ஸ்ரீலங்கா அணிக்கு இரண்டு பேர் என்று இளம் டீமிலிருந்து சேர்த்து ஊக்கப்படுத்துகிறார்கள். ஆனால் நாம்?" என்று கேள்வி எழுப்புகிறார்.

"வருங்காலம் இளைஞர் கைகளில்தான். குறைந்த பட்சம் ரீதிந்தர் சிங் சோதியாவையாவது சேர்த்துக் கொண்டிருக்க வேண்டும். இவன் உடம்பில் அடி படாத இடமே இல்லை என்கிற மாதிரி உருண்டு புரண்டு விளை



# ஜெயிச்சாச்சு!

என்று பெயர் வாங்கினார்கள்.

"நீரஜ் பட்டேல் என்கிற இளைஞர் ஆன்டிரேலியாவோடு ஆடுகையில் 22 பந்துகளில் 52 ரன்கள் எடுத்துச் சாதனை செய்தார்! வர்ணனையாளர், "அம்பயர் தன்னுடைய இரண்டு கைகளையும் தூக்கிக் கொண்டே இருக்கும்படி செய்து விட்டார்" என்று குறிப்பிட்டாராம்.

இந்திய அணிக்காகச் சென்னையில் 'கேம்ப்' நடந்தது. இம்முறை இருபத்தெட்டு பேர் பயிற்சி பெற்

யாடினான்" என்கிறார் நந்தகுமார்.

இவருடைய கணிப்பின்படி, இந்த அண்டர் நைன்டீனில் குறைந்தது ஆறு பேர் வரும் ஆண்டுகளில் மிகப் பிரமாதமாக வருவார்கள்.

1. முகம்மது கைஃப், 2. ரீதிந்தர் சிங் சோதி, 3. நீரஜ் பட்டேல், 4. யுவராஜ் சிங், 5. ரவ்னீத் ரிக்கி, 6. அஜய் ராத்ரா.

இந்தப் பெயர்கள் அடுத்து வரும் ஆண்டுகளில் நம் முடைய ஆடுகள மதிப்பை நிச்சயம் உயர்த்தும் என்கிறார் நந்தகுமார். சோதி, ரிக்கி, யுவராஜ் மூவரையும் 'டெர்ரிஃபிக் ட்ரையோ' என்று மகுடமிட்டு 'இந்து' எழுதியது நினைவிருக்கலாம்.

இந்திய கிரிக்கெட்டின் எதிர்காலம் எப்படியிருக்கும்? என்ற கேள்விக்கு நந்தகுமாரின் பதில்:

"நான் பெரியவன் நீ பெரியவன் என்கிற நினைப்பு ஒழியணும். மிலிட்டரி டிஸிப்ளின் ஏற்படணும்! பணம் அதிகம் புரளக் கூடாது. டீம் ஸ்பிரிட் முழுசா ஏற்படணும். அப்பதான் உருப்படும்."

— சுப்ர. பாலன்

**ம**ன்னரின் அந்தப்புரம். மந்திரி தலை தெறிக்க ஓடி வருகிறார்.

**மந்திரி:** அரசே! அரசே! ஒவ்வொரு அந்தப்புரமாக உங்களை தேடித் தேடி வாயில் நுரை தள்ளுகிறது. என்னை அங்கு கணக்கு பார்க்கச் சொல்லிவிட்டு நீங்கள் பாட்டுக்கு வந்து விட்டீர்களே, நியாயமா?

**மன்னர்:** பின்னே, அந்தப்புரத்திற்கு உம்மையும் அழைத்துக் கொண்டு போகச் சொல்கிறீரா?

**மந்திரி:** ஐயகோ, நான் அதைச் சொல்லவில்லை. அரசாங்க வரவு-செலவு திட்டத்தை நாளை அறிவிக்கிறோம் என்று ஊர் முழுக்க தண்டோரா போட்டாகி விட்டது. நிதி பற்றாக்குறை வேறு எங்கு போய் நிற்கப் போகிறதோ தெரியவில்லை. நாம் கணக்குப் பார்க்கிறோமோ இல்லையோ, எல்லா புள்ளி விவரங்களையும் கரைத்துக் குடித்துவிட்டு, வரவு-செலவு திட்டம் இப்படி இருக்க வேண்டும், அப்படி இருக்க வேண்டும் என்று பிரனாய் ராயர் சேக்கிழார் ஒரு வாரமாக மூலைக்கு மூலை கருத்தரங்குகளை நடத்தி நம்மைக் கிழித்துக் கொண்டிருக்கிறார். எழுந்து வாருங்கள் அரசே!

**மன்னர் (எழுந்து கொண்டே):** நிதி பற்றாக்குறை, நிதி பற்றாக்குறை நிதிபற்றாக்குறை. இந்த வார்த்தையைச் சொல்லியே என் கழுத்தை அறுக்கிறீர் ஐயா. பற்றாக்குறை வரும் அளவிற்கு என்னய்யா தலை போகிற செலவு செய்து தொலைத்தீர்?

**மந்திரி:** என்ன அரசே இப்படிக் கேட்டு விட்டீர்கள்? நாட்டின் பாதுகாப்புச் செலவிற்கே பொற்காசுகளை ஆயிரக்கணக்கில் செலவழிக்க வேண்டி இருக்கிறது. பிறகு...

**மன்னர்(இடைமறித்து):** சற்றுப் பொறும். சென்ற வாரம் ஆயுதக்கிடங்கை பார்வையிட்டேன். மலை மாதிரி அல்லவா ஆயுதங்களை வாங்கி சாய்த்திருக்கிறீர்? சமீபத்தில் போர்முரசு கொட்டும் அபிப்பிராயம் எனக்கிருக்கிறது என்று நான் சொன்னேனா? அதிகப்பிரசங்கித்தனமாக எதையாவது செய்ய வேண்டியது, பிறகு நிதி பற்றாக்குறை என்று என் பிராணனை வாங்க வேண்டியது.

**மந்திரி:** அரசே! விஷயம் புரியாமல் பேசுகிறீர்கள். அண்டை நாட்டு அரசர் பொழுது எப்பொழுது விடியும் போர் எப்பொழுது தொடுப்போம் என்று ஆயுதங்களை பல்லவ நாட்டிலிருந்து வரவழைத்த வண்ணம் இருக்கிறார். திடீரென்று நம்மைப் போருக்கு அழைத்து, ஒரு பேச்சுக்குச் சொல்கிறேன், நாமும் தோற்று விடுகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள், பிறகு 'அம்மா' என்றால் தேசம் வந்து விடுமா அல்லது 'அப்பா' என்றால் வந்து விடுமா? அதனால்தான் பல்லவ நாட்டு ஆயுதசாலையுடன் ஒரு நிரந்தர ஒப்பந்தம் செய்து விட்டேன். அதன்படி, அண்டை நாட்டு அரசருக்கு என்னென்ன ஆயுதங்கள் அனுப்புகிறார்களோ அவற்றை நகல்



எடுத்து அதே மாதிரியான ஆயுதங்களை அதே அளவு நமக்கு ஒரு செட் அனுப்பிவிடும்படி ஏற்பாடு செய்துவிட்டேன். எப்படி எனது ஏற்பாடு

**மன்னர்:** ஏற்பாடு இருக்கட்டும். அதென்ன, என்னுடைய லாயத்தில் படை வீரர்களுக்கான குதிரைகள் இல்லாது தனியாக 200 வெள்ளைக் குதிரைகள் நிற்கின்றன?

**மந்திரி:** ஐயய்யோ, அதை ஏன் கேட்கிறீர்கள்? ஒவ்வொரு மந்திரியும் தான் வெளியே சாலையில் செல்லும்போது தனக்கு முன்னால் 10 வெள்ளை குதிரைகள் பின்னால் 10 வெள்ளை குதிரைகள் அணிவகுப்பாகச் செல்ல வேண்டும் என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்கள்! இந்த

அணிவகுப்பு குதிரைகளைப் பராமரிக்கும் செலவு வேறு தலையில் விழுந்து விட்டது.

**மன்னர்:** சாலை என்றதும் நினைவிற்கு வருகிறது. நேற்று நான் மாறுவேடத்தில் ரோந்து சென்றிருந்தபோது சாலை பராமரிப்பு மிகவும் மோசமாக இருக்கிறது என்று மக்கள் அங்கலாய்ப்பதை நேரில் கேட்டேன். 5 வருடத்திற்குள் 4 முறை சாலைகளை செப்பனிட்டிருக்கிறோம். என்ன செலவு செய்தாலும் இவர்களைத் திருப்திப்படுத்த முடியவில்லையே?

**மந்திரி:** ரொம்பத்தான் சலித்துக் கொள்ளாதீர்கள் அரசே. நாலு முறை எங்கே செப்பனிட்டோம்? ஒரே ஒரு முறைதான் கையை வைத்தோம். பாக்கி மூன்று தடவைகள் கணக்கு மட்டும் தான் காட்டினோம். அதில் எனக்கு வேறு 25 சதவீதம் பாக்கி இருக்கிறது...

**மன்னர்:** யோவ்! உமது பழைய பாக்கி வசூலிக்கும் நேரமாய்யா இது? முதலில் நாம் வணிக வளர்ச்சிக்கு கொடுத்திருக்கும் கடன்களை எல்லாம் வசூல் செய்யுமய்யா!

**மந்திரி:** சென்ற வருடம் இளவரசர் காதுகுத்தும் விழா உலக அதிசயங்களில் ஒன்றாகப் பேசப்படவேண்டும் என்று பணத்தை வாரி இறைத்தீர்களே, அந்தப் பணம் எங்கிருந்து வந்ததாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? கட்டாய அன்பளிப்பாக நம் நாட்டுப் பெரிய வணிகர்கள் எல்லாம் தந்ததாக்கும்! இப்போது எந்த முகத்துடன் நான் போய் வட்டியையோ முதலையோ கேட்பேன், யோசித்துப்பாருங்கள் அரசே!

**மன்னர்:** கொடுத்த கடன்கள் இருக்கட்டும், நாம் வாங்கியிருக்கும் கடன் கணக்கு எங்கு நிற்கிறது, அதைச் சொல்லும்.

**மந்திரி:** ஐயோ! அதுதான் வயிற்றில் ஒரு சேர் புளியைக் கரைக்கிறது அரசே. கல்விக்கு, ஆரம்ப சுகாதாரத்திற்கு என்று கடன் வாங்கிய நிலை போய், பாலம் கட்ட, சாலை சீர் செய்ய என்று கடன் வாங்கிய நிலையும் போய் இப்போது நம் ஊழியர்களுக்கு சம்பளம் கொடுக்கவே பத்தாயிரம் பொற்காசுகள் கடன் வாங்கி இருக்கிறோம் அரசே. கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்.

**மன்னர்:** காப்பாற்றுவார் காப்பாற்றுவார். ஏழை எளிய மக்களுக்கு இலவசமாக எத்தனை தந்திருக்கிறோம். அந்தப் புண்ணியம் நம்மை காப்பாற்றாமலா போய்விடும்?

**மந்திரி:** இலவசம். அந்த வார்த்தையைச் சொல்லாதீர்கள் அரசே. பற்றிக் கொண்டு வருகிறது.

**மன்னர்:** ஏன் ஓய்?

**மந்திரி:** இருக்கிற செலவுகளை சமாளிக்கவே என் பாடு உன் பாடு என்று இருக்கிறது. இந்த அழகில் சென்ற ஆண்டு விவசாயத்துறை மேம்பாட்டு மாநாட்டின் போது கன்னா பின்னாவென்று இலவச நிலம், இலவச ஏர், இலவச விதை, இலவச கிணறு, இலவச அப்பா, இலவச அம்மா என்று அறிவித்து விட்டு வந்துவிட்டீர்கள். இலவச திட்டங்களை எப்படி நிறைவேற்றப் போகிறோம் என்று கொஞ்சமாவது யோசித்தீர்களா அரசே?

**மன்னர்:** ஹி...ஹி. அது மந்திரியாரே, மக்கள் அலைமோதும் ஊர்வலமாக எனக்கு ஜே போட்டுக் கொண்டு வந்தார்களா, சிறிது உணர்ச்சிவசப்பட்டுவிட்டேன்.

**மந்திரி:** ஏன் அரசே பேசமாட்டீர்கள்? அவ்வளவு பேருக்கும் மாநாட்டிற்கு வந்து போக அரசாங்க மாட்டு வண்டிகள் என்ன, சத்திர வசதிகள் என்ன, உண்ண விருந்து வகைகள் என்ன, கைச்செலவிற்கு 10 பொற்காசுகள் என்ன என்று மூக்கால் செலவு செய்து கூட்டத்தைக் கூட்டியிருக்கிறேனாக்கும், தெரிந்து கொள்ளுங்கள்.

**மன்னர்:** ஷ் ஷ்! மெதுவாகப் பேசும்! மானத்தைக் கப்பலேற்ற நீர் ஒருவரே போதும் போலும். முதலில் வருமானத்திற்கு ஒரு வழியைப் பாரய்யா!

**மந்திரி:** வழக்கம்போல வரியை ஏற்ற வேண்டியதுதான். இத்தனைக்கும் நாம்தான் நிதி திரட்டும் பொருட்டு மக்களிடம் வரி வசூலிக்கும் வழக்கத்தை ஆரம்பித்து வைத்தோம். வரி நிர்ணயிக்கும் சட்டம் என்றெல்லாம் கொண்டு வந்தோம். ஆனால் மக்கள் நம்மை விட புத்திசாலிகள். சட்டத்தில் உள்ள ஓட்டைகளையெல்லாம் கண்டுபிடித்து வரி ஏய்ப்பு செய்கிறார்கள் அரசே!

**மன்னர்:** வரி ஏய்ப்பு முறைகளை முதலில் கண்டு பிடியுமய்யா!

**மந்திரி:** வரி ஏய்ப்பை நிறுத்தவா அரசே?

**மன்னர்:** அதுக்கில்லை ஓய். கப்பம் கட்டும் போது நாம் கடைப்பிடித்துப் பார்க்கலாமே, அதற்குச் சொல்கிறேன்.

**மந்திரி:** நாம் ஏன் இன்னும் உருப்படவில்லை என்று எனக்கு இப்போது புரிகிறது அரசே!

— **க்ரஷ்**

# வரி பார்த்து சீரி!

## காதில் விழுந்தவை:



● ஒட்டைக் கப்பலுக்கு ஒன்பது மாலுமிகள் என்று ஒரு சொல் வழக்கு உண்டு. அதுபோலத்தான் தமிழ்நாடு காங்கிரஸும்! எப்படியும் திண்டிவனத்தாரை தலைவர் பதவியில் இருந்து தூக்கி விட வேண்டுமென்று கஜினி முகமது போல டில்லிக்குச் சென்று வருகின்றனர், பல கோஷ்டிகள். திண்டிவனம் மட்டும் சுலபமாக விட்டுக் கொடுத்து விடுவாரா என்ன? அவரும் டில்லி சென்று அம்மாவைச் சந்திக்கும் முயற்சியில் இறங்கினார். ஒரு வாரம் காத்திருந்தும் பேட்டி கிடைக்கவில்லை. மனம் வெறுத்துத் திரும்பினாராம். இதற்கிடையில் வேறு சில விவகாரங்கள் காங்கிரஸ் வட்டாரத்தில் தீயாகப் பரவி வருகின்றன. மேலிடத்தில் இருந்து உட்கட்சித் தேர்தல் பார்வையாளராக சங்கரநாராயணன் என்பவர் சமீபத்தில் சென்னைக்கு வந்தார். வசூலித்த லட்சக்கணக்கான உறுப்பினர் கட்டணத்தை அவர் கையில் ஒப்படைக்க வேண்டுமென்பது டில்லி ஆணை. ஆனால் தமிழ்நாடு காங்கிரஸோ, பணத்தைத் தராமல் அவரைத் திருப்பி அனுப்பி விட்டதாம். இந்த விவகாரம் ஒருபுறம் இருக்க, திண்டிவனம் நகர காங்கிரஸுக்குச் சொந்தமான 60 சென்ட் நிலத்தை தனிப்பட்ட ஒருவர் தான் வைத்திருக்கும் டிரஸ்டின் பேருக்கு மாற்றிக்கொண்டு, அங்குள்ள கடைகளில் இருந்து கிடைக்கும் வாடகையை அனுபவித்து வருகிறாராம். "இப்படி சகல விதத்திலும் காசு பார்க்கும் தலைமை லஸ் அவின்யூவில் அமைத்திருக்கும்

# கூட்டம் கூட்டும் கனவுகள்!



அலுவலக வாடகையை (மாதம் 54000 ரூபாய்) மட்டும் பல மாதங்களாக பாக்கி வைத்திருக்கிறது" என்று கொட்டாவி விடுகிறார் காங்கிரஸ் தோழர் ஒருவர். ஆல் இந்தியா காங்கிரஸே ஆடிப் போயிருக்கும்போது தமிழக காங்கிரஸைக் கவனிக்க ஏது நேரம்?

● சென்னை அண்ணாசாலை ஸ்பென்சர் சந்திப்பில் இந்திராகாந்தி சிலை ஒன்று வைக்க ஏற்பாடாகி வருகிறது. தமிழ் மாநில காங்கிரஸ் வழக்கறிஞர் ஒருவர் இந்த ஏற்பாடுகளில் மும்முரமாக இருக்கிறார். வருகிற ஏப்ரல் மாதம் சோனியாவைக் கூப்பிட்டு சிலை திறப்பு விழாவில் பிரபலப்படுத்த மூப்பனார் முடிவு செய்திருப்பதாகச் சொல்கிறார்கள். அந்த சிலை திறப்பில் மூப்பனாரின் புதிய கூட்டாளியான 'தமிழக அம்மையாரும்' கலந்து கொள்ளக் கூடுமாம். அண்ணா சாலையில் எம்.ஜி.ஆர் சிலையை ராஜீவ் திறந்து வைத்தபோது வந்த மக்கள் கூட்டத்தை விடப் பல மடங்கு மக்கள் கூட்டத்தைத் திரட்ட இரு கட்சிகளிலுமே ஏற்பாடுகள் நடக்கின்றனவாம்.

— சஞ்சயன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

